

# "இது மெய்...

## ...நீங்களும் லக்ஸ் டாய்லட் சோப் உபயோகித்து அதிக அழகைப்பெறலாம்"

என்று கூறுகிறார் **சுசீலா**




நிச்சய பலனைத்தரும் ஒரு ஒழுங்கான அழகு பராமரிப்பு இதோ! சுசீலா கூறுவதாவது: "நான் லக்ஸ் டாய்லட் சோப்பின் நறுமணம் கொண்ட வெண்மையான நுரையை சருமத்தின் மேல் நன்றாகத் தேய்க்கிறேன். பிறகு கழுவி, மிருதுவான துண்டினால் துடைக்கிறேன். சருமம் புது அழகைப்பெறுகிறது."

# லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 367-X30 TM

கல்கி

# பொருளடக்கம்

மலர் 12 }
இதழ் 25 }

1953 ஜனவரி 18

நந்தன ௵
தை௴ 5௳

GREATEST ARTISTS




FINEST RECORDING

புதிய *The Hallmark of Quality* வெளியீடு!

N. 95051
புளிமூட்டை ராமசாமி &
எஸ். ஜலஜா
**பூர்ண கும்பம்**
புளிமூட்டை ராமசாமி & பார்ட்டி
**ஏறு செல்வம்**

★

N. 95052
சிதம்பரம் எஸ் ஜெயராம்
**மங்கியதோர் நிலவினிலே**
**கலை கோயில்**

★

N. 95053
கே. ஆர். வெங்கட்ராமன் &
ஆர். கமலா
**மாலையிலே**
**மலர் விழி மதுவால்**

★

N. 65095 to N. 65097
தமிழ்நாடு டாக்கீஸ்
புரொடக்ஷன்ஸ்
**"பெண் மனம்"**
பாட்டுகள்

★

N. 65111
ஜூபிடர் சந்த்ரா பிக்சர்ஸ்
**"ஜமீன்தார்"**
பாட்டுகள்

N. 65098 to N. 65101
கே. & கே. புரொடக்ஷன்ஸ்
**"பசியின் கொடுமை"**
பாட்டுகள்

★

N. 65102
சந்த்ரா பிக்சர்ஸ்
**"ஸ்ரீஜேவா"**
பாட்டுகள்

★

N. 65103
அசோகா பிக்சர்ஸ்
**"என் தங்கை"**
பாட்டுகள்

★

N. 65104 & N. 65105
ஜேசுவாக் புரொடக்ஷன்ஸ்
**"மாப்பிள்ளை"**
பாட்டுகள்

★

N. 65109 & N. 65110
ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி பிலிம்
கம்பெனி
**"ஏழை உழவன்"**
பாட்டுகள்

தி கிராமபோன் கம்பெனி லிமிடெட், கல்கத்தா, பம்பாய், மதராஸ், டில்லி

# "HIS MASTER'S VOICE"




மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார். | இதழ் 25

# பொங்கல் பொங்கியதா?

பொங்கியது! பொங்கியது! பொங்கல் பொங்கியது! பால் பொங்கியது! தேன் பொங்கியது! ஆறு பொங்கியது! ஏரி பொங்கியது! பண்ணை பொங்கியது! செந் நெல் பொங்கியது! செல்வம் பொங்கியது! சகல வளமும் பொங்கியது!

எழுத்திலே, பேனா முனையிலே, வாய் வார்த்தையிலே, கவிதையிலே, பாடலிலே பொங்கினால் போதுமா? நாட்டிலே வளம் பொங்க வேண்டாமா? வீட்டிலே பானையிலே பால் பொங்க வேண்டாமா?

பொங்க வேண்டியதுதான்! எல்லாவற்றுக்கும் அடிப்படையில் நம் உள்ளத்தில் ஊக்கம் பொங்க வேண்டும்; உற்சாகம் பொங்க வேண்டும். உள்ளத்தில் ஊக்கமும் உற்சாகமும் பொங்குமானால், நாட்டில் இன்றைக்கு வளம் பொங்காவிட்டால் நாளைக்குப் பொங்கும் என்று எதிர்பார்க்கலாம். நாளை பொங்காவிடில் அதற்கு மறு நாள் நிச்சயமாகப் பொங்கும் என்று உறுதியாக நம்பலாம்.

தெய்வ நம்பிக்கை உள்ளவர்கள் இதைக் கட்டாயம் நம்புவார்கள். பகவத் கீதையில் நம்பிக்கை கொண்டவர்களும் அவசியம் நம்புவார்கள். திருக்குறளில் நம்பிக்கை உடையவர்கள் நிச்சயம் நம்பியே தீருவார்கள். "ஊக்கம் உள்ளவர்களை ஆக்கம் தேடிச் சென்று அடையும்" என்பது திருவள்ளுவரின் திருவாக்கு அல்லவா?

தெய்வம், பகவத் கீதை, திருக்குறள் இவற்றிடம் நம்பிக்கையில்லாதவர்களிடம் ஒரு வேளை தன்னம்பிக்கை குடிகொண்டிருக்கலாம். அவர்களும் நாம் மேற்கூறியதை நம்பியே தீர வேண்டும்.

ஒன்றிலுமே நம்பிக்கை இல்லாதவர்களைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. அவர்களுக்கு ஒன்றுமே பொங்காது; எல்லாம் மங்கித்தான் போகும்.

* * * *

தமிழர்கள் மகிழ்ச்சி பொங்கக் கொண்டாடும் பண்டிகை பொங்கல் பண்டிகை. மழைக்கும் மாநிலத்தின் வளத்துக்கும் காரணமாயிருக்கும் சூரிய பகவானுக்குப் பொங்கல் வைத்துப் பூஜை போடும் பண்டிகை. செந்நெல், கதிரும் செங்கரும்புத் துண்டமும் தேன் கதலிப் பழமும் வைத்துப் படைக்கும் பண்டிகை. மாட்டுக்கும் பொங்கல் வைத்துப் பூஜை போடும் பண்டிகை. மொத்தத்தில் உழவுத் தொழிலையும் விவசாயத்தையும் வானளாவ உயர்த்தி மகிழ்ந்து கொண்டாடும் பண்டிகை. ஆகையால் மழை வளத்தையும் விவசாய வளத்தையும் பொறுத்தே பொங்கல் பண்டிகையை மக்கள் மகிழ்ச்சி பொங்கக் கொண்டாட முடியும்.

இந்த ஆண்டில் பொங்கல் பண்டிகைதமிழ் நாட்டில் அடியோடு மங்கிப் போய் விடுமோ என்ற பயம் ஐப்பசி கார்த்திகை மாதங்களில் ஏற்பட்டிருந்தது.

"......வங்காளக் குடாக் கடலில் சுழிக்காற்று உண்டாகி அதன் விளைவாக மழை பெய்தால்தான் தென்னாட்டுக்கு இனி இந்த வருஷத்தில் மழை என்று வைத்துக் கொள்ளலாம்......" என்று 1952 நவம்பர் மீ 23-ந் தேதி "கல்கி" இதழில் எழுதியிருந்தோம். அடுத்த வாரத்தில் அவ்வாறே வங்கக் கடலில் சுழிக் காற்றுத் தோன்றித் தமிழ் நாட்டின் பெரும் பகுதிக்கு மழை கொண்டு வந்ததைப் பற்றிப் பல நேயர்கள் கடிதங்களில் குறிப்பிட்டிருந்தார்கள். ஏதோ குருட்டாம் போக்காக அவ்வாறு நாம் எழுதி விடவில்லை. தமிழகத்தின் இரண்டாயிரம் வருஷத்துச் சரித்திரத்தை ஆதாரமாகக் கொண்டே எழுதினோம். தமிழ் நாட்டில் சேர்ந்தாற்போல் பல வருஷம் மழை பொய்த்து வறட்சி ஏற்படுவதும் உண்டு. அப்பர் — சம்பந்தர் காலத்தில் (அதாவது ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர்) அத்தகைய வறட்சி ஏற்பட்டதைக் குறித்துப் பின்வரும் பெரிய புராணப் பாடல் கூறுவதைக் கேளுங்கள் :—

மண்ணின்மிசை வான்பொய்த்து நதிகள் தப்பி
மன்னுயிர்கள் கண்சாம்பி உணவுமாறி
விண்ணவர்க்கும் சிறப்பில்வரும் பூசை ஆற்ற
மிக்க பெரும்பசி உலகில் விரவக்கண்டு
பண்ணமரும் மொழிஉமையாள் முலையின்ஞானப்
பாலறுவாயருடன் அரசும் பாரின்மேல்
''கண்ணுதலான் திருநீற்றுச் சார்பினோர்க்கும்
கவலைவருமோ!'' என்று கருத்திற்கொண்டார்.

*(பாலறுவாயர்: ஞானசம்பந்தர்; அரசு: திருநாவுக்கரசர்)*

சில சமயம் வான் பொய்த்து மழையில்லாமற் போனது போலவே, வேறு சில சமயம் கழிக் காற்று அடித்துக் கடல் பொங்கி வந்து பெரு மழை பெய்து தமிழ் நாட்டை வெள்ளக்காடாக அடித்ததும் உண்டு. பிரிட்டிஷ் ஆட்சி ஏற்பட்ட பின்னர் இத்தகைய கழிக்காற்று இருபது தடவை சோழ மண்டலக் கரையில் அடித்திருக்கிறது. சென்ற முப்பது ஆண்டுகளுக்குள்ளே ஐந்து முறை அடித்திருக்கிறது. கழிக் காற்றைத் தொடர்ந்து பெருமழை பெய்வதும் தமிழகத்தின் சரித்திரத்தில் பலமுறை நிகழ்ந்திருக்கும் சம்பவந்தான்.

இயற்கை நியதியால் இவ்வாண்டிலும் கார்த்திகை மாதக் கடைசியில் கழிக்காற்று அடித்தது. காற்று அடித்த பகுதியில் ஜனங்கள் சொல்லொணாத கஷ்ட நஷ்டங்களுக்கு உள்ளாயினர். ஆனால் அதன் பயனாக ஏழு ஜில்லாக்களில் பரவலாகப் பெருமழை பெய்தது. தஞ்சை—திருச்சி ஜில்லாக்களில் நெற்பயிர் பிழைத்தது. தொண்டை மண்டலம் முழுதும் ஏரி, குளங்கள் நிரம்பின. அடித்த கழிக் காற்றுக் கொஞ்சம் பாண்டிய நாட்டின் பக்கமும் திரும்பியிருந்தால் எவ்வளவோ நன்றாயிருந்திருக்கும். அவ்விதம் திரும்பாத காரணத்தினால் 'திருநெல்வேலி' என்று பெயர்பெற்ற ஜில்லா இன்று பஞ்சப் பிரதேசமாகி யிருக்கிறது.

ஆயினும், தமிழ் மக்கள் எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையிலும் சிரித்து மகிழ்ந்து சந்தோஷமா யிருக்கும் இயல்பு படைத்தவர்கள். ''இடுக்கண் வருங்கால் நகுக!'' என்ற வள்ளுவர் வாக்கைக் காரியத்தில் கடைப்பிடித்து நடப்பவர்கள். ஆகையால் பஞ்சப் பிரதேசங்களிலும், பஞ்சம் நீங்கிய பிரதேசங்களிலும், புயலால் பரிதவிப்புக்கு உள்ளான பிரதேசங்களிலும் தமிழர்கள் பொங்கல் பண்டிகை கொண்டாடி யிருப்பார்கள்.

இந்த வருஷத்துப் பொங்கல் பண்டிகையைத் தமிழ் மக்கள் உற்சாகமாகக் கொண்டாடுவதற்கு ஒரு விசேஷ காரணமும் உண்டு. இந்த வருஷத்துப் பொங்கல் விவசாய விடுதலைப் பொங்கல்; கண்ட்ரோல் தொல்லைகள் நீங்கிய பொங்கல்.

விளைச்சல் எப்படி யிருந்தாலும், விலைவாசி எப்படி யிருந்தாலும், எந்தச் சட்டத்துக்கும் விதிக்கும் விரோதமாக நடக்கிறோமோ என்ற பீதி இல்லாமல் தமிழ் மக்கள் இவ் வருஷம் பொங்கல் பண்டிகையைக் கொண்டாடினார்கள்.

உணவுக் கண்ட்ரோல் எடுத்த சில நாளைக் கெல்லாம் சில ஆத்திரக்காரர்களும் அவசரப் பிச்சுக்களும் கூக்குரல் போடத் தொடங்கினார்கள். ''அரிசி விலை விஷம்போல ஏறுகிறது'' ''நெல்லின் விலை டைபாய்டு சுரத்தைப்போல் ஏறுகிறது'' என்றெல்லாம் அலறினார்கள். ''கூழுக்கும் ஆசை; மீசைக்கும் ஆசை'' என்னும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்கள் இவர்கள். உணவுக் கண்ட்ரோலை எடுத்தால் உணவு தானியங்களின் விலை ஓரளவு ஏறுவதும் இறங்குவதும் இயற்கையாக ஏற்படக் கூடியவை என்பதை மறந்து விட்டார்கள். 1942-ம் வருஷத்துக்கு முன்னால் முப்பது வருஷத்து விலைவாசி நிலவரங்களை ஆராய்ந்து பார்த்தால், ஆவணி மாதம் தொடங்கி மார்கழி மாதம் பாதி வரையில் நெல் விலை கூடியே விற்றது என்பது தெரிய வரும். விவசாயிகள் ஆடி மாதத்துக்குள் விற்கக் கூடிய நெல்லை யெல்லாம் விற்று விடுகிறார்கள். அதற்குப் பிறகு அவசியமாகத் தேவைப்பட்டு வாங்குகிறவர்களுக்கு விவசாயிகள் தங்கள் சொந்த உபயோகத்துக்காக வைத்திருப்பதில் ஒரு பகுதியை விற்பார்கள். அதற்கு அதிக விலை கேட்பதும் கொடுப்பதும் வழக்கமாக நடப்பதுதான். இந்த வருஷத்திலும் அவ் வழக்கப்படி நடந்ததைச் சிலர் பிரமாதப்படுத்தி விட்டார்கள்.

மழை கொஞ்சம் சுமாராகப் பெய்து அறுவடைக்காலம் நெருங்கியதும் நெல் விலை இறங்கத் தொடங்கி விட்டது. சென்னை நகரில் அரிசி விலை விழுந்து விட்டது. ஆயிரக்கணக்கான மூட்டைகள் மார்க்கெட்டில் தேக்கமா யிருக்கின்றன.

பஞ்சப் பிரதேசமான வடாற்காடு ஜில்லாவில் ஆரணி மார்க்கெட்டில் நெல் விலை இறங்கி விட்டது. கோயமுத்தூர் ஜில்லாவில் பொள்ளாச்சி மார்க்கெட்டில் நெல் விலை குறைந்து விட்டது. தஞ்சை ஜில்லாவில் குறைந்து விட்டதைப்பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. நெல் அறுவடையாக ஆக, இனியும் விலை குறைந்து வரும்.

ரொம்ப அதிகமாக நெல்விலை குறைந்து விடாம லிருக்க வேண்டுமே என்று விவசாயிகளின் சார்பாக நாம் பிரார்த்திக்க வேண்டும். ஏனெனில் நெல்லுக்கும் மற்ற தானியங்களுக்கும் சுமாரான நல்ல விலை கிடைத்தால்தான் விவசாயிகள் உற்சாகமாக விவசாயத்தில் ஈடுபட முடியும்; அப்போதுதான் உணவு தானியங்களை அதிகமாக உற்பத்தி செய்வதில் சிரத்தை கொள்வார்கள்.

பட்டணங்களில் வாழ்வோர் குறுகிய சுயநலங் காரணமாக நெல் முதலிய தானியங்களின் விலை அடியோடு குறைந்துவிட வேண்டுமென்று ஆசைப் படலாம். இன்றைக்கு அவர்கள் ஆசை நிறைவேறினால், நாளைக்கு மறுபடியும் உணவு உற்பத்தி குறையத் தொடங்கும். பழையபடி ரேஷன், கறுப்பு மார்க்கெட் முதலிய பெருந் தொல்லைகளின் வட்டம் ஆரம்பமாகி விடும்.

ஆகையால் இந்தப் பொங்கல் பெரு நாளில், எல்லாவற்றிலும் முதன்மையாக விவசாயிகளின் உள்ளத்தில் உற்சாகம் பொங்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்வோமாக. அதன் பயனாக, நாட்டிலே வளம் பொங்கும் என்றும் வீட்டிலே பால் பொங்கும் என்றும் நம்புவோமாக.

## "உணவு மந்திரிகள் ஒழிக!"

புது டில்லியில் சென்ற வாரத்தில் உணவு மந்திரிகளின் மகாநாடு நடைபெற்றது. அதன் முடிவில் ''உணவு மந்திரிகள் ஒழிக!'' என்ற கோஷம் எழுந்ததாக ஒரு வதந்தி பரவி யிருக்கிறது. அந்த கோஷத்தைக் கிளப்பியவர்கள் உணவு மந்திரிகள் என்றும் கேள்வி. இதன் உண்மையைப் பற்றி நாம் ஒன்றும் சொல்வதற்கில்லை. ஆனால் உணவு மந்திரிகள் தனித்தனியாகவோ மகாநாடு கூடியோ,

# விஷமம் பலிக்கவில்லை!



சென்னை போலீஸ்காரர்கள் சம்பளம் வாங்காமல் இருந்த தகராறு தீர்ந்து இப்போது சகஜ மான நிலைமை ஏற்பட்டு விட்டதாகப் போலீஸ் அதிகாரிகள் தெரிவித்திருக்கிறார்கள்.

---

பிரயத்தனம் செய்வதன் பலனாக, உணவு மந்திரிகள் ஒழியும்படியான காலம் விரைவில் வருமானால், அதுவே உணவு மந்திரிகளுக்கு மாபெரும் வெற்றி என்று சொல்லலாம். உணவுப் பற்றாக் குறைப் பிரச்னை தீர்ந்து விட்டால், . உணவு மந்திரிகளும் தேவை இல்லைதானே! அந்தப் பிரச்னையைத் தீர்க்க முயல்வதே உணவு மந்திரிகளின் முதன்மையான கடமை அல்லவா!

ஜனுப் கித்வாய் மட்டும் "ராஜிநாமா செய்வேன்" என்று பயமுறுத்தாமல் இன்னும் சில வருஷ காலம் மத்திய சர்க்காரில் உணவு மந்திரி பதவி வகித்து வந்தால், நிச்சயமாக நாட்டில் அத்தகைய நிலைமை ஏற்படும். அதாவது உணவு மந்திரி பதவியே அவசியமில்லாமற் போய்விடும்.

தற்சமயம் ஜவாஹர்லாலின் மந்திரி சபையில் தீரர்களான இரு மந்திரிகள் இருக்கிறார்கள். அவர்கள் அழுத்தமான கெட்டிக்காரர்கள். நல்ல காரியத்தைப் பிடிவாதமாகச் செய்யக் கூடியவர்கள். அவர்களில் ஒருவர் உணவு மந்திரி கித்வாய்; இன்னொருவர் வானொலி மந்திரி கேஸ்கர்.

கித்வாய் சாலிபு பிரஜா கட்சிக்குப் போய் விடுவதாகப் பயமுறுத்திக்கொண் டிருந்தபோது ஜவாஹர்லால் நேரு அவரை ரொம்பத் தாஜா பண்ணியதை நாம் விரும்பவில்லை. எதற்காக இவ்வளவு தூரம் ஒருவருடைய தாவாக் கட்டையைப் பிடிக்க வேண்டும் என்று கருதினோம். நேரு செய்தது சரிதான் என்று இப்போது நிச்சயமாகிறது. இதுவரையில் மத்திய சர்க்காரில் உணவு மந்திரி வேலை பார்த்தவர்களில் ஜனுப் கித்வாய் ஒருவர்தான் வெற்றி பெற்றவர் என்று சொல்லலாம். இதோ அவருடைய நிர்வாகத்தின் பயனாக வெளி நாட்டிலிருந்து உணவு இறக்குமதியைப் படிக்குப் பாதியாகக் குறைக்க முடிந்திருக்கிறது. வெற்றிக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்!

இந்த வெற்றியை அவர் கண்டதின் காரணம், நமது உணவுப் பிரச்னையில் இருந்த முக்கியமான பலவீனத்தை ஆராய்ந்து, அறிந்ததுதான். "வெளி நாடுகளிலிருந்து உணவு இறக்குமதியைக் குறைக்க வேண்டியது அவசியம்" என்று சொல்லிக் கொண்டே சென்ற வருஷம் வரையில் இறக்குமதியை அதிகப்படுத்தி வந்தார்கள். ஏனெனில், இறக்குமதியைக் குறைப்பதற்கு என்ன செய்ய வேண்டும் என்பதை முன்னிருந்தவர்கள் உணரவில்லை. வெளிநாட்டு இறக்குமதியைக் குறைக்க வேண்டுமானால், உள் நாட்டு உற்பத்தி அதிகமாக வேண்டும். உள்நாட்டில் உணவு உற்பத்தி பெருக வேண்டுமானால் விவசாயிகளுக்கு உற்சாகம் ஊட்ட வேண்டும். விவசாயிகளின் தலையிலே உட்கார்ந்து அவர்களை உபத்திரவப்படுத்திக் கொண்டு வேறு என்னதான் பிரயத்தனம் செய்தாலும் உணவு உற்பத்தி பெருகாது.

இதை ஜனுப் கித்வாய் எப்படி உணர்ந்தாரோ, தெரியாது. உணர்ந்து கொண்டார். ஆகையால் ராஜாஜி சென்னை மாகாணத்தில் உணவுக் கண்ட்ரோல்களைத் தளர்த்தியபோது ராஜாஜியின் கைகளுக்குப் பலத்தை அளித்தார். சென்னையைப் பின்பற்றி மற்ற மாகாணங்களும் உணவுக் கண்ட்ரோல்களைத் தளர்த்துவதற்கு ஊக்கம் அளித்தார். அதன் பயனாக நாடெங்கும் விவசாயிகள் "அப்பாடா!" என்று பெருமூச்சு விட்டு, ஊக்கத்துடன் விவசாயத்தில் ஈடுபட்டனர். நாடெங்கும் உணவு உற்பத்தி பெருகியது. சர்க்காரின் தானியக் கையிருப்பு அதிகமாகி வந்தது. பருவ மழை அநியாயமாக மோசம் செய்துவிட்ட சென்னையிலேகூட உணவு நெருக்கடி ஏற்பட்டு விடவில்லை.

மற்ற மாகாணங்களில் உணவு நிலைமை மிகவும் சாதகமாகி விலைகளும் குறையலாயின.

சென்ற வாரத்தில் புது டில்லியில் கூடிய உணவு மந்திரிகளின் மகாநாட்டில் எந்த மாகாண உணவு மந்திரியும் உணவுக் கண்ட்ரோல் விதிகளைத் தளர்த்துவது பிசகு என்று சொல்லவில்லை. அதனால் நன்மை விளைந்ததாகவே சொன்னார்கள். புள்ளிக் கணக்குகளை யெல்லாம் பார்த்த பிறகு, வெளி நாட்டு இறக்குமதியை ரொம்பவும் குறைத்து விடலாம் என்றும் தீர்மானித்தார்கள்.

மத்திய சர்க்காருக்கு ஒரு திறமையான உணவு மந்திரி கிடைத்திருப்பதுபோல் சென்னை மாகாணத்துக்கு ஒரு நல்ல உணவு மந்திரி கிடைத்திருப்பது நம் அதிர்ஷ்டந்தான். ஸ்ரீ ஸி. சுப்பிரமணியமும் உறுதி படைத்த மனிதர். சரியான காரியத்தைத் திடங்கொண்டு நடத்தக் கூடியவர். புது டில்லி உணவு மந்திரிகள் மகாநாட்டில் அவர் இம் மாகாணத்துக்கு நல்ல பெயர் வாங்கிக் கொடுத்தார். மற்ற மாகாணங்களின் உணவு மந்திரிகள் தங்கள் தேவைகளை மிகைப்படுத்திக் கூறிவிட்டு, ஜவாஹர்லாலிடமும் கித்வாயிடமும் 'டோஸ்' வாங்கிக் கொண்டார்கள். ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் தேவையின் அளவுக்கு மட்டும் கேட்டபடியால், கேட்டதைக் குறைக்காமல் கொடுக்க ஒப்புக் கொண்டார்கள். இரண்டரை லட்சம் டன் அரிசி வருகிற வருஷத்துக்குச் சென்னைக்குக் கிடைக்கும். இப்படிக் கிடைக்கும் அரிசியை இம்மாகாணத்தில் தேவைப்படும் இடங்களுக்கு மட்டும் அனுப்பிச் சரியாக விநியோகித்தால், வரும் வருஷத்தில் அரிசிப் பஞ்சமே ஏற்படுவதற்கு நியாயமில்லை. பர்மா அரிசியும் வந்து விட்டால் விலைகள் மேலும் குறைந்து வியாபார மந்தமே ஏற்பட்டாலும் ஏற்பட்டு விடும். அப்புறம் உணவு இலாகாவையே ஒருமாதிரியாகக் 'கடையைக் கட்டு' என்று சொல்ல வேண்டியது தானே!

மொத்தத்தில் "உணவு மந்திரிகள் ஒழிக!" என்னும் கோஷம் நிறைவேறுவதை இலட்சியமாகக் கொண்டு உணவு மந்திரிகள் தங்கள் கடமையை ஆற்றுவார்கள் என்று நம்புகிறோம்.

# ரேடியோவின் இலட்சியம் என்ன?

மத்திய சர்க்காரின் மற்றொரு அழுத்தமான கெட்டிக்கார மந்திரி என்று வானொலி இலாகா மந்திரி ஸ்ரீ கேஸ்கரைக் குறிப்பிட்டோம். முன்னே இந்தப் பதவி வகித்தவர்கள் அனைவரும் வாய்ப் பேச்சினால் மட்டும் "ரேடியோ நிகழ்ச்சிகளின் தரத்தை உயர்த்தப் போகிறோம்" என்று சொல்லிக் கொண்டிருந்து விட்டுப் போய் விட்டார்கள். ரேடியோ நிகழ்ச்சிகளின் தரம் இறங்கிப் போய்க் கொண்டிருந்தது.

ஸ்ரீ கேஸ்கர் வானொலி மந்திரியாக வந்த பிறகு உண்மையாக ரேடியோ நிகழ்ச்சிகளின் தரத்தை உயர்த்த நடவடிக்கைகள் எடுத்திருக்கிறார். சென்ற வாரத்தில் இவர் அகில இந்திய ரேடியோ நிலையங்களின் இலட்சியம் என்ன என்பதைப் பற்றிக் கூறினார். "ரேடியோ நிலைய நிகழ்ச்சிகளைப் பற்றி ஆலோசனை செய்வதற்காகச் சிறந்த அறிஞர்கள் அடங்கிய ஒரு போர்டை ஏற்படுத்தினோம். அந்த போர்டார் தீர்க்காலோசனை செய்து ரேடியோ நிலையங்களின் இலட்சியம் என்னவாயிருக்க வேண்டும் என்பதை நிர்ணயித்திருக்கிறார்கள். அர்கப் பிச்கத் தமாஷா நிகழ்ச்சிகளை ஒலி பரப்புவதற்காக ரேடியோ நிலையங்களை உபயோகப் படுத்தக் கூடாது என்றும், சமூகத்தை உயர்த்தி மேன்மையுறச் செய்வதற்குரிய நிகழ்ச்சிகளை ஒலி பரப்புவதே அகில இந்திய ரேடியோ நிலையங்களின் இலட்சியமாயிருக்க வேண்டும் என்றும் வரையறுத்திருக்கிறார்கள். இந்த இலட்சியத்தைக் கண்டிப்பாகக் கடைப்பிடிக்கப் போகிறோம்" என்றார் கேஸ்கர்.

அதைக் கண்டிப்பாகக் கடைப் பிடிப்பதற்கு ஸ்ரீ கேஸ்கர் உறுதி கொண்ட உள்ளத்தினராயிருக்க வேண்டும். கொஞ்சமாவது 'வழவழா குழகுழா' அம்சம் அவருடைய நெஞ்சத்தில் இருந்தால் மேற்படி கொள்கையைக் கடைப் பிடிப்பது அசாத்தியமாய்ப் போய் விடும்.

ஏனெனில், வானொலி நிலையங்களை உயர்தர நிகழ்ச்சி ஸ்தாபனங்களாக வைத்திருப்பதற்குப் பல இடங்களிலிருந்தும் தீவிர எதிர்ப்புக் கிளம்பும். சில சமயம் நாம் சற்றும் எதிர்பாராத இடங்களிலிருந்தும் அந்த எதிர்ப்பு உதயமாகும்.

உதாரணமாக, இந்த ஆண்டின் ஆரம்பத்தில் கனம் பதஞ்சலி சாஸ்திரியார் வெளியிட்ட அபிப்பிராயத்தைக் குறிப்பிடலாம்.

கனம் பதஞ்சலி சாஸ்திரியார். அவர்கள் இந்திய தேசத்து ஸுப்ரீம் கோர்ட்டில் பிரதம நீதிபதி. நியாயம் கோரி வருகிற வழக்குகளில் அவருடைய தீர்ப்புக்குமேலே அப்பீல் கிடையாது.

நல்ல வேளையாக அவருடைய அபிப்பிராயத்தின் அதிகாரம் நீதி சம்பந்தமான காரியங்களோடு நிற்கிறதே என்று சந்தோஷப்படுகிறோம். சங்கீதம் முதலிய கலைத் துறைகளில் அவருடைய கருத்தை நாம் ஒப்புக் கொண்டுதான் தீர வேண்டும் என்பதில்லை. மாறுபட்ட அபிப்பிராயமும் கொள்ளலாம்; அவருடைய தீர்ப்புக்கு மேலே ரஸிகர்களின் கோர்ட்டில் அப்பீலும் செய்யலாம்.

சென்னையில் கோகலே மண்டபத்தில் நடந்த இசை விழாவிலும் ஒரு பட்டமளிப்பு நிகழ்ச்சி நடந்தது. அதற்குத் தலைமை வகித்துப் பேசிய கனம் பதஞ்சலி சாஸ்திரியார் "பழைய சங்கீத பாணிகளையே கட்டிக்கொண்டு அழுவதில் பயனில்லை; புதிய சங்கீத வடிவங்களைச் சிருஷ்டிக்க வேண்டும்" என்று கூறினார். அத்துடன் நிற்கவில்லை. "அகில இந்திய ரேடியோவில் உயர்தர சங்கீதத்தையே ஒலிபரப்ப வேண்டும் என்று சிலர் சொல்லுகிறார்கள். இது சரியல்ல. ரேடியோ நிலையங்கள் பாமர ஜனங்களையும் கவனிக்க வேண்டும். ரேடியோ நிகழ்ச்சிகளைக் கேட்பவர்கள் அதற்காகப் பணம் கொடுக்கிறார்கள் அல்லவா! பணம் கொடுக்கிறவர்கள் எம்மாதிரி பாட்டுகளைக் கோருகிறார்களோ, அவற்றை ரேடியோ நிலையங்கள் ஒலிபரப்ப வேண்டியது தானே!" என்றார்.

விஞ்ஞானம், விவசாயம், வீடு கட்டுதல், சாலை போடுதல் முதலிய துறைகளில் புதுமை முறைகளைக் கையாளுவது அவசியந்தான். ஆனால் கலைத் துறைகளிலே பழமைக்குத்தான் பெருமை அதிகம். பழைய சித்திரங்கள், பழைய சிற்பங்கள், பழைய சங்கீத பாணிகள், பழைய பரதநாட்டிய பாணிகள் —இவைதான் மதிப்புக் குரியன. இந்தப் பழைய கலைப் பாணிகளை அநுசரித்து வரும் புதிய வடிவங்களும் மதிப்புப் பெறுகின்றன. பழைய வழியை

விட்டு அடியோடு விலகிய புதிய கலை வடிவங்கள் பெரும்பாலும் கலைக் கொலையாகவே இருக்கும். அவற்றை மேலோர் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். இது போகட்டும்.

சர்க்கார் பொறுப்பில் நடத்தப்படும் எந்த ஸ்தாபனத்திலும் பணம் கொடுப்பவர்களின் கோரிக்கைகளையெல்லாம் நிறைவேற்ற வேண்டுமென்று வைத்துக்கொள்ள முடியாது. பொது மக்களின் உடல் சுகத்தையும் அறிவு வலத்தையும் வளர்க்க வேண்டிய பொறுப்பு சர்க்காருக்கு இருப்பதுபோல் கலைச் சுவையை மேன்மைப் படுத்த வேண்டிய பொறுப்பும் சர்க்காருக்கு உண்டு.

ஜனங்கள் கொடுக்கும் பணத்தினுலேதான் கோர்ட்டுகள் நடக்கின்றன. "உங்கள் மெத்தப் படித்த சட்ட நிபுணரான பதஞ்சலி சாஸ்திரியாரை நீதிபதி பதவியிலிருந்து நீக்கி விடுங்கள்; எங்கள் ஊர் குதர்க்கவாத பயங்கராச்சாரியாரை நீதிபதியாக்குங்கள்" என்று ஜனங்கள் சொன்னுல், அரசாங்கத்தார் அவ்விதம் செய்ய முடியுமா!

இம்மாதிரியே கலாசாலைகளில் பேராசிரியர்களாகவும் பிரின்ஸிபால்களாகவும் நாங்கள் சொல்லும் நிரட்சர குட்சிகளைப் போடுங்கள் என்று ஜனங்கள் சொன்னுல், பொது ஜனங்கள் தானே பணம் கொடுக்கிறுர்கள் என்பதற்காகச் சர்க்கார் அவ்விதம் செய்ய முடியுமா!

ரேடியோவையே எடுத்துக் கொள்ளுங்கள். சங்கீதத்துக்குச் சொல்லுகிறதைப் பிரசங்கங்களுக்கும் சொல்ல முடியுமா! "மேதாவி நிபுணர்களின் அர்த்தம் விளங்காத பேச்சுக்கள் இங்கே யாருக்கு வேணும்! எங்கள் ஊர் காந்திசந்தியில் தினம் சக்கைப் போடு போடும் இடி முழக்கக் கானமேகப் பிரசங்கியைக் கொண்டு ரேடியோவில் பேசச் செய்யுங்கள்!" என்று பாமர ஜனங்கள் கேட்டால், கனம் பதஞ்சலி சாஸ்திரியார் ஒப்புக் கொள்வாரா!

பாமர ஜனங்களின் தலையில் பழியைப் போடுகிறவர்கள் இன்னொரு தவறும் செய்கிறுர்கள். ஜனரஞ்சகமான சங்கீதத்துக்கும் மட்டரகமான டப்பா பாட்டுக்கும் வேற்றுமை தெரியாமல் இரண்டையும் சேர்த்துக் குழப்பிக் கொண்டு சங்கடப்படுகிறுர்கள். இதை "ஹிந்து" பத்திரிகையின் உதவி ஆசிரியர் ஸ்ரீ என். ரகுநாதய்யர் சென்ற வாரத்தில் மயிலாப்பூரில் நடந்த தியாகராஜர் விழாவில் நன்முக எடுத்து விளக்கிக் காட்டினுர்.

சாஸ்திரீயமான உயர்தர சங்கீதத்தோடு சேர்த்து ஜனரஞ்சகமான சங்கீதத்தையும் ஓரளவு தருவது நியாயமாகும். நம் நாட்டில் எப்போதும் இது வழக்கத்தில் இருந்து வருகிறது. ஜாவளிகள், தில்லானுக்கள் முதலியவை இதற்காகவே ஏற்பட்டன. இவற்றை நம் மகா வித்வான்கள் அளவறிந்து கையாண்டு வந்திருக்கிறுர்கள். ரேடியோ நிலையத்தாரும் இம்மாதிரி ஜனரஞ்சகமான சங்கீதத்தை ஒலி பரப்புவதை யாரும் ஆட்சேபிக்க மாட்டார்கள். ஆனுல் 'ஜன ரஞ்சகம்' என்ற பெயரால் சங்கீதக் கலையையே கொலை செய்யும் மட்டமான டப்பாப் பாட்டுக்களை ஒலி பரப்புவதைத்தான் ரஸிகர்கள் ஆட்சேபிக்கிறுர்கள். இதை ஸ்ரீ ரகுநாதய்யர் விளக்கிக் காட்டினுர்.

இந்த வேற்றுமையை ஸ்ரீ கேஸ்கரும் அறிந்திருப்பதாக அவருடைய பேச்சிலிருந்து வெளியாகிறது. மட்டரக மல்லாத ஜனரஞ்சகமான சங்கீதத்தையும் ரேடியோ நிலையங்கள் ஒலி பரப்ப விசேஷ முயற்சி எடுக்கும் என்று அவர் கூறியுள்ளார்.

ஸ்ரீ கேஸ்கரின் உறுதி நிலைத்திருக்க வேண்டும் என்றுதான் நாம் விரும்பக் கூடும்.

# வானெலியில் காவடிச் சிந்து

சென்ற ஆண்டின் பிற்பகுதியில் பொதுவாக வானெலி நிகழ்ச்சிகளின் தரம் உயர்ந்து வருவதைக் குறித்து நம் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டோம்.

மட்டரகமான டப்பா சங்கீதத்தை வெகுவாகக் குறைத்திருப்பதனுல், ரேடியோ நிலைய நிர்வாகிகள் ஜனரஞ்சகமான வேறு சங்கீதத் துறைகளை ஆராயத் தொடங்கி யிருக்கிறுர்கள். சென்ற 1953-ம் ஆண்டின் இறுதியில் சில தினங்கள் காவடிச் சிந்துப் பாடல்களை ஒலிப்பதிவு செய்து ஒலி பரப்பினுர்கள்.

தமிழின் இனிமையிலும் சரி, இசையின் சுவையிலும் சரி, காவடிச் சிந்துக்கு இணை ஏது!

"அன்னத்தாமரையைக் கண்டு
மதுர ராகம் பாடிக் கொண்டு"

என்பவை போன்ற வரிகளை இனிய இசையில் அமைத்துப் பாடினுல் செவி படைத்த தமிழன் எவன்தான் புளகாங்கிதம் அடையாமல் இருக்க முடியும்! ஜனரஞ்சகமான சங்கீதம் என்று இதைச் சொல்லா விட்டால் வேறு எதைச் சொல்ல முடியும்!

சங்கீத வித்வான் குன்னக்குடி வெங்கட்ராமய்யர் அவர்களைக் கொண்டு சில காவடிச் சிந்துப் பாடல்களை ஒலிப்பதிவு செய்து வைத்திருந்து, பதினைந்து பதினைந்து நிமிஷம் விதம், சென்னை வானெலி நிலையத்தார் ஒலி பரப்பினுர்கள். குன்னக்குடி வெங்கட்ராமய்யர் பெரிய சங்கீத பரம்பரையில் வந்த கர்நாடக சங்கீத வித்வான். அத்துடன் நாட்டுப் பாடல்களில் அவர் விசேஷ கவனம் செலுத்தி வந்திருக்கிறுர். காவடிச் சிந்துப் பாடல்கள் சிலவற்றைச் சங்கீதச் சிறப்பும் சாஹித்யச் சிறப்பும் விளங்கும்படி அருமையாகப் பாடியிருந்தார். டிசம்பர் மாத இசை நிகழ்ச்சிகள் சம்பந்தமாக ரேடியோப் பெட்டியின் அடியில் அடிக்கடி உட்கார நேர்ந்தபோது ஒருநாள் தற்செயலாக மேற்படி காவடிச் சிந்துப் பாடல்களைக் கேட்க நேர்ந்தது. ஒலிப்பதிவு செய்திருக்கும் மேற்படி காவடிச் சிந்துப் பாடல்களை இன்னொரு தடவையும் சென்னை வானெலி நிலையத்தார் ஒலி பரப்பக் கோருகிறோம். முன்னம் கேட்காதவர்களும் கேட்டு அநுபவிக்க வசதியாக இருக்கும்.

இம்மாதிரியான ஜனரஞ்சக சங்கீதத்தை ஒலி பரப்புவதை 'வைதிக' சங்கீத ரஸிகர்கள் கூட ஆட்சேபிக்க மாட்டார்கள். காவடிச் சிந்து போன்ற பழைய நாட்டுப் பாடல்களையும் ரேடியோவில் ஒலி பரப்பலாம். இன்னும் ரேடியோ நிலைய வித்வான்கள் சங்கீதத்தின் தரம் குறைாத புதிய ஜனரஞ்சக சங்கீதத் துறைகளிலும் பரிசோதனை செய்து பார்க்கலாம்.

ஆனுல் பொது ஜனங்களின் தலையில் பழியைப் போட்டுவிட்டு, மெக்ஸிகோ — தமாஷாய் பேய்க் கூத்துக்களுக்குரிய கேவலமான மேளுட்டுப் பின்னணியுடன் கூடிய மட்டரகமான டப்பா சங்கீதத்தை அகில இந்திய ரேடியோ ஒலி பரப்புவது பெருங் குற்றமாகும். இந்தியாவின் ஒப்பற்ற சங்கீதக் கலைகளுக்குக் குழி தோண்டுவதாகும்.

# பஞ்ச நிவாரணத் தொண்டு

திருநெல்வேலி ஜில்லாவில் பல இடங்களில் கொடுமையான பஞ்ச நிலைமை பரவியிருப்பதாக மந்திரி சங்கர ரெட்டியார் நேரில் போய்ப் பார்த்து விட்டு வந்து சொல்லியிருக்கிறார். சர்க்கார் ஆதரவில் பஞ்ச நிவாரணத் தொண்டு செய்ய ஏற்பாடு செய்யப்படும் என்றும் கூறியிருக்கிறார்.

ஆனால் சர்க்கார் நடவடிக்கைகளை மட்டும் நம்பியிராமல் தனிப்பட்ட தனவான்களும் ஸ்தாபனங்களும் பஞ்ச நிவாரணத்தில் ஈடுபட வேண்டும். இதைப் போன்ற புண்ணியமும் புருஷார்த்தமும் வேறு ஒன்றுமில்லை.

அப்பர்—சம்பந்தர் காலத்திலும் வான மழை பொய்த்துப் பஞ்சம் பரவிய வரலாற்றை மேலே தலையங்கத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். அந்த நாளிலும் பல்லவ சக்கரவர்த்திகளும் பாண்டிய மன்னர்களும் அரசு புரிந்து வந்தார்கள். பஞ்ச நிவாரண வேலையை அரசர்களே செய்யட்டும் என்று அப்பரும் சம்பந்தரும் சும்மா இருந்து விடவில்லை. தாங்களும் பஞ்சத்தில் அடிபட்ட மக்களுக்கு அன்னதானம் செய்யும் பணியில் ஈடுபட்டார்கள். இரண்டு மகான்களின் மடங்களிலும் பசித்து வந்தவர்களுக்கு உணவு அளிக்கப்பட்டது.

அதற்கு வேண்டிய பொருளை அன்றாடம் சிவபெருமான் இருவருக்கும் வழங்கியதாக வரலாறு கூறுகிறது. திருவீழிமிழலை ஆலயத்தின் படிகளில் தினந்தோறும் இறைவன் காசு வைத்து வந்தாராம். அதை அப்பரும் சம்பந்தரும் எடுத்து வந்து உணவுப் பொருள்கள் வாங்கி அன்னதானம் செய்தார்களாம்.

அப்பரும் சம்பந்தரும் செய்த புண்ணிய கைங்கரியத்தை இந்த நாளிலும் செய்யலாம் என்று அன்னதான சிவன் சங்கத்தார் நிரூபித்திருக்கிறார்கள். அக்டோபர் 19 உ இச்சங்கத்தார் வடாற்காடு ஜில்லா செங்காடு கிராமத்தில் பஞ்ச நிவாரணத் தொண்டு தொடங்கினார்கள். அன்று முதல் டிசம்பர் 31 உ முடிய, 74 தினங்களில் செங்காடு – நரசிங்கபுரம், கொளத்தேரி – நகரக்குப்பம் கிராமங்களைச் சேர்ந்த ஆண்கள் 19,269 பேர், தாய்மார்கள் 21,019 பேர், சிறுவர் சிறுமியர் 39,619 பேர்களுக்குக் கஞ்சி அளித்திருக்கிறார்கள். அதாவது சராசரியில் தினம் 1064 பேருக்குக் கஞ்சி அளித்திருக்கிறார்கள். சில விசேஷ நாட்களில் அரிசிச் சோறும் அளிக்கப்பட்டது. தவிர, இரண்டு வயதுக்குட்பட்ட குழந்தைகள் 167 பேருக்குத் தினந்தோறும் பால் வழங்கப்பட்டது. 13,700 வைடமின் மாத்திரைகள் வினியோகிக்கப்பட்டன. உடுக்கத் துணி இல்லாமையால் வெளியில் வரவும் முடியாமலிருந்த ஏழை எளியவர்கள் 1673 பேருக்கு ஆடைகள் வழங்கப்பட்டன.

இவ்வளவு மகத்தான தொண்டுக்கு ரூ. 4113-0-5 வசூல் செய்து, அதில் ரூ. 3218-2-6 செலவிட்டிருக்கிறார்கள். அதாவது தினந்தோறும் 1064 பேருக்குக் கஞ்சி வழங்க நிர்வாகச் செலவு உள்பட ரூ. 43 வீதம் செலவிட்டிருக்கிறார்கள்.

கஞ்சி நிலையத் தொண்டு மேற்கொண்டும் நடந்து வருகிறது. பிப்ரவரி மாதக் கடைசியில் முடிவு செய்யலாம் என்று எதிர்பார்க்கப் படுகிறார்கள்.

அன்னதான சிவன் சங்கத்தின் இந்த அரிய திருப்பணியை எவ்வளவு பாராட்டினாலும் போதாது. சர்க்கார் இம்மாகாண மெங்கும் ஆயிரக் கணக்கான கஞ்சி நிலையங்கள் நடத்தி வருவது உண்மையே. ஆனால் தனிப்பட்ட ஸ்தாபனங்கள் அந்தக் கைங்கரியத்தை நன்கு நடத்தி அரசாங்கத்தின் பாரத்தைக் குறைக்கலாம் என்று அன்னதான சிவன் சங்கம் நிரூபித்திருக்கிறது. எவ்வளவு குறைந்த செலவில் பஞ்ச நிவாரணத் தொண்டு நடத்தி ஆயிரக் கணக்கான ஜனங்களைக் காப்பாற்றலாம் என்பதையும் காட்டியிருக்கிறது.

மேற்படி சங்கம் காட்டியுள்ள வழியில் மற்றும் பல பொதுஜன சேவை ஸ்தாபனங்களும் தைரியமாகப் பிரவேசிக்கலாம். பஞ்ச நிவாரணத் தொண்டு, புயல் நிவாரணத் தொண்டு ஆகியவற்றை அரசாங்கத்தாரும் அரசாங்க அதிகாரிகளுமே முழுதும் செய்ய வேண்டுமென்று எதிர்பாராமல் பொது ஸ்தாபனங்களும் அத்தொண்டுகளில் ஈடுபடவேண்டும். உண்மையான தொண்டுக்குத் தமிழ் நாட்டுப் பொது மக்களின் ஆதரவு எப்போதும் கிட்டும் என்பதில் சந்தேகமில்லை. இதையும் அன்னதான சிவன் சங்கம் மறுபடியும் நிரூபித்திருக்கிறது.

# மெய்யாகவே முன்னேற்றந்தான்!

திராவிட முன்னேற்றக் கழகம் என்ற பெயர் சூட்டிக் கொண்டு கிளர்ச்சி செய்து வந்தவர்கள் இதுகாறும் வாய்ப் பேச்சளவிலேயே முன்னேற்றத்துக்குப் பாடுபட்டு வந்தார்கள். இந்த மாத ஆரம்பத்தில் அவர்கள் உண்மையாகவே முன்னேற்றமான தொண்டில் ஈடுபட்டுச் செயல் புரிய முன் வந்ததைப் பெரிதும் பாராட்டுகிறோம்.

திருச்சி, காஞ்சீபுரம் முதலிய இடங்களில் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் கைத்தறியாளர் தினம் கொண்டாடினார்கள். அன்று கைத்தறித் துணிகளை வீதிவலமாக எடுத்துச் சென்று ஆங்காங்கு விற்பனை செய்தார்கள். திருச்சியில் சுமார் ஆறாயிரம் ரூபாய் பெறுமான கைத் துணி இவர்கள் முயற்சியில் விற்பனையாயிற்று என்று தெரிகிறது. தமிழ் நாட்டில் உடல் உழைத்துப் பாடுபடச் சித்தமாயிருக்கும் லட்சக்கணக்கான கைத்தறியாளர்கள் பட்டினி கிடக்க நேர்ந்திருக்கிறது. அவர்களுக்கென்று கஞ்சி நிலையங்கள் ஏற்படுத்தும் அவசியமும் ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலையில், அன்னிய நாட்டுத் துணிகளோ ஆலையில் உற்பத்தியாகும் துணிகளோ தமிழர்கள் வாங்குவதைப் போன்ற தவறு வேறொன்றுமிருக்க முடியாது. இதைத் தமிழ் மக்கள் அனைவரும் நன்கு உணரும்படி செய்யவேண்டியது அவசியம். திராவிட முன்னேற்றக் கழகத்தாரின் தொண்டு இதற்குப் பெருதவியாயிருக்கு மென்பதில் சந்தேகமில்லை.

இதைப் போலவே இன்னும் பல ஆக்க வேலைகளிலும் திராவிடக் கழகத்தார் வருங்காலத்தில் ஈடுபடுவார்கள் என்று நம்புகிறோம். அவர்களைப் பார்த்து மற்ற அரசியல் கட்சிகளைச் சேர்ந்தவர்களும் ஆக்க வேலைகளில் போட்டியிடக் கூடும்.

# பொருட்காட்சியில் கலைக்காட்சி

சென்னை, தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நடக்கும் கதர் பொருட்காட்சியில் எத்தனையோ ருசிகரமான அம்சங்கள் இருக்கின்றன. அவைகளுக்கெல்லாம் சிகரம் வைத்தது போல் விளங்குவது கலைக் கண்காட்சி.

இன்று நம்மிடையேயுள்ள நூற்றுக் கணக்கான சித்திரக் கலைஞர்களின் அற்புதமான ஓவியங்களை இந்தக் காட்சியில் வைத்திருக்கிறார்கள். இயற்கை யன்னையின் அற்புதக் கோலங்களைக் காட்டும் சித்திரங்களும், கிராமச்சித்திரக் காட்சிகளும், இலக்கிய காட்சிகளின் வண்ண ஓவியங்களும் நெஞ்சை யள்ளுகின்றன.

சிற்பப் பகுதியில் ஆயிர வருஷங்களுக்கு முன்பிருந்து வந்துள்ள விக்கிரகங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. அவைகளுள் விசேஷமாக நமது கவனத்தைக் கவர்வன காரைக்கால் அம்மையாரின் விக்கிரகங்களாகும். சிவனைப் பாடிப் பரவிய பக்த மணிகளுள் மிக விசேஷமான சிறப்புப் பெற்றவர் காரைக்கால் அம்மையார். அந்த அம்மையார் ஆண்டவனை இளமைப் பருவத்தில் துதித்த கோலமும், நடுத்தர வயதில் பரவிய கோலமும், முதுமைப் பருவத்தில் பாடிய கோலமும், பேயாகிப் போற்றிய கோலமும், நான்கு வெண்கல உருவங்களில் காணப்படுகின்றன. அவற்றைப் பார்க்கும்போது அந்தப் பழங்கால ஸ்தபதியாரின் கலையார்வத்தை நினைந்து உள்ளம் பெருவியப்பு கொள்கிறது.

சமீபத்தில் காவிரிப்பூம் பட்டினத்துக் கருகிலுள்ள பெருந்தோட்டத்துக் கோவப் பெருமாள் கோவிலிலிருந்து கொண்டு வரப்பட்ட ஸப்த நாதம் கொண்ட பெருமாள் விக்கிரகம் நம் கவனத்தை அடுத்தாற்போல் கவர்கிறது.

பெருமானின் முகத்தைத் தட்டினால் பெருமான் ஸா என்கிற நாதத்தை அருள்கிறார்; பாஞ்சசன்னியத்தைத் தட்டினால் அவர் 'ரி' என்கிறார்; சக்கரத்தாழ்வார் 'க' என்கிறார். இப்படிப் பெருமானின் ஒவ்வொரு அங்கமும் ஒவ்வொரு ஸ்வரத்தைப் பாடுகிறது. உலகம் கண்டும் கேட்டும் அறியாத தோர் அற்புத விக்கிரகம் நம் முன்னோர் செய்தனர் என்பதில் பெருமித மடையலாம்!

மூன்றாவது பகுதி சரித்திரப் பகுதி. கோவில் கட்டும் கலை உலகில் முதல் முதலில் எந்தக் காலத்தில் எந்த நாட்டில் தோன்றியது, அது எப்படிப் பரவியது என்பதை அட்டையில் சித்திரங்கள் மூலம் விளக்கப்பட்டிருக்கிறது. பல்லவர் காலத்தில் கற் கோயில்கள் ஏற்பட்ட வரலாற்றையும், சோழர் காலத்திலும் நாயக்கர்கள் காலத்திலும் பிரம்மாண்டமான கோயில்கள் எழும்பிய விவரங்களையும் அட்டைச் சித்திரங்கள் விளக்குகின்றன. இவை தவிர மொஹஞ்சதாரோ காலத்துச் சிவன் எப்படியிருந்தார், பின்னர் எப்படி யெல்லாம் சிவ பெருமானுடைய உருவம் வேறுபாடு அடைந்து வந்தது என்பதை அந்த அட்டைகள் கூறுகின்றன. அப்படியே, சக்கராயுதம், கதாயுதம் முதலிய ஆயுதங்களும் காதணி, கழுத்தணி முதலிய அணிகளும் கால வெள்ளத்தில் மாறி மாறி வந்திருக்கின்றன என்பதையும் விளக்குகின்றன.

இப்படிக் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்தாய் அமைந்துள்ள இந்தக் கலைக் கண் காட்சியை ஏற்படுத்துவதில் பெரும் பங்கு கொண்டவர் ஸ்ரீ வை. மு. நரசிம்மன் என்பதை அறிந்து மகிழ்கிறோம்! அவருடைய முயற்சிக்கு நமது பாராட்டுதலையும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்!





திருவனந்தபுரம், கண்டோன்மெண்ட், எஸ்டேட் பார்வேடிங் ஏஜண்ட் ஸ்ரீ எஸ் கோபால்சாமி அவர்களது குமாரர் சிரஞ்சீவி வேணுகோபாலனுக்கும் நெடுமங்காடு எம். பத்மநாபன் செட்டியார் அவர்களது குமாரி சௌபாக்கியவதி சீதாலக்ஷ்மிக்கும் சென்ற மாதம் திருவனந்தபுரத்தில் விவாகம் மிகவும் சிறப்பாக நடந்தேறியது. மணமக்களுக்கு பல வாழ்த்துச் செய்திகள் வந்து குவிந்தன.

வாழ்க வேணுகோபாலன் - சீதாலக்ஷ்மி!




ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளும் மகாகவி பாரதியாரும் தமிழர்களின் உள்ளத்தில் கோவில் கொண்டு விளங்குகிறார்கள். தமிழர்கள் வசிக்கும் இடங்களிலெல்லாம் பாரதியார் விழாவும் ஸ்ரீ தியாகராஜ உற்சவமும் கொண்டாடப் பெறுகின்றன. ஜனவரி மாத ஆரம்பத்தில் திருவையாற்றில் போலவே இன்னும் பல இடங்களிலும் தியாகராஜ உற்சவம் நடந்தது. மயிலாப்பூர் ஸ்ரீ தியாகராஜ வித்வத் சமாஜத்தார் பல விசேஷ நிகழ்ச்சிகளுடன் உற்சவத்தைக் கொண்டாடினார்கள். வயலின் வித்வான் ஸ்ரீ பரூர் சுந்தரமையர் அவர்களுடைய பெரு முயற்சியினால் வாங்கப்பட்ட நிலத்தில் மகாராஜபுரம் ஸ்ரீ விசுவநாதய்யர் அவர்களுடைய நன்கொடையினால் கட்டிய ஸ்ரீ தியாகராஜரின் கோவில் சந்நிதியில் இவ்வாண்டு உற்சவத்தை அமோகமாக நடத்தினார்கள். பெரிய பிரபல வித்வான்களும் நூற்றுக்கு மேற்பட்ட இளம் வித்வான்களும் கச்சேரி கைங்கரியம் செய்தார்கள். உஞ்சவிருத்தி பஜனையின்போது சேர்ந்த அரிசியைக் கொண்டு அன்னதானமும் செய்யப்பட்டது. திருவெண்காடு ஸ்ரீ சுப்பிரமணியத்தின் நாதஸ்வரக் கச்சேரியுடன் ஊர்வலமும் நடத்தினார்கள். செம்மை வைத்தியநாத பாகவதர், மகாராஜபுரம் விசுவநாதய்யர், புல்லாங்குழல் மகாலிங்கம் முதலிய பிரபல வித்வான்கள் ஒருவருக்கொருவர் பக்கவாத்தியம் வாசித்துச் சிறப்பித்த கச்சேரிகள் இந்த உற்சவத்தில் விசேஷ அம்சமாக விளங்கி ரசிகர்களையும் பக்தர்களையும் ஆனந்தக்கடலில் மூழ்கும்படி செய்தன.

## விவசாய சாதனைக் கட்டுரை

விவசாய சாதனைக் கட்டுரைப் போட்டிக்கு வந்த கட்டுரைகளில் "பட்டி வீரன் பட்டியில் பழத்தோட்டம்" என்ற கட்டுரையும் "கனவும் நனவும்" என்ற கட்டுரையும் பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. இந்த இரண்டு கட்டுரைகளுக்கும் பரிசுத் தொகை ரூ. 100/-யும் சமமாகப் பகிர்ந்து அளிக்கப்பட்டன. பரிசு பெற்ற கட்டுரைகளில் ஒன்று இந்த இதழில் வேறு பக்கங்களில் வெளியாகியிருப்பதைக் காணலாம்.

பரிசு பெற்றவர்களின் விலாசம்:

1. கே. வி. முருகன்
   உசிலம்பட்டி
   மதுரை ஜில்லா

2. கே. வேதாந்தம்
   திருக்காட்டுப்பள்ளி
   தஞ்சை ஜில்லா

# பட்டி வீரன் பட்டியில் பழத் தோட்டம்

கே. வி. முருகன்

"டாக்டர் வந்தாரே! என்ன சொல்லி விட்டுப் போனார்?"

"டெம்பரேச்சர் 104 டிகிரி இருக்கிறதாம். 'ஜுரம் இறங்கி விடும்; பயமில்லை' என்று சொல்லி விட்டுப் போனார்."

"ஆகாரம் என்ன கொடுக்கச் சொன்னார்!"

"சாத்துக்குடி ஆரஞ்சு வாங்கிச் சாறு பிழிந்து கொடுக்கச் சொன்னார்."

இத்தகைய சம்பாஷணைகளை நாம் அடிக்கடி கேட்கிறோம். மனித வாழ்க்கையில் மிக முக்கியமான கட்டத்தில், பிரதான அங்கம் வகிக்கிறது சாத்துக்குடி ஆரஞ்சு.

சாத்துக்குடி என்றவுடன் அது ஒரு ஊர் போலும்; அங்கிருந்து வரும் ஆரஞ்சுக்குச் 'சாத்துக்குடி ஆரஞ்சு' என்று பெயர் என்பதாகப் பலர் எண்ணியிருக்கலாம். அது தப்பு. அந்தப் பழத்தின் பெயரே சாத்துக்குடி ஆரஞ்சுதான்.

சென்னைக்கு வடக்கேயுள்ள கோடூர், நகரி என்ற ஊர்களிலிருந்து தான் சாத்துக்குடி ஆரஞ்சு கிடைத்து வந்தது. அந்த ஊர்களெல்லாம் ஆந்திர ராஜ்யத்தில் உள்ளவை. ஆந்திரர்கள் ஆந்திரர்களாக மாறி ஆகாத்தனம் செய்து கொண்டிருக்கிறார்களே! அதனால் சாத்துக்குடி ஆரஞ்சு நமக்குக் கிடைப்பது தடைப்பட்டு விடுமோ என்ற கவலை நமக்கு வேண்டியதே இல்லை. இதோ பட்டிவீரன்பட்டியில் பயிர் செய்திருக்கிறார்கள்; சாத்துக்குடிச் செடி. அங்கு காய்க்கும் ஏராளமான சாத்துக்குடிப் பழங்கள் மதுரை ஜில்லா முழுவதும், ராமநாதபுரம், திருநெல்வேலி ஜில்லாக்களுக்கும் அனுப்பப்பட்டு விற்பனையாகின்றன. அங்கு உண்டாக்கப்பட்டுள்ள எல்லாச் செடிகளும் காய்க்க ஆரம்பித்து விட்டால், தமிழ்நாடு முழுவதும் விநியோகம் செய்யக்கூடியவாறு காய்க்கும்.

ஒருவேளை இந்தப் பழம் ஏதாவது ஓர் கொடியில் காய்க்கலாம். அந்தக் கொடிக்குப் பெயர் சாத்துக் கொடி என்றிருக்கலாம். கொடி நாளடைவில் திரிந்து குடி ஆகியிருக்கலாம். இவ்வாறு நான் எண்ணியிருந்ததும் உண்டு.

பக்கத்தில் உள்ள பட்டிவீரன் பட்டியில்தானே காய்க்கிறது, போய்ப் பார்த்து விட்டால் தீருகிறது. மரத்தில் காய்க்கிறதா! அல்லது செடியிலா, கொடியிலா! இவ்வித சந்தேகம் தீர்ந்து விடுமல்லவா! நான் செல்வதறிந்து எனது நண்பர் இருவர் உடன் வந்தனர். பட்டிவீரன்பட்டி மதுரைக்கு வடமேற்கே சுமார் நாற்பத்தைந்தாவது மைலில் இருக்கிறது.

அங்கே இரண்டு பேர்கள் இருக்கிறார்கள். இருவரும் விவசாய நிபுணர்கள் என்ற விஷயம் ஏற்கெனவே எனக்குத் தெரியும். இருவரும் இளைஞர்கள். படித்த வாலிபர்கள் விவசாயத்தை விட்டு விட்டார்கள் என்ற புகாருக்கு மாறுபட்டவர்கள். ஒருவர் பெயர் பாஸ்கரன். இன்னொருவர் பெயரும் பாஸ்கரன்தான். முதலில் கூறியவருக்கு வயது 24 ஆகிறது. முழுப் பெயர் பி. ஆர். கே. பாஸ்கரன். இரண்டாவது பாஸ்கரனுக்கு வயது 25 இருக்கலாம். பட்டிவீரன்பட்டி, டபிள்யூ. பி. ஏ. சௌந்தரபாண்டிய நாடாரின் புதல்வர். இத்தனை இளம் வயதில் விவசாய ஆர்வத்துடன் ஈடுபட்டிருக்கும் இந்த இளம் விவசாயிகளையும் அவர்கள் செய்திருக்கும் அரிய சாதனைகளையும் காணும் சந்தர்ப்பம் கிடைத்தது.

முதலில் பி. ஆர். கே. பாஸ்கரன் தமது சாத்துக்குடி தோட்டத்துக்கு அழைத்துச் சென்றார். ஊருக்குத் தென் மேற்கே மலையடிவாரத்தில் ஓர் தோட்டம். நல்ல செம்மண்பூமி. சரளைகளும் நிறைந்து கிடந்தன. அந்தத் தோட்டத்தில் நுழையுமுன்பே, "இப்பேர்ப்பட்ட பிரதேசத்தில் என்ன நடக்கப் போகிறது" என்றேன் நான். "இந்த மண்ணைத்தான் பொன் விளையச் செய்கிறோம்" என்றார் பாஸ்கரன்.

இம்மாதிரி மண்களில்தான் திராக்ஷைக் கொடி, சாத்துக்குடி செடி முதலியவைகள் உண்டாகின்றனவாம். தோட்டத்தில் நுழைந்தவுடன் ஒரு நீண்ட பந்தல் காணப்பட்டது. "இது எதற்கு இத்தனை பெரிய பந்தல்! ஏதாவது மகாநாடு கூட்டவா!" என்றேன்.

"இல்லை! இல்லை!! இது திராக்ஷைக் கொடிக்காகப் போடப்பட்ட பந்தல்" என்றார், கூட வந்த பாஸ்கரன். பட்டிவீரன் பட்டியில் தடுக்கி விழுந்தால் திராக்ஷை தோட்டத்தில்தான் விழ வேண்டியிருக்கிறது. ஆறு ஏக்கராவில் திராக்ஷைக் கொடி போட்டிருக்கிறார். இதைத் தாண்டியதும் சாத்துக்குடி செடிகள் ஆரம்பமாகின்றன.

குடை பிடித்தது மாதிரி குப்பல் குப்பலாக ஒவ்வொரு செடியும் இருந்தது. இலைகள் கொழுமிச்சை இலைமாதிரியே இருக்கிறது. முதலில் 70 செடிகள் போட்டிருக்கிறார்கள். அவை இந்த வருடம் காய்ப்புக்குத் தயாராகி விட்டன. போட்டு ஆறு வருடம் ஆன செடிகளல்லவா! அதன் பின் கடந்த இரண்டு வருடங்களுக்கு முன் 50 செடிகள், சென்ற வருடம் 50 செடிகள் அவர் வைத்திருக்கிறார். ஆக மொத்தம் இரண்டு ஏக்கராவில் 170 செடிகள் வைத்திருக்கிறார். நூறு செடிகள் இன்னும் குழந்தைச் செடிகளே!

இந்தச் செடிகளுக்கு அவர் செய்திருந்த ஏற்பாடு விந்தையளிப்பனவாக இருந்தன. சுற்றுக்குச் சுற்று சிமிண்ட் கோட்டை ஒரு அடி உயரத்தில் எழுப்பி யிருந்தார். இந்தக் கோட்டைகள் எதற்கு என்று அவரைக் கேட்டபோது, "அது கோட்டையல்ல, தண்ணீர் பாய்ச்சுவதற்கான வாய்க்கால்" என்று பதிலளித்தார்.

"ஏன் மண்ணிலேயே வாய்க்கால் வெட்டி விட்டால் 'புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம்' என்ற சொல் மெய்யாகிவிடுமே என்ற பயமா! ஏன் இப்படி நல்ல வாக்கைப் பொய்யாக்க வேண்டும்!" என்றேன்.

பாஸ்கரன் சிரித்துக்கொண்டே, "சற்று இப்படி வாருங்கள்" என்று ஒரு மூலைக்கு அழைத்துச் சென்றார். ஒரு பெரும் பள்ளத்தை எட்டிப் பார்க்கச் சொன்னார். எட்டிப் பார்த்தேன். தலை கிறு கிறுத்தது: அத்தனை ஆழம். 45 அடி நீளம், 39 அடி அகலம் உள்ள அந்தப் பெருங் குழியில் 15 அடி ஆழம் கரும் பாறைகளாகப் பெயர்த்து எடுத்திருக்கிறார்கள். அதற்குப் பின் ஒரு பாதியில் மட்டும் 12 அடி ஆழம் மேற்கொண்டு கடுமையான பாறைகளை உடைத்து எடுத்திருக்கிறார்கள்.

"எதற்காக இந்தக் கிடுகிடு பாதாளம் உண்டாக்கியிருக்கிறீர்கள்?" என்றேன். அவர் கூறிய பதில் என்னைத் திடுக்கிட வைத்தது!

அது கிணறாம்! அது தோண்டப்பட்ட கதையைக் கூறினார். அந்த இடத்தில் தண்ணீர் கிடைக்கலாம் என ஆராய்ச்சியாளர் ஒருவர் கூற, அதை நம்பி அந்த இடத்தில் கிணறு தோண்ட ஆரம்பித்திருக்கிறார்கள். சுமார் எட்டாயிரம் ரூபாய் செலவாகி விட்டது. கரும்பாறைகளை வெட்டி எடுத்தும் ஒரு சொட்டுத் தண்ணீர் கூடக் காணமுடியவில்லை. அதை அப்படியே போட்டு விட்டு, வேறொரு இடத்தில் கிணறு தோண்டியிருக்கிறார்கள். அது என்ன கிணறு மாதிரியாகவா இருக்கிறது! 60 அடி நீளம், 36 அடி அகலம், 45 அடி ஆழம் தோண்டியிருக்கிறார்கள். அதில் ஒரு ஓரத்தில் தண்ணீர் கிடந்தது. அந்தக் கிணற்றை ஒவ்வொரு வருடமும் மேலும் மேலும் தோண்டிக்கொண்டே போகிறார்கள். இதுவரை அந்தக் கிணற்றுக்கு முப்பதாயிரம் ரூபாய் வரை செலவு செய்திருக்கிறார்கள்.

அந்தக் கிணற்றில் ஊறும் தண்ணீரை, எஞ்சின் வைத்து இறைக்கவில்லை; இறைக்கவா அதில் தண்ணீர் இருக்கிறது! உறிஞ்சுகிறார்கள்! அப்படி எடுக்கப்படும் தண்ணீரை, ஆறடி உயரமுள்ள கோட்டையின்மேல் அமைத்துள்ள வாய்க்காலில் முதலில் விடுகிறார்கள். அதிலிருந்து கீழ் நோக்கித் தண்ணீர் வேகமாக ஓடி வந்து, கீழே சுற்றியுள்ள சிமிண்ட் வாய்க்கால் வழியாகச் செடிகளுக்குப் பாய்கிறது. இப்படிப் பெரும் கஷ்டத்தின் மேல் கொண்டு வரப்படும் தண்ணீரைப் புல்லுக்குப் பொசிய விட்டு விட முடியுமா!

"ஏதோ தண்ணீருக்குக் கஷ்டப்பட்டு விட்டாலும்கூட, பழங்கள் காய்த்துக் குலுங்க ஆரம்பித்து விட்டால் இதெல்லாம் உங்களுக்கு ஒரு கஷ்டமாகத் தோணாது" என்றேன்.

ஆனால் செடியை உண்டாக்கி, காய் காய்க்க வைக்கும் வரை உள்ள சிரமங்களைப் பாஸ்கரன் கூறத் தொடங்கினார். அதைக் கேட்டபோது; சாத்துக்குடி உண்டாக்க அசாதாரண துணிச்சல் வேண்டும் என்று அறிந்தேன்.

சாத்துக்குடி செடி உண்டாக்கும் விதத்தைக் கேட்டபோது அவர் கூறியதாவது:—25 அடிக்கு ஒரு செடி வைக்கிறார்கள். ஒவ்வொரு செடிக்கும் 3 அடி ஆழம், 3 அடி நீளம், 3 அடி அகலம் உள்ள குழி வெட்டுகிறார்கள். கொழுஞ்சி, ஆவாரந்தழை முதலியவைகளைப் போட்டுக் குழிகளை மூடி விடுகிறார்கள். ஒரு மாதத்தில் தழைகளெல்லாம் மக்கி, மண்ணோடு மண்ணாகி விடுகின்றன. கோடூரிலிருந்து சாத்துக்குடி நாற்றுக்கள் வரவழைக்கப்பட்டு நடப்படுகின்றன. வாரம் ஒருமுறை செடிகளுக்குத் தண்ணீர் விடப்படுகிறது. தண்ணீர் இருந்தால் இருமுறை விடலாம் என்றார். செடி வளரும் போது இலைகளில் ஒருவித புழுக்கள் சில சமயங்களில் தெரியலாம். ஆட்களை விட்டு அப் புழுக்களைப் பொறுக்கி அழித்து விடுகிறார்கள். செடியாகி மூன்று வருடங்கள் வரை இப்படி அரும்பாடுபட்டு பாதுகாத்து வருகிறார்கள்.

அப்புறம் இலைகளில் தேமல் மாதிரி விழுகிறது. அதைக் கவனிக்காமல் விட்டு விட்டால் செடி பட்டுப் போகிறதாம். அதற்குத் துத்தம், ஜிங் சல்பேட் முதலியவைகளைக் கலந்து தெளிக்கிறார்களாம். சில சமயம் வேரில் ஒருவித புழு விழுமாம். அப்போது செடிக்குத் தண்ணீர் விடுவதை அடியாத்தை ஒட்டாமல் விடுகிறார்களாம்.

அப்புறம் அந்த இடத்தில் புதுச் செடி நடப்படுகிறது. அப்போதைக்கப்போது களை வரவிடாமல் எடுத்து வருகிறார்கள். இப்படியாக ஆறு ஆண்டுகள் செடியைக் கண்ணும் கருத்துமாய் வளர்க்கிறார்கள். ஆறாவது வருடத்தில் முதல் காய்ப்பு காய்க்க ஆரம்பிக்கிறது.

"காய்க்க ஆரம்பித்த பிறகும் செடியைக் கவனிக்க வேண்டுமா?" என்றேன்.

"ஆம். ஒவ்வொரு வருடமும் இருமுறை குழி வெட்டிப் பசுந்தழை உரம் போட்டு மக்க வைப்பதுண்டு. இக்குழிகள் செடியைச் சுற்றி வெட்டப்படுகிறது. வருடம் இருமுறை புண்ணாக்குத் தூள், சல்பேட் அமோனியா கலந்து செடியைச் சுற்றி வைக்கிறோம்" என்றார்.



இது குன்றல்ல. கிணறு தோண்டும்போது எடுத்த மண்மேடு.

"காய்ப்பு எப்படி இருக்கிறது?" என்றேன்.

"இந்த வருடம் தான் காய்க்க ஆரம்பித்திருக்கிறது. இனிமேல் போகப் போகத்தான் எப்படிக் காய்க்கிறது என்பது தெரிய வேண்டும்" என்றார்.

குளிர் காலத்திலும் கோடையிலும் காய்க்குமாம். கோடையில் குறைவாகத்தான் காய்க்குமாம். செடிக்கு 15 வயதுக்குமேல் காய்ப்பு குறையலாம் என எதிர்பார்ப்பதாகக் கூறினார்.

அடுத்தபடியாக டபிள்யூ. பி. ஏ. எஸ். பாஸ்கரனைக் காணச் சென்றோம். விவசாயத்தில் ஆர்வமும், ஆராய்ச்சியும் நிறைய இருக்கிறது இவரிடம்.

"சாத்துக்குடியைப் பற்றிய விவரம் தெரிந்து

கொள்ள வந்திருக்கிறோம்" என்றவுடன் மிகவும் உற்சாகத்தோடு கிளம்பினார். தோட்டத்தில் எல்லாப் பகுதியையும் எங்களுக்குச் சுற்றிக் காட்டினார்.

எட்டு ஏக்கராவில், மொத்தம் 750 செடிகள் சாத்துக்குடி வைத்திருக்கிறார்கள். முதல் முதல் பட்டி வீரன் பட்டியிலே சாத்துக்குடி வைத்து உண்டாக்கியவர்கள் இவர்கள்தான்.

அந்தப் பிரசித்தி பெற்ற 1942-ம் வருஷத்திலே சரித்திரப் பிரசித்தி பெற்ற ஆகஸ்ட் 15-ம் தேதியிலே முதல் செடி நட்டார்களாம். 1947-ம் வருஷத்தில் முதல் பலன் எடுத்து விட்டார்கள்.

விவசாயத்தைக் கவனிக்கும் பணியில் பாஸ்கரன் முழு மூச்சாக ஈடுபட்டிருக்கிறார். மேலும் மேலும் விவசாயத்தில் விந்தை புரிய ஆர்வம் நிறைய இருப்பது இவரது பேச்சிலிருந்து தெரிய வருகிறது.

இவர் சாத்துக்குடிச் செடி உண்டாக்குவதில் சில மாறுதல்கள் இருப்பதைக் கண்டோம்.



முதல் காய்ப்பு ஆரம்பித்துள்ள சாத்துக்குடி செடி.

இங்கு 20 அடிக்கு 20 அடி ஒரு செடிக்கு இடம் விட்டிருக்கிறார்கள். சுற்றுக்குச் சுற்று மண்ணால் கரை கட்டிப் பாத்தி கட்டியிருக்கிறார்கள். செடி பெரிதாக ஆகச் சுற்றிலும் கப்பும் கவருமாகப் பரவும். செடியின் நான்கு புறமும் வாது பரவும் வரையில் மண்ணை அணைத்துக் கோட்டை கட்டுகிறார்கள். அந்த அளவிற்குச் சல்லி வேரும் படருமாம். செடியின் அடியை விட்டுத் தள்ளி மூன்றடி தூரத்தில் ஒரு கரை கட்டுகிறார்கள். இடையே யுள்ள பாத்திகளில் தண்ணீர் விடுகிறார்கள். அதாவது செடியின் அடியைத் தண்ணீர் தொடுவதில்லை. ஆணிவேர் 6-அடி ஆழம் போகிறதாம். அதை எங்காவது கல்லிருந்து தடுக்கினால் அவ்வளவுதான். அத்துடன் செடி வளர்ச்சி குன்றிப் பட்டுப் போய்விட ஏதுவுண்டு.

பகீரதன் கங்கை கொண்டு வந்ததாகக் கதைகளில்தான் படித்திருக்கிறோம். ஆனால் இவர்கள் பகீரதனுக்குக் குறையாத அளவு கஷ்டப்பட்டிருக்கிறார்கள்; தண்ணீரைக் கண்டு பிடிக்க!

தோட்டத்தில் நான்கு பகுதியில் நான்கு கிணறுகளைத் தோண்டியிருக்கிறார்கள். ஒவ்வொன்றும் 42 அடி நீளம், 39 அடி அகலம், 30 அடி ஆழம். எல்லாமே அருமையான கரும் பாறையை வெட்டி எடுத்துள்ளார்கள். சுற்றிக் கட்டிடம் கட்டி முடிய நான்கு கிணறுகளுக்கும் அறுபதாயிரம் ரூபாய் வரை செலவு செய்தார்களாம்! இதில் விசேஷம் என்னவென்றால் நான்கு கிணறுகளிலும் தண்ணீரே கிடையாது. கிணற்றின் அடியில் பாறையில் நெல் காயப் போடலாம்.

எப்படியும் தண்ணீர் வேண்டுமே! அதன்பின் ஒரு கிணற்றின் அருகில் 205 அடி ஆழத்தில் 10 அங்குல அகலத்தில் ஒரு போரிங் போட்டிருக்கிறார்கள். அதில் மோட்டாரை வைத்துத் தண்ணீரைக் கொஞ்சம் கொஞ்சமாக மேலே கொண்டு வருகிறார்கள். இதற்கு ரூபாய் பன்னிரெண்டாயிரம் வரை செலவாகி யிருக்கிறதாம். இதில் எடுக்கப்படும் தண்ணீரை உடனே செடிக்கு விடுவதில்லையாம். அந்தத் தண்ணீரை அருகில் உள்ள கிணற்றில் தேக்குகிறார்கள். அதில் மோட்டார் வைத்துத் தண்ணீரை வெளியே கொண்டு வந்து செடிகளுக்குப் பாய்ச்சுகிறார்கள். தண்ணீர் வேகமாகப் பாய்ந்தால் அதிகச் செடிகளுக்குப் பாயுமாம். அதற்காக இந்த விசேஷ ஏற்பாடாம்.

இப்படி வேகமாகப் பாய்வதால் தினம் ஒன்றுக்குப் பத்து அல்லது பதினைந்து செடிகள் வரையில் தண்ணீர் பாய்ந்து விடுகிறதாம்!

"வேறு தண்ணீர் வசதி உள்ள இடத்தில் இந்தச் செடிகளை வைத்திருக்கக் கூடாதா?" என்றேன்.

"இப்படி மண் முதலில் வேண்டும். இரண்டாவதாக எங்கள் தைரியம்" என்றார்.

"அதில் எதற்குத் தைரியம் தேவைப்படுகிறது!" என்று கேட்டேன்.

"மற்ற இடங்களில் தண்ணீரைப் பார்த்துக் கொண்டு அதற்குத் தக்க விவசாயம் செய்வார்கள். நாங்கள் அப்படி யல்ல; எதையும் பயிர் செய்வோம். எப்பாடு பட்டாவது அப்புறம் தண்ணீர் கொண்டு வந்து விடலாம் என்ற தைரியம் எங்களுக்கு உண்டு" என்றார்.

வாரம் ஒரு தடவை தண்ணீர் பாய்ச்ச முடியவில்லை. முடிந்தவரை பாய்ச்சுகிறார்கள். கடந்த நான்கு வருட மழை இல்லாக் குறை வேறு. தண்-

ணீர் இல்லாக் குறையினால் செடிகளுக்குப் புதுப் புது வியாதி வருகிறதாம்.

என்றைக்காவது ஒரு நாள் இந்தக் கிணறுகளில் தண்ணீர் நிரம்பும் அளவுக்கு மழை பெய்யும் என எதிர் பார்க்கிறார். சிமிண்ட் வாய்க்காலுடன், எட்டடி உயரத்தில் கோட்டை வாய்க்காலும் அமைத்திருக்கிறார்கள்.

செடிகளுக்கு வியாதி வரக்கூடாது என்பதற்காக வருமுன் காப்பாக மாதம் ஒரு தடவை, அல்லது நாற்பது நாளைக்கு ஒரு முறை 'போடோ மிக்சர்' என்ற மருந்தைச் செடி முழுவதும் தெளிக்கிறார்கள்.

ஒரு பவுண்ட் துத்தம், ஒரு பவுண்ட் சுண்ணாம்பு, பத்துக் காலன் தண்ணீரில் இவைகளைக் கலக்கினால் 'போடோ மிக்சர்' உண்டாகிறது.

இப்படி வருமுன் காத்துங்கூடச் சில சமயம் 'கோங்கர்' என்ற வியாதி வந்து விடுகிறதாம்.

"அது என்ன 'கோங்கர்' வியாதி! செடிகளை அது என்ன செய்து விடும்!" என்று ஆவலோடு கேட்டேன். உடனே ஒரு செடியின் முன் என்னைக் கொண்டு போய் நிறுத்தி, ஒரு இலையைப் பறித்துக் கையில் கொடுத்தார். அந்த இலையில் கார்க் கலரில் புள்ளி புள்ளியாக இருந்தது. "இதுதான் 'கோங்கர்' வியாதி" என்றார்.

"இது இருந்தால் இருந்து விட்டுப் போகட்டுமே!" என்றேன்.

"பூதக் கண்ணாடி வைத்துப் பார்த்தால் கணக்கற்ற பூச்சிகள் அதில் இருப்பது தெரிய வரும். அவைகள் பழங்களையும் கெடுத்து விடும்" என்றார்.

"அப்படியானால் இவைகளை அழித்துவிட வேண்டியது தான்" என்றேன். "அதற்காகத்தான் 'ஜிங் சல்பேட்' தெளிக்கிறோம்" என்றார். அது இந்தப் பூச்சிகளைக் கொன்று விடுகிறதாம். மேலும் செடிகளுக்குத் துத்தநாகச் சத்துக் குறைவதால் இலைகள் மஞ்சள் நிறமாகி விடுகிறதாம், அதற்கும் 'ஜிங்சல்பேட்' அவசியத் தேவையாம்.

துத்தநாகத்தில் ஒரு பவுண்டு, நீற்றிய சுண்ணாம்பில் ஒரு பவுண்டு, தண்ணீர் 10 காலன்; இவைகளைக் கலந்தால் ஜிங் சல்பேட்.

"அதுனி என்றோர் வியாதியும் செடிக்கு வந்து விடுகிறது. இதற்குப் புகையிலைத் தண்ணீரைத் தெளித்து விடுவோம்" என்றார். "ஏன் இவைகள் வருகின்றன!" என்றேன். "மழை இல்லாக் குறையும், தண்ணீர் இல்லாக் குறையும் தான் காரணம்" என்றார்.

"இந்த வியாதிகள் தான் எத்தனை இருக்கின்றன!" என்றேன். அவர் ஒன்றும் பேசாமல் ஒரு மூட்டைப் புத்தகத்தை என் முன்னால் தூக்கிப் போட்டார். அதன் விலை ரூபாய் முப்பத்திரண்டு. கலிபோர்னியாவில், சாத்துக்குடிக்கென எழுதப்பட்ட புத்தகம். எத்தனையோ விதமான வியாதிகளும் அவற்றை நீக்கும் மார்க்கங்களும் அதில் குறிப்பிட்டிருக்கின்றன.

"நல்ல வேளையாக அந்தப் புத்தகங்களில் கண்ட வியாதிகளெல்லாம் இங்கு வருவதில்லை" என்றார்.

இன்னும் சில வியாதிகளினால் செடிகள் பட்டுப் போகவும் கூடுமாம். அப்படி வியாதி வந்தால், செடியைச் சுற்றிலும் குழி வெட்டி, அவ் வியாதி மற்ற செடிகளுக்கும் பரவாமல் தடுக்கப்படும். அந்தச் செடி பட்டுப் போன பின் அந்த இடத்தில் வேறு செடி வைக்கப்படும்.

இவர்கள் 4 அடி குழிகள் போட்டு, பசுந் தழை எலும்புத் தூள் இவைகளைக் குழியில் போட்டுத் தண்ணீரை ஊற்றி மேலே மண்ணைப் போட்டு விடுகிறார்கள். மூன்று மாத காலம் மக்கும்படி விடுகிறார்கள். டிசம்பரில் நாற்று நடுகிறார்கள்.

நாற்றுக்களில் ஒட்டு நாற்று, வேர் நாற்று என இருவகை உண்டு. முன்பெல்லாம் ஒட்டு நாற்றுக்களே நட்டிருக்கிறார்கள். இப்போது வேர் நாற்றுக்களையே நடுகிறார்கள். ஒட்டு நாற்று என்பது, கொழுமிச்சை, பப்ளிமாஸ், நாரத்தை, எலுமிச்சை இவைகளின் வேரின் மேல் பாகத்தைச் சீவி விட்டு, அந்த இடத்தில் சாத்துக்குடியின் குச்சியைச் சீவிச் சேர்த்துப் பதியம் போட்டு விட்டால், அந்த வேர் மூலம் உணவெடுத்து உண்டாகும் சாத்துக்குடி நாற்று ஒட்டு நாற்று. விதை மூலம் வருவது வேர் நாற்று.



குலை குலையாய்ப் பழுத்து நிற்கும் சாத்துக்குடிப் பழம்.

வேர் நாற்றில் உண்டாகும் செடி பதினோராவது வருடத்தில் தான் காய்க்க ஆரம்பிக்கிறதாம். ஆனால் அதிக வயது செடி வாழும் என எதிர்பார்க்கிறார்கள். ஒட்டு நாற்று ஆறாவது வருடத்தில் பலன் கொடுக்கும். அதிக வருடம் செடி இராதென்கிறார். சாத்துக்குடி செடிக்கு நல்ல வெய்யில் வேண்டுமாம்.

முதல் காய்ப்பின் பெயர் கன்னிக் காய்ப்பு. அதை உருவி விட்டு விடுகிறார்கள். இச் செடிகளில் முதல் பலனை எடுப்பதில்லையாம். ஆறு வருடகாலம் செடிகளுக்கு உரம் வைத்து, களை எடுத்து, வியாதி நீக்கி, கட்டிக் காத்து வருவதில் செடி ஒன்றுக்கு எழு

நூறு ரூபாய் வரை செலவாகிறது என அவர் கணக்கெடுத்திருக்கிறார்.

ஆறு வருடம் ; 700 ரூபாய் : ஒரு செடிக்கான ஆரம்பச் செலவு !

"இவ்வளவு செலவழித்த பிறகு ஒரு செடி காய்க்காமலும் போகலாம். ஏதாவது வியாதி வந்து பட்டுப் போய் விடவும் கூடும். இதையெல்லாம் எதிர்பார்த்துத்தான் இருக்க வேண்டும்" என்றார்.

ஒரு செடி நன்றாகக் காய்ப்பது என்றால், காலத்தில் 600 லிருந்து 1000 பழம் வரை காய்க்குமாம். கோடையில் 200 லிருந்து 500 பழம் வரை காய்க்குமாம். ஆனால் சராசரி ஒரு செடியில் 200 பழம் தான் தேறுகிறதாம்.

1947-ம் வருடம் சராசரி ஒரு பழத்திற்கு நாலணா வீதம் அவர்களுக்குக் கிடைத்ததாம். இப்போது சராசரி ஒரு பழத்திற்கு ஒரு அணா வீதம் தான் கிடைக்கிறதாம். ஒரே ஒரு வருடம் நல்ல காய்ப்பு இருந்ததாம். நல்ல விலையும் இருந்ததாம். அந்த வருடத்தில் மட்டும் 64 ஆயிரம் ரூபாய்க்குக் காய்த்ததாம். காலமும் கோடையும் சேர்ந்து, இரண்டரை லட்சம் பழங்கள் வரை ஒவ்வொரு வருடம் காய்க்கிறதாம்.

ஒரு வருடத்துக்கு ஏக்கர் ஒன்றுக்கு உரம், மருந்து, களை எடுத்தல், தண்ணீர் பாய்ச்சல் முதலியவைகளுக்கு 1,250 ரூபாய் வரை செலவாகிறதாம். மொத்தம் எட்டு ஏக்கராவுக்கும் பத்தாயிரம் ரூபாய் செலவாகிறது என்றார்.

செடியின் முதல் இரண்டு வருடங்களில் ஒருவித பச்சை நிறப் புழு தோன்றுமாம். அவைகள் சாத்துக்குடி இலைகளைத் தின்று தின்று பட்டுப் பூச்சியாக மாறி விடுகிறதாம். அப் புழுக்களை உடனுக்கு உடன் அழித்து விடுகிறார்கள்.

பழம் எடுக்கப் பத்துப் பன்னிரெண்டு வயதுப் பையன்களைத்தான் ஈடுபடுத்துகிறார்கள். மரத்துக்குத் தகுந்த பையன்கள். மரத்தின் கிளை ஒடிந்து போகாமலிருக்க இந்த ஏற்பாடு. அடிக்கடி பட்டை வெட்டுகிறார்கள். அதாவது பழுக்காத முள் போன்ற பட்ட குச்சிகளை அகற்றுதல்.

தண்ணீர் விடுவதில் ஓர் ஒழுங்கு வேண்டுமாம். எட்டாம் நாள் என்றால் எட்டாம் நாள். ஆறாம் நாள் என்றால் ஆறாம் நாள். இப்படி விட வேண்டுமாம். ஆறு நாளைக்கொருதடவை தண்ணீர் விட்ட செடிக்கு எட்டு நாளைக்கு ஒரு தடவை என மாற்றினால் ஏதாவது புதிய வியாதிகள் தோன்றுமாம்.

அதனால் இப்போது எத்தனை செடிக்குத் தண்ணீர் விட முடியுமோ, அத்தனைக்குத்தான் தண்ணீர் விடுகிறார்கள். பாக்கிச் செடிகள் தண்ணீரில்லாமல் வாடுகின்றன.

தண்ணீரை மாற்றக் கூடாதாம். ஆரம்பத்தில் எந்தக் கிணற்று நீரை விடுகிறோமோ அதே கிணற்று நீரைத்தான் கடைசி வரை விட்டு வர வேண்டுமாம்.

கிட்டத்தட்ட ஒரு செடி தனது 25-வது வயது வரை காய்க்கலாம் என இவர் எதிர்பார்க்கிறார்.

இத்தனை சிரமப்பட்டு இந்தச் செடிகளை வளர்க்கிறார்கள். குழந்தைகளை வளர்ப்பதில் இவ்வளவு சிரமம் கிடையாது. குழந்தைகளை விடப் பன்மடங்கு அதிகமாகக் கட்டிக் காக்கிறார்கள். தினம் தினம் ஒவ்வொரு செடிகளையும் பார்த்து விடுகிறார். இப்படியாக உண்டாக்கப்படும் பழத்தைத்தான் நாம் கடைகளில் போய் "கூசாமல் அதிக விலை சொல்கிறாயே!" எனக் கேட்கிறோம்.

முதல் வருடம் உண்டான பழத்தின் தோல் மந்தமாக இருந்ததாம். வருடா வருடம் தோல் லேசாகி, இந்த வருடத்தில் பழத்தின் தோல் மிக மெல்லிசாக மாறி விட்டதாம்.

இதைப் பார்த்துவிட்டுத் திரும்பும் போது பி. ஆர். கே. பாஸ்கரனிடம், "இந்த ஊரில் எங்கு பார்த்தாலும் பச்சைப் பசேல் என்று காணப்படுகிறதே, தண்ணீருக்கு இவ்வளவு சிரமப்பட்டு எப்படிக் கொண்டு வர முடிந்தது!" என்றேன்.

"ஊருக்கு வடக்கு பாகத்தில் தண்ணீர் தாராளமாகக் கிடைக்கிறது. அங்கு ஒரு கிணறு வெட்டியுள்ளோம். அதைக் காணுவோம் வாருங்கள்" என்று அழைத்துச் சென்றார்.

தூரத்தில் செல்கையில் அதோ என்று கையைக் காட்டினார். அது ஒரு குன்று! "அது என்ன குன்று!" என்றேன்.

"அது குன்றல்ல! கிணறு வெட்டிய மண்!" என்றார் அவர்.

"இவ்வளவு இடத்தில் மண்ணைப் போட்டு வீணாக்கி விட்டீர்களே!" என்றேன்.

"இதை அப்புறப்படுத்த ஆகும் செலவில் இதைக் காட்டிலும் அதிக இடம் விலைக்கு வாங்கி விடலாம்!" என்றார்.

ஒரு பெரிய தெப்பத்தின்முன் எங்களைக் கொண்டு நிறுத்தி, "இதுதான் கிணறு" என்றார்.

அதன் நீளம் 70 அடி. அகலம் 66 அடி. ஆழம் 30 அடி. அதில் 20 அடி தண்ணீர் கிடந்தது. 27 அடி வரை தண்ணீர் கிடக்குமாம் சில சமயங்களில். 7½ குதிரை வேகமுள்ள எலக்டிரிக் என்ஜின் உதவியால் 4 அங்குலக் குழாய் வழியாகவும், 5 குதிரை வேகமுள்ள ஆயில் என்ஜின் உதவியால் 3 அங்குலக் குழாய் வழியாகவும் தண்ணீர் இறைக்கப் படுகிறது. இரண்டும் சேர்ந்தாற்போல் 24 மணி நேரம் வேலை செய்தாலும் தண்ணீர் வற்றுவதில்லை. சமுத்திரம் போல் கிடக்கிறது தண்ணீர்.

கிணற்றைச் சுற்றிலும் வயல்கள் இருக்கின்றன. அதில் நெல், கரும்பு, வாழை முதலியன பயிரிடுகிறார்கள். கோடையில் சோளம் போடுகிறார்கள். நெல் ஏக்கர் ஒன்றுக்கு 35 கலம் வரை காணுகிறதாம். கரும்பு ஏக்கர் ஒன்றிற்கு 50 டன் வரை கிடைக்கிறதாம். ஒரு நாளைக்கு 15 ஏக்கரா வரை தாராளமாகத் தண்ணீர் பாய்ச்சப் படுகிறதாம்.

இந்தக் கிணறு வெட்டி, கட்டிடம் கட்டி, என்ஜின் வைக்க சுமார் 45 ஆயிரம் ரூபாய் வரை செலவு ஆயிற்றாம்.

"இந்த நிலங்களில் விளையும் நெல், சோளம் முதலியவைகளை மலையில் எங்கள் தோட்டங்களில் வேலை செய்பவர்களுக்கே அனுப்பி விடுகிறோம்" என்றார் பாஸ்கரன்.

"மலையில் என்ன தோட்டம்!" என்றேன்.

"காப்பித் தோட்டம், வாழைத் தோட்டம், ஆரஞ்சுத் தோட்டம் முதலியவைகள். அதற்குக் காலையில் உங்களை அழைத்துப் போகப் போகிறேன்" என்று சொன்னார்.

மறு நாள் காலை மலை ஏறினோம். பாஸ்கரனே காரை ஓட்டி வந்தார். மலைப்பாதை பொதுவாக வளைவுகள் நிறைந்தவை. அபாயகரமாக இருப்பது சகஜம் என்றாலும், இந்த ரோடு இன்னும் செப்பனிடப்படாத ரோடு. பழத் தோட்டங்களுக்கும், காப்பித் தோட்டங்களுக்கும் லாரி, வண்டிகள் போய் ஓரளவு பழக்கப்பட்ட ரோடு.

கோடைக்கானல் தாலுகாவைச் சேர்ந்த கீழ் பழனிமலை என்று பெயர் இந்த மலைக்கு. 4000 அடிக்குமேல் செங்குத்தாகச் சென்று கானல் காட்டை அடைந்தோம். அங்கிருந்து சுமார் ஏழு மைல் மலையிலும் சோலையிலும் நடந்தோம்.

அங்கே 'வாட்டர் பால் எஸ்டேட்' இருக்கிறது. அது அவருடைய எஸ்டேட். அங்கு கணக்கற்ற காப்பிச் செடிகளும், கூட்டம் கூட்டமாக வாழை மரங்களும், பார்க்குமிடங்க ளெல்லாம் ஆரஞ்சுச் செடிகளும் காணப்பட்டன.

பாஸ்கரன் சின்ன வயதில் இத்தனை பெரிய விவசாய சாதனைகளைச் செய்யும் சந்தர்ப்பத்தை வாய்க்கப் பெற்றிருக்கிறார். தந்தையின் மறைவுக்குப் பின் பாஸ்கரனின் மூத்த சகோதரர் வியாபாரத்தைக் கவனிக்கிறார். பாஸ்கரன் தந்தையின் வேலையைத் தொடர்ந்து விவசாயப் பொறுப்பை ஏற்றுத் திறம்பட நடத்தி வருகிறார்.

மலையின் மேல் சென்று, இயற்கை தேவியின் மடியில் அவர் செய்து வரும் சிருஷ்டிகளைக் கவனித்த போது, விவசாயத்தின் மேன்மை மட்டுமல்ல, உழைப்பவர்களை இயற்கை ஏமாற்றுவதில்லை, தன் மடியில் விழுந்தவர்களைப் பூமித் தாய் வேண்டிய வரன்களைத் தந்து ஆதரிக்கிறாள் என்ற உண்மையைக் கண்டேன்.

காப்பிச் செடி உண்டாக்கும் விதம் ஒரு புத்தகமே எழுதலாம். பாஸ்கரன் தனது காப்பித் தோட்டத்தில் எழுபது ஏக்கரில் இப்போது பலன் எடுத்து வருகிறார். நூற்றி மூப்பது ஏக்கரில் இளம் செடியாக இருக்கிறது.

ரோபஸ்ட்டா, அரேபிகா என்ற இரண்டு வித காப்பிகள் அங்கு பயிராகின்றன. சாதாரணமாக எட்டடிக்கு ஒன்றாக காப்பிச் செடி வைக்கப்படுகிறது. ஐந்தடி உயரத்துக்கு மேல் செடிகள் வளர விடப் படுவதில்லை. அப்போதைக்கப்போது கவாத்து செய்கிறார்கள்.

காப்பி நாற்று வைத்து, முன் நிலத்தைப் பண்படுத்தி, மலைச் சரிவுகளில் நிழலுக்காகச் சவுக்கு, முருங்கை மரங்களை 18 அடிக்கு ஒன்றாகக் குச்சி வைத்து உண்டாக்குகிறார்கள். மரங்களையும் பெரிதாக விடுவதில்லை. 12 அடி உயரத்தில் மட்டம் செய்து விடுகிறார்கள். அந்த மரங்களை வெட்டும் தழை காப்பிச் செடிக்கு உரமாகிவிடுகிறது. காப்பிச் செடியைக் கவாத்து பண்ணும் தழைகளும் உரமாகின்றன. காப்பிப் பழத்தின் தோலை ஒரு வருட காலம் தண்ணீரில் ஊற வைத்து விட்டு, பிறகு அந்தத் தோலையும் உரமாக உபயோகிக்கிறார்கள்.

காப்பிச் செடி 5-வது வருடம்தான் காய்க்கவே ஆரம்பிக்கிறது. முதல் பலனை உருவி விட்டு விடுகிறார்கள். ஒரு செடி அப்புறம் இரண்டு வருடத்துக்கு ஒரு முறைதான் பலன் கொடுத்து வருகிறதாம்.

ஒரு செடிக்கு 7 பவுண்டு முதல் 15 பவுண்டு வரை காப்பி கிடைக்கிறதாம். 3-வது பலனில் 30 பவுண்டு வரை கிடைக்குமாம். காப்பிச் செடியின் வயதை 100 வருடம் வரை மதிப்பிடுகிறார்கள்.

காய்த்து முடிந்தவுடன் செடிகளைக் கவாத்து வெட்டுகிறார்கள். 6-வது மாதத்தில் தழைவு எடுத்து விடுகிறது. அப்போது சிம்பு வெட்டுகிறார்கள். அதாவது அதிகச் சிம்பு இல்லாதபடி போதுமான அளவுக்கு வைத்துக் கொண்டு மற்றவைகளை வெட்டி விடுகிறார்கள்.

காப்பித் தோட்டத்தைச் சுற்றி வேலி போட்டாற்போலக் கமலா ஆரஞ்சு மரங்கள் வைத்து உண்டாக்கி யிருக்கிறார்கள். ஒரு மரத்தில் 500 லிருந்து 2000 பழங்கள் வரை ஒரு வருடத்துக்குக் கிடைக்குமாம். உதிர்வதில் 250 லிருந்து 1000 பழம்வரை போய் விடுமாம். உதிர்வதைப் பொறுக்குவதில்லை. அது அப்படியே மக்கி மண்ணோடு மண்ணாகி உரமாகி விடுகிறது.

காப்பியின் இடையிடையே வாழையும் வைத்திருக்கிறார்கள் சில இடங்களில். இது இரண்டுக்குமே நல்லதில்லையாம். தனியாக வாழைத் தோட்டம் 100 ஏக்கரா வரை போட்டிருக்கிறார். அங்கு வைக்கப்பட்டுள்ள வாழைகள் வாழையடி வாழையாக வளர்ந்துகொண்டே வருகின்றன. வாழை குலை எடுத்தவுடன் அந்த மரத்தைத் துண்டு துண்டாக வெட்டி அங்கேயே போட்டு விடுகிறார்கள். அது அடுத்த சிம்புகளுக்காக உரமாகிக் கொள்கிறது.

மலையில் விளையும் பொருள்களை எழுதிக் கொண்டே போனால் கட்டுரையை முடிக்க முடியாது போல் தெரிகிறது. ஆக இத்துடன் நிறுத்திக் கொள்வது என முடிவு செய்து இதோ முடித்து விட்டேன். வளர்க விவசாயம்!



# அமுது படைப்போம்!

பொங்கல் திருநாளன்று காலை, வீட்டை மெழுகி வாசலில் கோலமிட்டாள். கை கோலமிடும் அழகுப் பணியில் ஈடுபட்டிருந்தாலும், அவள் இதழ்கள் பின் வரும் பாடலை மெல்லிய குரலில் இசைத்தன. அந்தப் பாடலை நாமும் சற்றுச் செவிகொடுத்துக் கேட்போம்.

கீழ்த் திசையிலே—புதுநேரர்
கிளர்ச்சி காணுதம்மா!
வாழ்வளிக்கவே—தேவ
தேவன் வாரானே!

பழுங் குலுங்குதம்மா—பசும்
பயிர் சிலிர்க்குதம்மா
உழவர் நாயகன்—வானில்
உலாவ ருகிறானே!

பனிக்கப் பனிச்சிட்டே—மகிழ்ந்த
பனித் துளிகளுமே!
ஒளியின் நாயகன்—காட்சியில்
உவகை கொள்ளுதோ?

பூவும் மலருதம்மா—வானில்
புள்ளினம் பாடுதம்மா!
பூவுல கமெலாம்—வரவு
பூரித்துச் செப்புதம்மா!

உலகத் தோடு நாமும்—கூடி
உவந்து போற்றுவோம்
அலகில் சோதியா னுக்கே
அமுது படைப்போம்—பால்
அமுது படைப்போம்!

சூரிய தேவா நின்னருள் வேண்டுவோம்!
மாரி தவறாது வழங்க வேண்டுவோம்!
வீரமும் கல்வி கேள்வியும் வேண்டுவோம்!
காரியம் எதிலும் வெற்றி வேண்டுவோம்!

போற்றிப் போற்றிச் சூரியனே!
போற்றிப் போற்றிக் கதிரவனே!

# சரித்திர இந்தியா

## கும்ப மேலா – அலஹாபாத்

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஓர் முறை, புண்ணிய கங்கையும் யமுனையும் சங்கமமாகுமிடத்தில் அநேக லக்ஷம் ஹிந்து - பக்த கோடிகள் கூடி சிவபிரானை பூஜிக்கின்றனர். நமது நாட்டு பிரபல உத்ஸவங்களில் இது ஒன்றாகும்.

இந்த உத்ஸவத்தின்போது ப்ரூக் பாண்டின் விற்பனையாளர்கள் அந்த புத்தம் புதிய, சிறந்த தேயிலைக்கு அடிக்கடி ஏற்படும் தேவையைப்பூர்த்தி செய்ய ஓய்ச்சல் ஒழிவின்றி வேலை செய்கின்றனர்.






# ப்ரூக் பாண்ட் தேயிலை

இந்திய தேயிலைகளுள் சிறந்தது

இந்தியாவில் சிறந்த பாக்கெட்டுகளில் கிடைக்கும்

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 32

## "ஏன் என்னை வதைக்கிறாய்?"

சுந்தர சோழர் மிக்க வியப்பு அடைந்தார். மேல் மாடத்திலிருந்து அவ்வாறு தூண்களின் விளிம்பின் வழியாக யார் இறங்கி வருகிறது? எதற்காக வரவேண்டும்? இத்தனை நேரம் கண்ட குழப்பமான கனவுகள் நினைவு வந்தன. இதுவும் கனவிலே காணும் தோற்றமா? இன்னும் தாம் தூக்கத்திலிருந்து நன்றாக விழித்துக் கொள்ள வில்லையா? — இந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகச் சுந்தர சோழர் மறுபடியும் கண்களை மூடிக் கொண்டார். ஒரு நிமிஷ நேரம் அவ்வாறு இருந்து விட்டுக் கண்களை நன்றாகத் திறந்து அந்த உருவம் இறங்கிய திக்கைப் பார்த்தார். அங்கே இப்போது ஒன்றும் இல்லை. ஆகா! அந்தத் தோற்றம் வெறும் பிரமையாகத்தான் இருக்க வேண்டும்.

அவர் உறங்குவதற்கு முன்னால் நிகழ்ந்தவற்றை ஞாபகப்படுத்திக் கொண்டார். முதன் மந்திரியும், அவருடைய சீடனும், இனிய குரலில் பாடிய தியாக விடங்கரின் மகளும் தாம் தூங்கிய பிறகு போய் விட்டார்கள் போலும். மலையமான் மகளும் தாதிமார்களும் வழக்கம் போல் அடுத்த அறையிலே காத்திருக்கிறார்கள் போலும். தமது செல்வத் திருமகளும் அவர்களுடனே இருக்கிறாள் போலும். குந்தவையைக் குறித்துத் தாம் முதன் மந்திரியிடம் குறைகூறியதைச் சக்ரவர்த்தி நினைத்துக் கொண்டு சிறிது வருத்தப்பட்டார். குந்தவை இணையற்ற அறிவும் முன் யோசனையும் படைத்தவள். இராஜ்யத்திலே குழப்பம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு இளவரசனை நாகைப்பட்டினத்தில் இருக்கச் செய்திருக்கிறாள். அதைப் பற்றித் தவறாக எண்ணிக் கொண்டது தம்முடைய தவறு. தமது அறிவு சரியான நிலைமையில் இல்லை என்பது சில காலமாகச் சுந்தர சோழருக்கே தெரிந்திருந்தது. பின்னே, இளைய பிராட்டியின் பேரில் கோபித்துக் கொள்வதில் என்ன பயன்? எதையும் அவளுடைய யோசனைப் படி செய்வதே நல்லது. இப்போது முக்கியமாகச் செய்ய வேண்டியது நாகைப்பட்டினத்திலிருந்து இளவரசனை அழைத்துவர வேண்டியது. கடவுளே! புயலினால் அவனுக்கு யாதொரு ஆபத்தும் நேரிடாமல் இருக்க வேண்டுமே! உடனே குந்தவையிடம் அதைப் பற்றிக் கேட்க வேண்டும்......பக்கத்து அறையில் இருப்பவர்களை அழைப்பதற்காகச் சுந்தர சோழர் கையைத் தட்ட எண்ணினார்...

ஆனால் இது என்ன? தம்முடைய தலைமாட்டில் யாரோ நடமாடுவதுபோல் தோன்றுகிறதே! ஆனால் காலடிச் சத்தம் மிக மெதுவாக, — பூனை, புலி முதலிய மிருகங்கள் நடமாடுவதுபோல், — கேட்கிறது. யாராயிருக்கும்? ஒருவேளை மலையமான் மகளா? தம் குமாரியா? தாதிப் பெண்ணா? தமது உறக்கத்தைக் கலைக்கக் கூடாது என்று அவ்வளவு மெதுவாக அவர்கள் நடக்கிறார்களா?

"யார் அது?" என்று மெதுவான குரலில் சுந்தர சோழர் கேட்டார். அதற்குப் பதில் இல்லை.

"யார் அது? இப்படி எதிரே வா!" என்று சற்று உரத்த குரலில் கூறினார். அதற்கும் மறு மொழி இல்லை.

சுந்தர சோழருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அது அவருக்குக் குழப்பத்தையும் திகிலையும் உண்டாக்கியது. ஒரு வேளை அவளாக இருக்குமோ? அவளுடைய ஆவியாக இருக்குமோ? கனவிலே தோன்றிய கிராதகி இப்போது நேரிலும் வந்து விட்டாளா? நள்ளிரவில் அல்லவா ஆடை ஆபரண பூஷிதையாக வந்து தன்னைத் துன்புறுத்துவது வழக்கம்? இப்போது முன் மாலையிலேயே வந்து விட்டாளா? அல்லது ஒரு வேளை நள்ளிரவு ஆகிவிட்டதா? அவ்வளவு நேரம் தூங்கி விட்டோமா? அதனாலேதான் ஒரு வேளை மலையமான் மகளும் தம் குமாரியும் இங்கே இல்லையோ? தாதிப் பெண்களும் தூங்கி விட்டார்களோ? ஐயோ! அவர்கள் ஏன் என்னைத் தனியாக விட்டு விட்டுப் போனார்கள்? அந்தப் பாதகி,—கரையர் மகளாக இருந்தால் என்னை இலேசில் விடமாட்டாளே? உள்ளம் குமுறி வெறி கொள்ளும்வரையில் போக மாட்டாளே?

அடி பாவி! உண்மையில் நீயாக இருந்தால் என் முன்னால் வந்து தொலை! என்னை எப்படியெல்லாம் வதைக்க வேண்டுமோ, அப்படியெல்லாம் வதைத்து விட்டுப் போ! ஏன் நான் பார்க்க முடியாதபடி தலைமாட்டில் உலாவி என் பிராணனை வாங்குகிறாய்! முன்னால் வா! இரத்த பலி கேட்பதற்காக வந்திருக்கிறாயா? வா! வா! நீதான் மடியில் கத்தி வைத்திருப்பாயே? புலி கரடிகளைக் கொன்ற அதே கத்தியினால் என்னையும் கொன்றுவிட்டுப் போய்விடு! என் மக்களை மட்டும் ஒன்றும் செய்யாதே! நான் செய்த குற்றத்துக்காக அவர்களைப் பழி வாங்காதே! அவர்கள் உனக்கு ஒரு துரோகமும் செய்ய வில்லையடி! நான் தான் உனக்கு என்ன துரோகம் செய்தேன்? கலங்கரை விளக்கத்தின் உச்சியில் ஏறிக் கடலில் விழுந்து சாகும்படி நானா சொன்னேன்? நீயே செய்த அந்தக் கோரமான காரியத்துக்கு என்னை எதற்காக வதைக்கிறாய்?......

சுந்தர சோழர் தம்முடைய தலைமாட்டில் வெகு சமீபத்தில் ஓர் உருவம் வந்து நிற்பதை உணர்ந்தார். திகிலினால் அவருடைய உடம்பு நடுங்கியது. வயிற்றிலிருந்து குடல் மேலே ஏறி நெஞ்சை அடைத்துக் கொண்டது போலிருந்தது! நெஞ்சு மேலே ஏறித் தொண்டையை அடைத்துக் கொண்டது. கண் விழிகள் பிதுங்கி வெளியே வந்துவிடும் போலிருந்தது. அவள்தான் வந்து நிற்கிறாள். சந்தேகமில்லை. அவளுடைய ஆவிதான் வந்து நிற்கிறது! தாம் நினைத்தபடியே கடைசியாக இரத்தப் பழி வாங்குவதற்கு வந்திருக்கிறது. தம் நெஞ்சில் கத்தியால் குத்தித் தம்மைக் கொல்லப் போகிறது. அல்லது வெறுங் கையினாலேயே தம் தொண்டையை நெறித்துக் கொல்லப் போகிறதோ, என்னமோ? எப்படியாவது அவள் எண்ணம் நிறைவேறட்டும்! தாம் இனி உயிர் வாழ்ந்திருப்பதில் யாருக்கும் எந்த உபயோகமும் இல்லை. அந்தப் பேய் தம்மைப் பழி வாங்கி விட்டுப் போனால் தம் மக்களை ஒன்றும் செய்யாமல் விட்டு விடும் அல்லவா?

இன்னும் சிறிது நிமிர்ந்து அண்ணாந்து பார்த்தால், மந்தாகினிப் பேயின் ஆவி வடிவம் தம் கண்களுக்குப் புலனாகும் என்று சுந்தர சோழருக்குத் தோன்றியது. தலைமாட்டில் அவ்வளவு சமீபத்தில் அந்த உருவம் வந்து நிற்பது போலிருந்தது. அதன் நிழல்கூட அவர் முகத்திலே விழுந்தது போலிருந்தது. ஒரு கணம் நிமிர்ந்து பார்ப்பதற்கு எண்ணினார். அவ்வளவு தைரியம் வரவில்லை. "நான் கண்களை இறுக மூடிக் கொள்கிறேன். அது செய்வதை செய்து விட்டுப் போகட்டும்!" என்று தீர்மானித்துக் கண்களை மூடிக் கொண்டார்.

சற்று நேரம் அப்படியே இருந்தார். அவர் எதிர் பார்த்ததுபோல் அவர் நெஞ்சில் கூரிய கத்தி இறங்கவும் இல்லை. அவர் தொண்டையை இரண்டு ஆவி வடிவக் கைகள் பிடித்து நெறிக்கவும் இல்லை.

அந்த உருவம்,—அவர் தலைமாட்டில் நின்ற உருவம்,—அங்கிருந்து நகர்ந்து போய் விட்டதாகத் தோன்றியது.

ஆகா! கரையர் மகள் அவ்வளவு சுலபமாக என்னை விடமாட்டாள். இன்னும் எத்தனை காலம் என்னை உயிரோடு வைத்திருந்து சித்திரவதை செய்ய வேண்டுமோ செய்வாள்! இன்றைக்கு என் கண்ணில் படாமலே திரும்பித்தொலைந்து போய் விட்டாள் போலும்! சரி, சரி! யாரையாவது கூப்பிடலாம். யாராவது இந்த அறைக்குள்ளே வந்தால், இன்னும் இவள் ஒருவேளை இங்கேயே இருந்தாலும் மறைந்து போய்த் தொலைவாள்!

"யார் அங்கே? எல்லாரும் எங்கே போனீர்கள்?" என்று உரத்த குரலில் கூவிக்கொண்டே சுந்தர சோழர் கண்களைத் திறந்தார்.

ஆகா! அவர் எதிரே, மஞ்சத்தின் கீழ்ப்புறத்தில், நிற்பது யார்? அவள் தான், சந்தேகமில்லை! அந்த ஊமையின் பேய்தான்! தலைவிரி கோலமாக நிற்கிறது அந்தப் பேய்! அதன் நெற்றியிலே இரத்தம் சொட்டுகிறது! "இரத்தப் பழி வாங்க வந்தேன்!" என்று சொல்லுகிறது போலும்! சுந்தர சோழர் உரத்த குரலில் வெறி கொண்டவரைப் போல் அந்த ஆவி உருவத்தைப் பார்த்த வண்ணமாகக் கத்தினார்:—

"அடி, ஊமைப் பேயே! நீ உயிரோடிருந்த போதும் வாய் திறந்து பேசாமல் என்னை வதைத்தாய்! இப்போதும் பேசாமல் வதைக்கிறாய்! எதற்காக வந்திருக்கிறாய், சொல்லு! இரத்தப் பழி வாங்க வந்திருந்தால் என்னைப் பழி வாங்கி விட்டுப் போ! ஏன் சும்மா நிற்கிறாய்? ஏன் முகத்தை இப்படிப் பரிதாபமாக வைத்துக் கொண்டிருக்டிருக்கிறாய்? என்னிடம் ஏதாவது கேட்க வந்திருக்கிறாயா? அப்படியானால் சொல்லு! வாய் திறந்து பேச முடியவில்லை யென்றால், சமிக்ஞையினாலே சொல்லு! வெறுமனே நின்று கொண்டு என்னை வதைக்காதே! உன் கண்ணில் ஏன் கண்ணீர் ததும்புகிறது? ஐயையோ! விம்மி அழுகிறாயா, என்ன? என்னால் பொறுக்க முடியவில்லையே! ஏதாவது சொல்லுகிறதா யிருந்தால் சொல்லு! இல்லாவிட்டால் தொலைந்து போ! போக மாட்டாயா? ஏன் போக மாட்டாய்? என்னை என்ன செய்ய வேண்டுமென்று தான் எண்ணிக் கொண்டிருக்கிறாய்? என் அருமை மகனை—சின்னஞ் சிறு குழந்தையை — காவேரி வெள்ளத்தில் அமுக்கிக் கொல்லப் பார்த்தவள் தானே நீ! கடவுள் அருளால் உன் எண்ணம் பலிக்கவில்லை. இனியும் பலிக்கப் போவதில்லை! அடி பாதகி! இன்னும் எதற்காக என் நெஞ்சைப் பிளக்கிறவள் போலப் பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? போ! போ! போக மாட்டாயா? போக மாட்டாயா! இதோ உன்னைப் போகும்படி செய்கிறேன், பார்!......"

இப்படிச் சொல்லிக்கொண்டே சுந்தர சோழர் தமதருகில் கைக்கெட்டும் தூரத்தில் என்ன பொருள் இருக்கிறதென்று பார்த்தார். பஞ்ச உலோகங்களினால் செய்த அகல் விளக்கு ஒன்றுதான் அவ்விதம் கைக்குக் கிடைப்பதாகத் தென்பட்டது. அதை எடுத்துக் கொண்டு, "போ! பேயே! போ!" என்று அலறிக்கொண்டு, மந்தாகினிப் பேயின் முகத்தைக் குறி பார்த்து விசி எறிந்தார். திருமால் எறிந்த சக்ராயுதத்தைப் போல் அந்தத் தீபம் சுடர் விட்டு எரிந்த வண்ணம் அந்தப் பெண்ணுருவத்தை நோக்கிப் பாய்ந்து சென்றது.

அப்போது சுந்தரசோழர் பேய் என்று கருதிய அந்தப் பெண் உருவத்தின் வாயிலிருந்து ஓர் ஓலக் குரல் கிளம்பிற்று.

சுந்தர சோழருடைய ஏழு நாடியும் ஒடுங்கி, அவருடைய உடலும் சதையும் எலும்பும் எலும்புக்குள்ளே இருந்த ஜீவ சத்தும் உறைந்து போயின.

தீபம் அந்த உருவத்தின் முகத்தின் மீது விழவில்லை. சற்று முன்னாலேயே தரையில் விழுந்து உருண்டு 'டணங் டணங்' என்று சத்தமிட்டது.

அகல் விளக்கு அணைந்துவிட்டபோதிலும், நல்ல வேளையாக அந்த அறையின் இன்னொரு பக்கத்தில் வேறொரு தீபம் எரிந்து கொண்டிருந்தது.

அதன் மங்கலான வெளிச்சத்தில் சுந்தர சோழர் உற்றுப் பார்த்து, மந்தாகினியின் ஆவி வடிவம் இன்னும் அங்கேயே நிற்பதைக் கண்டார். அதனுடைய முகத்தில் விவரிக்க முடியாத வேதனை ஒரு கணம் காணப்பட்டது. பின்னர் அது கடைசி முறையாக ஒரு தடவை சுந்தர சோழரை அளவில்லாத ஆதங்கத்துடன் பார்த்துவிட்டுத் திரும்பி அங்கிருந்து போவதற்கு யத்தனித்தது.

அந்த நேரத்திலேதான் சுந்தர சோழரின் உள்ளத்திலே முதன் முதலாக ஒரு சந்தேகம் உதித்தது. இது மந்தாகினியின் ஆவி உருவமா? அல்லது அவளை வடிவத்தில் முழுக்க முழுக்க ஒத்த இன்னொரு ஸ்திரீயா? அவளுடன் இரட்டையாகப் பிறந்த சகோதரியா? அல்லது ஒரு வேளை......ஒரு வேளை......அவளே தானா? அவள் சாகவில்லையா? இன்னமும் உயிரோடிருக்கிறாளா? தாம் நினைத்ததெல்லாம் தவறா? அவளேயாக இருக்கும் பட்சத்தில் அவள் பேரில் தாம் விளக்கை எடுத்து எறிந்தது எவ்வளவு கொடுமை? அவளுடைய முகத்தில் சற்று முன் காணப்பட்ட பரிதாபம் மாறி, விவரிக்க முடியாத வேதனை தோன்றியதே? தம்முடைய கொடூரத்தை எண்ணி அவள் வேதனைப்பட்டாளோ? — ஆகா! அதோ அவள் திரும்பிப் போக



யத்தனிக்கிறாள். எந்தப் பக்கம் போகலாம் என்று பார்க்கிறாள்.

"பெண்ணே! நீ கரையர் மகள் மந்தாகினியா? அல்லது அவளுடைய ஆவி வடிவமா? அல்லது அவளுடன் பிறந்த சகோதரியா? நில், நில்! போகாதே! உண்மையைச் சொல்லிவிட்டுப் போ!..."

இவ்விதம் சுந்தர சோழர் பெருங் குரலில் கூவிக்கொண்டிருந்தபோது தட தட வென்று பலர் அந்த அறைக்குள் புகுந்தார்கள். மலையமான் மகள், குந்தவை, வானதி, பூங்குழலி, முதன்மந்திரி, அவருடைய சீடன்,—அத்தனை பேரும் அறைக்குள்ளே வருகிறார்கள் என்பதைச் சுந்தர சோழர் ஒரு கண நேரத்தில் தெரிந்து கொண்டார்.

"நிறுத்துங்கள்! அவள் ஓடிப் போகாமல் தடுத்து நிறுத்துங்கள்! அவள் யார், எதற்காக வந்தாள் என்பதைக் கேளுங்கள்!" என்று சுந்தர சோழர் அலறினார்.

உள்ளே வந்தவர்கள் அவ்வளவு பேரும் ஒரு கணம் வியப்பினால் திகைத்துப் போய் நின்றார்கள். சுந்தர சோழரின் வெறி கொண்ட முகத் தோற்றமும், அவருடைய அலறும் குரலில் தொனித்த பயங்கரமும் அவர்களுக்குப் பீதியை உண்டாக்கின. மந்தாகினி தேவியை அங்கே பார்த்தது அவர்களை வியப்பு வெள்ளத்தில் திக்குமுக்காடச் செய்தது. இன்னது செய்வது என்று அறியாமல் எல்லாரும் சற்று நேரம் அசைவற்று நின்றார்கள். முதன் மந்திரி அநிருத்தர் நிலைமை இன்னதென்பதையும் அது எவ்வாறு நேர்ந்திருக்கக் கூடும் என்பதையும் ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொண்டார். அவர் பூங்குழலியைப் பார்த்து, "பெண்ணே! இவள் தானே உன் அத்தை!" என்றார்.

"ஆம், ஐயா!" என்றாள் பூங்குழலி.

"திருமலை! ஏன் மரம் போல நிற்கிறாய்? மந்தாகினி தேவி ஓடப் பார்க்கிறாள்! அவளைத் தடுத்து நிறுத்து! சக்கரவர்த்தியின் கட்டளை!" என்றார்.

ஆழ்வார்க்கடியான் தன் வாணாளில் முதன் முறையாகக் குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தான். "ஐயா! அதைக் காட்டிலும் புயற் காற்றைத் தடுத்து நிறுத்தும்படி எனக்குக் கட்டளையிடுங்கள்!" என்றான்.

இதற்குள் பூங்குழலி சும்மா இருக்கவில்லை. ஒரே பாய்ச்சலாக ஓடிச் சென்று அத்தையின் தோளைப் பிடித்துக் கொண்டாள். மந்தாகினி அவளை உதறித் தள்ளிவிட்டு ஓடினாள்.

ஆழ்வார்க்கடியான் சட்டென்று ஒரு காரியம் செய்தான். சற்று முன்னால் முதன் மந்திரி முதலியவர்கள் நுழைந்து



வந்த கதவண்டை சென்று அதைச் சாத்தித் தாளிட்டான். பிறகு கதவை யாரும் திறக்க முடியாதபடி கைகளை விரித்துக் கொண்டு நின்றான்.

வேடர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்ட மானைப்போல் நாலுபுறமும் பார்த்து மிரண்டு விழித்தாள் மந்தாகினி. தப்பிச் செல்வதற்கு வேறு வழி இல்லை என்றும், தான் இறங்கி வந்த வழியாக ஏறிச் செல்ல வேண்டியதுதான் என்றும் தீர்மானித்துக் கொண்டாள். அவள்மேல் மாடியை நோக்கிய பார்வையிலிருந்து அவளுடைய உத்தேசத்தை மற்றவர்களும் அறிந்து கொண்டார்கள்.

சுந்தரசோழர் "பிடியுங்கள்! அவளைப் பிடித்து நிறுத்துங்கள்! அவள் எதற்காக வந்தாள், யாரைப் பழி வாங்க வந்தாள் என்று கேளுங்கள்!" என்று மேலும் கத்தினார்.

தூணின் வழியாக மேல் மாடத்துக்கு ஏறிச் செல்ல ஆயத்தமாயிருந்த மந்தாகினி தேவியிடம் மறுபடியும் பூங்குழலி ஓடி நெருங்கினாள். இம்முறை அவளைப் பிடித்து நிறுத்துவதற்குப் பதிலாகப் பூங்குழலி கையினால் சமிக்ஞை செய்து ஏதோ கூற முயன்றாள். மந்தாகினி அதன் பொருளைத் தெரிந்து கொண்டவள்போல், கீழே விழுந்து கிடந்த அகல் விளக்கைச் சுட்டிக் காட்டினாள்.

இதைக் கவனித்துக் கொண்டிருந்த குந்தவை, "அப்பா! பெரியம்மாவின் பேரில் தாங்கள்தான் விளக்கை எடுத்து எறிந்தீர்களா?" என்று கேட்டாள்.

"ஆம், மகளே! அந்தப் பேய் என்னைப் பார்த்த பார்வையை என்னால் சகிக்க முடியவில்லை. அதனால் விளக்கை எடுத்து எறிந்தேன்!" என்றார் சுந்தரசோழர்.

"தந்தையே! பேயுமல்ல; ஆவியும் அல்ல; உயிரோடிருக்கும் மாதரசியேதான். அப்பா! பெரியம்மா சாகவே இல்லை! முதன் மந்திரியைக் கேளுங்கள்! எல்லாம் சொல்லுவார்!" என்று குந்தவை கூறிவிட்டு, மந்தாகினியும் பூங்குழலியும் மௌன வாக்கு வாதம் செய்து கொண்டிருந்த காட்சியைப் பார்த்தாள். உடனே அந்த இடத்துக்குப் பாய்ந்து சென்றாள்.

"மகளே! அவளிடம் போகாதே! அந்த ராட்சஸி உன்னை ஏதாவது செய்து விடுவாள்!" என்று சுந்தர சோழர் கூவிக் கொண்டே குந்தவையைத் தடுப்பதற்காகப் படுக்கையிலிருந்து பரபரப்புடன் எழுந்திருக்க முயன்றார்.

மலையமான் மகள் வானமாதேவி அவருடைய தோள்களை ஆதரவுடன் பிடித்துப் படுக்கையில் சாய வைத்தாள்.

"பிரபு! சற்றுப் பொறுங்கள்! தங்கள் திருமகளுக்கு அபாயம் ஒன்றும் நேராது!" என்று கூறினாள்.

## அத்தியாயம் 33

# "சோழர் குல தெய்வம்"

குந்தவை தன் அருகில் வந்ததும் மந்தாகினி அவளை ஒரு கணம் உற்றுப் பார்த்தாள். அப்போது யாரும் எதிர்பாராத ஒரு காரியத்தை இளையபிராட்டி செய்தாள். தரையில் விழுந்து மந்தாகினியின் பாதங்களைத் தொட்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தாள். மந்தாகினியின் கண்களில் கண்ணீர் பெருகிற்று. அவள் குனிந்து குந்தவையைத் தூக்கி எடுத்து அணைத்துக்கொண்டாள். பிறகு இளையபிராட்டி அவளுடைய ஒரு கையைத் தோள் வரையில் சேர்த்துத் தன் கையினால் தழுவிப் பிணைத்துக்கொண்டு சக்கரவர்த்தி படுத்திருந்த இடத்தை நோக்கி வந்தாள்.

சக்கரவர்த்தினி இப்போதுதான் மந்தாகினியின் முகத்தை நன்றாகப் பார்த்தார். அவளுடைய நெற்றியிலிருந்து இரத்தம் வழிவதைக் கண்டார்.

"சுவாமி! தாங்கள்தான் விளக்கை எறிந்து காயப்படுத்தி விட்டீர்களா? ஐயோ! என்ன காரியம் செய்தீர்கள்?" என்று மலையமான் மகள் அலறினாள்.

"இல்லை, இல்லை! நான் எறிந்த விளக்கு இவள் பேரில் விழவே இல்லை. அதற்கு முன்னாலேயே இவள் இரத்தக் காயத்துடன் வந்து நின்றாள். ஆனால் இந்தப் பாதகி என்பேரில் பழி சொன்னாலும் சொல்லுவாள்! நீங்களும் நம்பி விடுவீர்கள். நீங்கள் எல்லாருமே அவளுடைய பட்சத்தில் இருக்கிறீர்கள். மலையமான் மகளே! இவளிடம் நீ கூடப் பரிதாபப் படுகிறாயே? இவள் யார் என்பது உனக்குத் தெரியுமா?" என்று சுந்தர சோழர் கேட்டார்.

"தெரியும், சுவாமி! இவர் என் குல தெய்வம். சோழர் குலத்துக்கே தெய்வம். என் அருமை மகன் காவேரியில் மூழ்கிப் போய் விடாமல் காப்பாற்றிக் கொடுத்த தெய்வம் அல்லவா?......"

"ஆகா! நீகூட அவ்விதம் நம்புகிறாயா? குந்தவை ஒருவேளை அவ்வாறு உன்னிடமும் சொன்னாளா?"

"நானே கண்ணால் பார்த்ததைத்தான் சொல்கிறேன். குந்தவையும் அப்போது குழந்தை அல்லவா? அவளுக்கு என்ன தெரிந்திருக்க முடியும்? அருள்மொழியைக் காப்பாற்றியது மட்டும் அல்ல. சோழ நாட்டுக்குத் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்த தெய்வமும் இவர்தானே! தாங்கள் பூதத் தீவில் காட்டுக் கரடிக்கு இரையாகாமல் காப்பாற்றிய தெய்வம் அல்லவா?"

"கடவுளே! அதுகூட உனக்குத் தெரியுமா? இவள் இத்தனை நாள் உயிரோடு இருந்து வருகிறாள் என்பதும் தெரியுமா?"

"சில காலமாகத் தெரியும். தெரிந்தது முதல் இத்தேவியை ஈழ நாட்டிலிருந்து அழைத்து வரும்படி முதன் மந்திரியிடம் சொல்லிக் கொண்டிருந்தேன்......"

"அநிருத்தரே! இது என்ன மகாராணி சொல்லுவது? இவள் உண்மையிலேயே அந்தக் கரையர் மகள்தானா? இவள் உயிரோடுதானிருக்கிறாளா? இவள் இறந்து விட்டாள் என்பது பொய்யா? இவள் ஆவி என்னை வந்து சுற்றுகிறதென்று நான் எண்ணியதெல்லாம் பிரமையா? ஏற்கனவே என் அறிவு குழம்பியிருக்கிறது. எல்லாருமாகச் சேர்ந்து என்னை முழுப் பைத்தியமாக்கி விடாதீர்கள்!" என்றார் சக்கரவர்த்தி சுந்தரசோழர்.

"பிரபு! இவர் கரையர் மகள் என்பது உண்மைதான். இவர் இறக்கவில்லை என்பதும் உண்மைதான். சக்கரவர்த்தி! நான் பெரிய குற்றவாளி. நான் செய்த குற்றத்துக்கு மன்னிப்பே இல்லை. ஆனாலும் தங்கள் கருணையினால்......"

"முதன் மந்திரி! இப்போது தெரிகிறது. கோடிக்கரையிலிருந்து நீர் பலவந்தமாகப் பிடித்துக்கொண்டு வரச் சொன்னவள் இவள்தான்! பல்லக்கில் வந்தவள் அந்த ஓடக்காரப் பெண் என்று நீர் கூறியது உண்மையல்ல!......"

"மன்னர் மன்னா! அடியேனை மன்னிக்க வேண்டும்!"

"ஆகா! மன்னிக்க வேண்டுமாம்! சக்கரவர்த்தி என்றும், மன்னர் மன்னன் என்றும் கூறப்பட்ட ஒருவன் என்னைப் போல் ஏமாற்றப்பட்டது இந்த உலகம் தோன்றிய காலத்திலிருந்து நேர்ந்திராது. எனக்குத் தெரியாமல் ஏன் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும்? ஏன் முன்னாலேயே சொல்லியிருக்கக் கூடாது? இன்று சாயங்காலம் என்னுடன் அத்தனை நேரம் பேசிக்கொண்டிருந்தீர்களே? அப்போது கூட ஏன் சொல்லவில்லை? முதன் மந்திரி! எனக்கு எல்லாம் விளங்குகிறது. பழுவேட்டரையர்கள் சொல்லுவது சரிதான். நீங்கள் எல்லாருமாகச் சேர்ந்து எனக்கு எதிராகச் சூழ்ச்சி செய்கிறீர்கள்!"

"நாங்கள் சூழ்ச்சி செய்தது என்னமோ உண்மைதான். ஆனால் தங்களுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்யவில்லை. எப்படியாவது கரையர் மகளைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்ப்பிக்க வேண்டுமென்று எண்ணினோம். அவள் கடலில் விழுந்து இறந்தது பற்றித் தங்கள் மனம் மிக்க வேதனைப் பட்டுக் கொண்டிருக்கிறது என்று மகாராணியின் மூலமாக அறிந்து நான் இந்த முடிவுக்கு வந்தேன். மகாராணியும் அவ்விதம் ஆக்ஞாபித்தார்கள். ஆனால் அவரை அழைத்து வருவது எளிய காரியமாயில்லை. அவர் உயிரோடிருப்பதாகச் சொன்னால் தாங்கள் நம்புவது சிரமமாயிருக்கும். ஆகையால் எப்படியும் அவரை இந்த ஊரில் கொண்டு வந்து சேர்த்த பிற்பாடு தங்களிடம் சொல்ல எண்ணினேன். நேற்று மாலை கோட்டை வாசலுக்குக் கிட்டத்தட்ட வந்த பிறகு மந்தாகினி தேவி மறைந்து விட்டார். அவருக்குப் பதிலாக இந்தப் பெண் பல்லக்கிலே வந்தாள். இன்றைக்கெல்லாம் தேவியைத் தேடுவதில் ஈடுபட்டிருந்தோம். அவர் பழுவூர் அரண்மனைத் தோட்டத்தின் மதில் ஏறிக் குதித்ததைப் பார்த்துவிட்டுத்தான் என் சீடனும் அவ்வாறு மதில் ஏறிக் குதித்தான். ஆனால் இந்தத் தேவி அகப்படவில்லை. திருமலையைப் பழுவூர் ஆட்கள் பிடித்துக் கொண்டு வந்தார்கள். சக்கரவர்த்தி! என் சீடனை அக் குற்றத்துக்காக மன்னிக்கப்பிரார்த்திக்கிறேன்."

"மன்னிப்பதற்கு இது ஒரு குற்றந்தானா? எவ்வளவோ இருக்கிறது! அப்புறம் சொல்லுங்கள்!"

"அப்புறம், இன்று சாயங்காலம் வரை காத்திருந்தும், பழுவூர் அரண்மனைக்குள்ளே தேடியும், இவரைக் காணவில்லை. தாங்கள் சற்று முன் கண்ணயர்ந்திருந்தபோது நாங்கள் எல்லாரும் அடுத்த அறையில் இவரைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தோம். இவர் எங்கே மறைந்திருக்கக் கூடும் என்றும், இதையெல்லாம் பற்றித் தங்களிடம் எப்படிச் சொல்லுவது, யார் சொல்லுவது என்றும் யோசனை செய்து கொண்டிருந்தோம். அதற்குள் இவராகவே எப்படியோ தங்கள் சந்நிதிக்கு வந்து சேர்ந்திருக்கிறார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று!"

சக்கரவர்த்தி அப்போது மந்தாகினி தேவி இருந்த இடத்தை நோக்கினார். குந்தவை, பூங்குழலி முதலியோர் அந்தப்

...கொண்டிருந்த காயத்தை ஈரத் துணியினால் துடைத்து விட்டு மருந்து கலந்த சந்தனக் குழம்பை அதன் பேரில் அப்புவதைக் கவனித்தார்.

"விடங்கர் மகளே! உன் அத்தையின் நெற்றியில் காயம் எப்படி ஏற்பட்டதென்று கேட்டுச்சொல்வாயா?" என்றார்.

பூங்குழலி இரண்டு அடி முன்னால் வந்து, "கேட்டேன், பிரபு! ஆனால் அத்தை சொல்லும் காரணம் எனக்கே சரியாக விளங்கவில்லை......" என்றாள்.

"என்னதான் சொல்லுகிறாள்? நான் விளக்கை எறிந்ததால் ஏற்பட்ட காயம் என்று சொல்லுகிறாளா?"

"இல்லை, இல்லை! மலைமேல் முட்டிக் கொண்டதால் காயம் பட்டதாகச் சொல்கிறார். இரத்தம் வழிந்ததை அவர் கவனிக்கவில்லையென்றும் கூறுகிறார்..."

சுந்தர சோழர் அப்போது ஒரு மிக அபூர்வமான காரியம் செய்தார். கல கலவென்று நகைத்தார்! அம்மாதிரி அவர் சிரித்ததை மற்றவர்கள் பார்த்துப் பல வருஷங்கள் ஆயின. மீண்டும் மீண்டும் அவர் நினைத்து நினைத்துச் சிரித்தார். அனைவரும் அவரைக் கவலையுடன் உற்றுப் பார்க்கத் தொடங்கினார்கள்.

"மூதன் மந்திரி! எதற்காக என்னை எல்லாரும் இப்படி உற்றுப் பார்க்கிறீர்கள்? எனக்குப் புதிதாகப் பைத்தியம் பிடிக்கவில்லை. பழைய பைத்தியந்தான் மிச்சமிருக்கிறது. இப்போது நான் சிரிப்பதின் காரணம் உங்களுக்கெல்லாம் தெரியவில்லையா? சோழ வள நாட்டில் இவள் மலையில் மோதிக்கொண்டு காயம் பட்டதாகக் கூறுகிறாளே? அதை எண்ணித்தான் சிரித்தேன். மலையைப் பற்றிச் சொல்வானேன்? இங்கே ஒரு சிறிய விக்கிரகம் செய்யக் கூடக் கல் கிடைக்காதே? சோழ சக்கரவர்த்தியின் தலையில் யாராவது கல்லைப் போட விரும்பினால் அதற்குக் கூட ஒரு கருங்கல் கிட்டாதே! இவள் மலைமீது மோதிக் கொண்டதாகச் சொல்கிறாளாமே? எந்த மலையின்மேல் மோதிக் கொண்டாள்? பூங்குழலி! நன்றாகக் கேள்!" என்றார்.

இதை யெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வானதியின் முகத்தில் அப்போது ஒரு பிரகாசம் உண்டாயிற்று. அவள் சட்டென்று இரண்டு அடி முன் வந்து சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தினாள். "ஐயா! எனக்கு ஒன்று தோன்றுகிறது. கட்டளை யிட்டால் சொல்லுகிறேன்!" என்றாள்.

"வேளிர் மகளே! நீ வேறு இங்கே இருக்கிறாயா? உன்னை இத்தனை நேரமும் நான் கவனிக்கவே இல்லையே? இவ்வளவு தடபுடலுக்கும் நீ மூர்ச்சை யடைந்து விழாமல் இருக்கிறாயே? அதுவே ஆச்சரியந்தான்! உனக்கு என்ன தோன்றுகிறது? எதைப்பற்றி? சொல்!" என்று சக்கரவர்த்தி ஆக்ஞாபித்தார்.

"இந்தத் தேவி மலைமேல் மோதிக் கொண்டதால் காயம் பட்டது என்கிறாரே! அதைப் பற்றி எனக்கு ஒன்று தோன்றுகிறது, ஐயா!"

"என்ன? என்ன? நீ புத்திசாலிப் பெண்! உனக்கு ஏதேனும் காரணம் புரிந்தாலும் புரிந்திருக்கும்! சீக்கிரம் சொல்! ஈழ நாட்டில் மலையில் முட்டிக் கொண்டு அந்த இரத்தக் காயத்துடனே இங்கே வந்திருக்கிறாளா?"

"இல்லை, ஐயா! இந்த அரண்மனைத் தோட்டத்தில் சிற்ப மண்டபம் ஒன்று இருக்கிறதல்லவா? அதற்குள்ளே இராவணன் தூக்கிப் பிடிக்கும் கைலாச மலை ஒன்று இருக்கிறது. ஒருவேளை அதில் இவர் முட்டிக் கொண்டிருக்கலாம்!"

இவ்விதம் வானதி சொன்னதும் அத்தனை பேரும் வியப்புக் கடலில் மூழ்கிப் போனார்கள். "இருக்கலாம், இருக்கலாம்!" "அப்படித்தான் இருக்கும்" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள்.

குந்தவை வானதியின் நெற்றியைத் தொட்டுத் திருஷ்டி கழிப்பதுபோல் கையை நெறித்து, "அடி என் கண்ணே! என்ன புத்திசாலியடி நீ! எங்களுக்கெல்லாம் தோன்றாதது உனக்குத் தோன்றியதே!" என்றாள்.

பூங்குழலி அதைக் கோபத்துடன் பார்த்துக் கொண்டிருந்து விட்டு, தன்னுடைய ஊமை அத்தையிடம் சமிக்ஞை பாஷையில் பேசினாள். பின்னர்,

"ஆமாம்; சிற்ப மண்டபத்தில் உள்ள மலைதானாம்! அந்த மண்டபத்தை நான் பார்த்திருந்தால், எனக்கும் அது தெரிந்திருக்கும்!" என்றாள்.

சக்கரவர்த்தி மந்தாகினியை உற்றுப் பார்த்துக் கொண்டே "ஆமாம்; வழி தெரியாமல் தவித்துச் சிற்ப மண்டபத்தில் மலைமேல் முட்டிக் கொண்டிருக்கிறாள். எங்கே போவதற்காக வழி தேடினாளோ, தெரியவில்லை. கடைசியில் இங்கே வந்து சேர்ந்தாள்!" என்றான்.

"தங்களிடம் வருவதற்குத்தான் வழி தேடி இருக்கிறார். அதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் இல்லை. நானே இவர்களிடம் சொல்லிக் கொண்டிருந்தேன். தங்களைத் தரிசிக்காமல் இவ்விடம் விட்டுப் போகமாட்டார் என்று..."

"நான் நம்பவில்லை, முதன் மந்திரி! என்னிடம் இவள் வருவதாக இருந்தால் முன்னமே வந்திருக்க மாட்டாளா? இருபத்தைந்து வருஷமாக வந்திருக்க மாட்டாளா? இத்தனை நாள் பொறுத்திருந்து வருவானேன்? என்னைப் பேயாக வந்து சுற்றுவானேன்? ஆம், ஆம்! இவள் பேய் வடிவத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டிருந்தேன். அதுவும் உண்மை தானே? பேயைப் போலத்தான் ஈழ நாட்டுக் காடு மலைகளில் அலைந்து திரிந்து வந்திருக்கிறாள். நான் இத்தனை காலமும் அரண்மனைச் சுக போகங்களில் ஆழ்ந்து காலங் கழித்திருக்கிறேன். குற்றத்தின் சக்தியைத்தான் என்னவென்று சொல்லுவது? இவளைப் போன்ற உருவத்தைக் கண்டு எத்தனை தடவை என் உள்ளம் பிரமை அடைந்திருக்கிறது? யார் கண்டது? இப்போது வந்ததைப்போல் இதற்கு முன்னாலும் இரகசியமாக வந்து என்னைப் பார்த்துவிட்டுப் போனாளோ, என்னமோ? நான் பிசாசு என்று எண்ணி மிரண்டு வந்தேன்!......இருபத்தைந்து ஆண்டு! இருபத்தைந்து யுகம்!"

இவ்விதம் தமக்குத் தாமே பேசுகிறவர் போலச் சொல்லி வந்த சக்கரவர்த்தி திடீரென்று அநிருத்தரின் பக்கம் திரும்பி, "முதன் மந்திரி! நீர் ஏதோ குற்றம் செய்ததாகச் சொல்லி மன்னிப்புக் கேட்டீரே? அது என்ன குற்றம்?" என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

அநிருத்தர் "சக்கரவர்த்தி! குற்றவாளியிடமே குற்றத்தைப் பற்றிக் கேட்பது தர்மமா?" என்றார்.

"பின்னே, யாரிடம் கேட்கிறது? ஆம்; ஒருவரிடமும் கேட்க வேண்டியதில்லை. உம்முடைய முகத்திலேயே எழுதியிருக்கிறது. இவள் கடலில் விழுந்து இறந்துவிட்டதாக வந்து சொன்னீரே? அதுவே பொய்! இருபத்தைந்து வருஷங்களாக அந்தப் பொய்யை நீர் சாதித்து வந்தீர். நானும் நம்பி வந்தேன். அநிருத்தரே! உண்மையிலேயே உமது குற்றம் மிகப் பயங்கரமானது!......"

"அதற்கு நான் மட்டும் பொறுப்பாளி அல்ல, சக்கரவர்த்தி! கரையர் குல மகளும் பொறுப்பாளிதான்! அவர் கடலில் விழுந்தது என்னமோ உண்மை. பிறகு புனர் ஜன்மம் அடைந்தார். தங்களிடம் அவர் உயிரோடிருப்பதைச் சொல்ல வேண்டாமென்று வாக்குறுதி வாங்கிக் கொண்டார். வாக்குறுதியைக் கொடுக்காவிடில் மறுபடியும் உயிரை விட்டு விடுவேன் என்று சொன்னார். இவையெல்லாம் உண்மையா என்பதைத் தாங்களே அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்."

"கேட்க வேண்டியதே இல்லை! அவ்விதமே இருக்கும். ஆனாலும் நீங்கள் எல்லாருமாகச் சேர்ந்து எனக்கு எதிராகச் சதி செய்கிறீர்கள் என்று நான் கூறியதிலே தவறு ஒன்றுமில்லை அல்லவா?" என்றார் சுந்தர சோழர்.

"நான் செய்த குற்றத்துக்கு மன்னிப்பு இல்லைதான். மன்னிப்பு நான் கோரவும் இல்லை. ஆனாலும் பல வருஷ காலமாக என் மனத்திலிருந்த பாரம் இன்றைக்கு நீங்கி விட்டது. இனி எனக்கு விடை கொடுங்கள். திருவரங்கம் சென்று ஸ்ரீ ரங்கநாதருக்குச் சேவை செய்து என் நாட்களைக் கழிக்க அனுமதியுங்கள்!"

"அது முடியாத காரியம், பிரம்மராயரே! நீர் அன்று செய்த குற்றத்தினால் இன்று எத்தனையோ குழப்பங்கள் நேர்ந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் தீர்த்து வைத்து விட்டல்லவா நீர் ரங்கநாதருக்குச் சேவை செய்யப் போகவேண்டும்?" என்றார் சக்கரவர்த்தி. (தொடரும்)




சீனு

"ஜன்ம விரோதி ஜம்புவிடம் மாட்டிக் கொண்டோமே" என்று எண்ணித் தனது முட்டாள் தனத்துக்காகத் தன்னையே நொந்து கொண்டான் சங்கு.

அன்று அவன் தயாரித்த பண்டங்கள் அவன் தொண்டையிலேயே இறங்க மறுத்தன. காலையில் தடியைக்கண்டதிலிருந்து, இனி ஒரு பக்கமும், ஏமாற்றம் ஒரு பக்கமும் அவனைப் பிடுங்கித் தின்றன என்று கூற வேண்டியதில்லை. வெகு காலமாக அவன் கண்களை உறுத்திக் கொண்டிருந்த ஜமீந்தாரின் கைத்தடி இன்று அவன் மனத்தை மேலும், உறுத்திக் கொண்டிருந்தது. ஜமீந்தாரின் கைத்தடி நவரத்தின கசிதமானது. அதில் எத்தனையோ மணிகள் பதிக்கப் பட்டிருந்தன. அந்தக் கைத்தடி எத்தனையோ லக்ஷக்கணக்கான ரூபாய் பெறுமான முள்ளது என்று கணக்கெடுக்கப் பட்டிருந்தது! அதனால் அதைத் திருடி விட்டால், ஆயுசுக்குக் கவலையில்லை; கரண்டியைத் தொட வேண்டாம்; அடுப்பை ஊத வேண்டாம் என்று நினைத்தான் சங்கு. ஆனால் அவன் காரியத்தில் தோற்றுப் போனான்.

இரவு பதினோரு மணி. சங்கு ஓட்டமும் நடையுமாக மூலை மரத்தடிக்குப் போய்ச் சேர்ந்தான். கையிலிருந்த தடியை முன்னமேயே தோண்டியிருந்த குழியொன்றில் போட்டு மூடினான். தோட்டத்தின் இன்னொரு மூலையிலிருந்த வீட்டை நோக்கி நடையைக் கட்டினான். நிம்மதியாக அன்றிரவு தூங்கும்பொழுது, சங்கு இன்பமயமான கனவுகள் கண்டான். இந்த சங்கு யார் என்று நினைக்கிறீர்கள்? ஜமீந்தார் வீட்டுச் சமையற்காரன்தான் சங்கு.

அதிகாலையில் விழித்துக்கொண்டு, தன் பொறியைத் தொலைக்க, எழுந்து வேலைக்குக் கிளம்பினான் சங்கு. வழக்கத்தை விட வெகு உற்சாகத்துடன் தான் கிளம்பினான். ஆனால், சமையல் வேலையை மும்முரமாகத் தொடங்க முடியவில்லை. காரணம் பங்களாவில் நுழைந்ததுமே, ஒரு விஷயம் சங்குவைத் தூக்கி வாரிப் போட்டது. தூங்கிக் கொண்டிருந்த ஜமீந்தாரின் படுக்கையில், அவரது வலது கைப்புறத்தில், அவரது கைத்தடி - முந்தைய நாள் இரவு அவன் தோட்டத்தில் பதுக்கிய அதே கைத்தடி - சொகுசாகக் கிடந்தது என்றால் அவனுக்குத் தூக்கி வாரிப் போடாமல் என்ன செய்யும்? சங்குவுக்கு நெஞ்சில் ஜுரம் கண்டது. "இனி தப்ப முடியாதே, கடவுளே" என்று எண்ணமிட்டான்.

ஜமீன்தாரின் வலது கை போல் விளங்கி வந்தான் சேவகன் ஜம்பு. ஜமீன்தாரின் மதி மந்திரி ஜம்பு. ஜமீன்தாரின் அரண்மனையில் ஜம்பு வைத்ததுதான் சட்டம். ஆனால் ஜம்புவுக்கும் சங்குவுக்கும் அவ்வளவாக ஒத்துக் கொள்ளாது. எலியும் பூனையும்தான்!

கண் விழித்த ஜமீந்தார், உலாவப் போவதற்கு முன், ஜம்புவைத் தனிமையில் அழைத்து, "என் தலைமாட்டில் இருந்த தடி கிளம்பி, பக்கவாட்டில் புரண்டு கிடக்கக் காரணமென்ன?" என்று புலன் விசாரித்தார்.

"அது ஒரு கதை" என்று சுருக்கமாக முடித்தான் ஜம்பு.

"சரி, புறப்படு, பேசிக் கொண்டே போவோம்" என்று கூறினார். உலாவக் கிளம்பினர் ஜமீந்தாரும் ஜம்புவும். வழியில் ஜம்பு சொல்ல ஆரம்பித்தான்.

"நேற்று இரவு முன் ஜாமத்திலேயே நீங்கள் அயர்ந்து தூங்கிவிட்டீர்கள். சங்கு கை வேலையை முடிக்காமல் வளைய வளைய வந்து கொண்டிருந்தான். அவன் வேவு பார்ப்பதை ரகசியமாய் நான் கவனித்தேன். சிறிது நேரத்துக் கெல்லாம், திருட்டுப் பயல் எல்லோரும் தூங்கி விட்டதாக எண்ணிக் கொண்டு தடியைக் கிளப்பிக் கொண்டு கொல்லைப்புறமாக நழுவினான். நான் பின் தொடர்ந்தேன். தோட்டத்தில் அதைப் பதுக்கியதை ஒட்டு மாமரத்தின் பின்னு

லிருந்து கவனித்த நான், அவன் நகர்ந்ததும், தடியைக் கிளப்பிக் கொண்டு வந்து தங்கள் படுக்கையின்மீது போட்டு வைத்தேன். காலையில் சங்கு பங்களாவில் காலடி எடுத்து வைத்ததுமே, அந்தத் தடியைக் கண்டதில் அவனுக்குப் பெரியதொரு அதிர்ச்சி ஏற்பட்டிருக்க வேண்டும். பாவம், அவன் முகத்தில் ஈயாடவில்லை. 'சங்கு அயோக்கியன்' என்று நான் இத்தனை நாள் கிளிப்பிள்ளைபோல் கூறி வந்ததை நீங்கள் காதில் வாங்கிக் கொள்ளவில்லை" என்று முடித்தான் ஜம்பு. ஜமீந்தார் பதில் ஒன்றும் கூறவில்லை. ஒன்றுமே நடவாததுபோல் பங்களாவுக்குத் திரும்பினார்.

★

"சிப்பந்திகள் அனைவரையும் வெந்நீர் அறைக்கு அழைத்து வா" என்றார் ஜமீந்தார். அவர் குரலில் கடுமையே யில்லையே! சங்குவுக்குத் தலையைச் சுற்றியது; ஜம்புவுக்கோ ஒரே பிரமை!

சாம்பாருக்குப் புளியைக் கரைத்துக் கொண்டிருந்த சங்குவுக்கு, ஜமீந்தாரின் ஓலை வந்ததும், வயிற்றில் புளியைக் கரைத்தது. பேய் நின்றான் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு.

வேலையாட்கள் யாவரும் கூடினர். சப்தநாடியும் ஒடுங்கி நின்றான் சங்கு. ஜமீந்தார் கைத்தடியைக் கொண்டு வரச் செய்து அவன் கையில் கொடுத்து, எரிந்து கொண்டிருந்த அடுப்பில் அதைச் செருகச் சொன்னார்! கைகள் நடுங்கச் சொன்னபடி செய்தான் சங்கு.

ஜமீந்தார் அதற்குமேல் ஒரு வார்த்தையும் பேசாததால் சங்குவுக்கு ஜுரம் சிறிது இறங்கிற்று. ஜம்புவுக்கோ ஆத்திரம் அதிகரித்தது.

சிப்பந்திகள் தனிமையில் கூடிப் பேசினர்: "என்ன பைத்தியக்கார வேலை இது? எஜமானுக்கு மூளைக் கோளாறு ஏற்பட்டு விட்டதா? பவழங்களும் நல்முத்துக்களும் நிரம்பிய— இவ்வளவு காலமும் பொக்கிஷமாய்ப் போற்றி வந்த தடியை— தீக்கிரையாக்க எப்படி மனம் வந்தது?" என்றெல்லாம் பலவாறாகப் பேசிக் குழம்பிக் கொண்டனர்.

"ஜமீந்தாருடைய கைத்தடி. அவர் அதை என்ன வேண்டுமானாலும் செய்யலாம். அதைப் பற்றிக் கவலைப்பட நாம் யார்," என்று நினைத்தபடி அவர் அவன் அறையில் நுழைந்த பொழுது, அவர் கவரை வெறித்துப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். அறைக் கதவை மூடிக் கொண்டு வரும்படி ஜம்புவுக்கு ஜாடை செய்தார். அவர் அருகில் சென்று வாய் திறவாமல் நின்றான் ஜம்பு.

"ஏன் திடீரென்று பேசாமடந்தையாக மாறிவிட்டாய், ஜம்பு?" என்று புன்சிரிப்புடன் கேட்டார் ஜமீந்தார்.

ஜம்புவுக்குச் சிறிது தெம்பு வந்தது. "கைத்தடியை என்னால் மறக்க முடியவில்லை" என்றான் தாழ்ந்த குரலில்.

"கவலைப்படாதே, ஜம்பு! ஒன்றுபோனால் இன்னொன்று. இன்னும் அழகும் வேலைப்பாடும் அமைந்த தடி, நீயே பார்த்துப் பிரமிப்பாய்! அப்பொழுது! இதற்கு ஏன் வருத்தம்?"

"ஜம்பு. இதோ பார்! உன் வருத்தம் நான் அறிவேன். எனக்கு மூளைக் கோளாறு ஒன்றும் இல்லை. என் அருகில் வா. ஒரு ரகசியம் உனக்குக் கூறுகிறேன். அந்த வெள்ளிப் பூண் தடியை வெகு காலமாய்ப் போற்றி வந்தேன். அதற்குள் பொக்கிஷம் அடைந்து கிடப்பதை யாவரும் நம்பினீர்கள். ஆனால் ஏமாந்தது தான் மிச்சம். உங்களனைவரையும் ஒவ்வொரு விதத்தில் ஏமாற்றிய அந்த வெளிப் பகட்டு வெறுந்தடியை அடுப் பெரிய உபயோகித்து விட்டோம். இதோ இந்தப் பெட்டிக்குள் இருப்பதுதான் அசல் தடி! என் பொக்கிஷம் எல்லாம் இதில்தான்! இன்று வரை இந்த ரகசியம் என்னோடு நின்றது" என்று கூறிய வண்ணம் உறையிலிருந்த பளபளப்பான கைத்தடி ஒன்றை உருவினார்.

ஜம்புவுக்குத் தன் கண்களை நம்ப முடியவில்லை. அதே பகட்டு, அதே வேலைப்பாடு, அதே வெள்ளிப் பூண். தீக்கிரையான தடியின் அண்ணன்! அந்த ரகசியம் அவர்களோடு நின்றது. சங்குவுக்குத் தரவேண்டிய தண்டனையும் பாக்கி நின்றது.



## பரதநாட்டிய அரங்கேற்றம்

பம்பாய் சென்ட்ரல் ரயில்வே பிரதம டிராபிக் மானேஜரான ஸ்ரீ எம். ஜி. ஐயரின் புத்திரி குமாரி லக்ஷ்மியின் பரதநாட்டிய அரங்கேற்றம் பம்பாய் பாரதீய வித்யா பவனத்தில் இந்த மாதம் சிறப்பாக நடைபெற்றது. ரஸிகப் பெருமக்கள் ஏராளமாக வந்திருந்து மேற்படி நடனத்தை மிகவும் ரஸித்துப் பாராட்டினர். குமாரி லக்ஷ்மி மாதுங்கா ஸ்ரீ ராஜ ராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திரத்தின் மாணவி.

# தமிழ்க் களஞ்சியம்

டி.கே.சி

## 19. இருக்கிறதாக்கும் சிங்கம்!

தமிழ்ப் புலவர்களுக்கு நாடகம் இயல்பாக வந்து விடும். கம்பருக்கோ சொல்லவே வேண்டாம். தானாகக் குதித்துக் கொண்டு வந்து நிற்கும் நாடகம். அப்படி வந்த நாடகம் ஒன்று.

இரண்யன் — பிரகலாதன் சம்பந்தமான கதையை எத்தனையோ பேர் எழுதித்தான் இருக்கிறார்கள். ஆனால்க் கம்பர் மாதிரி நாடகம், பாத்திரம், உணர்ச்சி பாவங்கள், எல்லாவற்றையும் ஒன்றாகக் கலந்து உருவம் சிருஷ்டித்தது யாரும் இடையாது.

நரசிம்ம மூர்த்தியிடம் அபாரமான பக்தி பிறந்தது பிரகலாதனுக்கு. பிரகலாதன் மூலமாக (கம்பருடைய சிருஷ்டிதான் பிரகலாதன்) கம்பருக்குப் பக்தி பிறந்து விடுகிறது. நமக்கும் பிறக்கிறது என்பதைச் சொல்ல வேண்டாம்.

கம்பரிடம் பக்தி பிறந்து உள்ளத்தில் நிலையாய் நிற்கிறதைக் கொஞ்சம் பார்க்கலாம்.

ஒரு நாடகம்தான்.

கம்பருக்கு ஒரு காட்டின் வழியாகத் தனித்து நடந்து போவதாக ஒரு பகற்கனவு. கவி யுள்ளத்தில் வந்து போவதெல்லாம் நிகழ்ந்த காரியம் என்று எண்ண வேண்டாம். பகற்கனவுதான் எல்லாம்.

ஆம், ஏகாந்தமாகக் காட்டின் வழியாக கம்பர் நடந்து போகிறார். ஒதுங்கிப் படுத்திருந்த புலி ஒன்று எழுந்து திடீரென்று அவர்மேல் பாய்வதற்கு வந்து விட்டது. பயப்படவில்லை கம்பர். புலியை அதட்டிய பாவனையில் பேசுகிறார்:

வெங்கண் சிவந்து,
வெடிவால் முறுக்கி,
வெகுண்டெழுந்(து), என்
அங்கம் பிளக்க
வரும்புலி யே! அன்(று)
இரணிய னைப்
பங்கம் படப்பட
வன்உகி ரால்உரம்
பற்றிஉண் ட
சிங்கம் இருக்கின்
றதுகண்டு கொள்வாய்என்
சிந்தையு ளே.

[வெடிவால் முறுக்கி: நிமிர்த்து நின்ற வாலை இப்படியும் அப்படியுமாக முறுக்கி; என் அங்கம் பிளக்க வரும் புலியே: என் உடம்பைக் கிழிக்க வரும் புலியே; பங்கம் படப்பட: சின்னாபின்னப் பட; வன் உகிரால்: கூர்மையான நகத்தினால்; உரம் பற்றி உண்ட சிங்கம்: மார்பைக் கிழித்து உண்ட நரசிம்ம மூர்த்தி.]

பாடலில் நாடகம், ஹாஸ்யம், பக்தி, தமிழ்ப் பண்பு எல்லாம் கலந்து அழகாய் விளையாடுகிறது. அரிய விருந்து நமக்கு.






ஸ்ரீ கஜானனா புரொடக்ஷன்ஸ்

# மாமியார்

தமிழ்

டைரக்ஷன்

**K. வேம்பு**

நடிகர்கள்:

S.வரலக்ஷ்மி, மனோஹர், கிரிஜா, B.R.பந்துலு, ரேலங்கி, சிவபாக்கியம், பாலசந்தர், சூர்யகாந்தம், சகாதேவன்

ஆர்ட்: வாலி ○ ஸ்டூடியோ: ரேவதி ○ காமரா: பி. எல். ராய் ○ சங்கீதம்: சி. என். பாண்டுரங்கம்

விவரங்களுக்கு:

ஸ்ரீ கஜானனா புரொடக்ஷன்ஸ்
8-E. பிரிகேட் ரோடு, பெங்களூர் கன்டோன்மெண்ட்

புரொடக்ஷன் காரியாலயம்:

ஸ்ரீ கஜானனா புரொடக்ஷன்ஸ்
115-B. மௌபரீஸ் ரோடு — — மதராஸ்-18



# மாலையின் பரிசு

கி. ரங்கராஜன்

உள்ளுக்கும் வாசலுக்குமாக நடந்து நடந்து கல்யாணியின் கால்கள் துவண்டு விட்டன. கடிகாரத்தில் மணி பார்த்துப் பார்த்து அவள் கண்கள் பூத்துவிட்டன.

காலையில் காப்பி கூடச் சாப்பிடாமல் சட்டையை மாட்டிக் கொண்டு வெளியே போன அவள் கணவன் வாசுதேவன் மணி ஒன்பது ஆகியும் வீட்டுக்கு வராதது அவளுக்கு ஆச்சரியமாக இருந்தது. 'இப்படியும் ஒரு புருஷர் உண்டோ?' என்று அவள் ஆச்சரியப்பட்டாள்.

ஒருவிதமாகப் பத்து மணிக்கு வேர்த்து விறுவிறுக்க, காலில் புழுதியும் செம்மண்ணும் அதுவுமாக உள்ளே நுழைந்த வாசுதேவனைக் கல்யாணி ஒரு குறும்புச் சிரிப்புடன் வரவேற்றவளாய், "வீட்டுக் கச்சேரியை மத்தியானம் வைத்துக்கொள்ளப்படாதோ? காப்பி கூடச் சாப்பிடாமல் அதென்ன ஓட்டாட்டம் வேண்டியிருக்கிறது?" என்றாள்.

"நான் ஓட்டாடவா போனேன்? தேதி பதினைந்தாகவில்லை. கையில் காலணா என்றால் காலணா இல்லை. யாரிடமாவது கை மாற்று, வாங்கி வரலாம் என்று வெளியே போனால், ஓட்டாடப் போய்விட்டேன், என்று சொல்லுகிறாய்? நல்ல நியாயம்!" என்று சொல்லிக் கொண்டே பையிலிருந்த ரூபாய் நோட்டுக்களை வெளியே எடுத்து அவளிடம் கொடுத்தான்.

"எண்ணிப் பார், எத்தனை இருக்கிறது?"

"முப்பது இருக்கிறது."

"சரி. வைத்துக் கொள். நீ என்ன செய்வாயோ, எது செய்வாயோ, எனக்குத் தெரியாது! முதல் தேதி வரைக்கும் என்னை இனிமேல் காலணாக்கூடக் கேட்கக் கூடாது. கேட்டும் பிரயோஜனமில்லை!"

"இந்த முப்பது ரூபாய்க்கும் இப்போது செலவு வந்துவிட்டதே!"

"அதென்ன செலவு, அப்படி?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் வாசுதேவன்.

"சொல்லுகிறேன். முதலில் காலை அலம்பிக் கொண்டு காப்பியைக் குடியுங்கள். அது ஆறிப் பச்சைத் தண்ணீராகப் போய்விட்டது!" என்றாள் கல்யாணி.

வாசுதேவன் முற்றத்தில் இறங்கி அவசர அவசரமாய்க் கை கால்களை அலம்பிக் கொண்டான்.

"இப்போது சொல்லு, கல்யாணி! என்ன செலவு வந்துவிட்டது?"

"காப்பி சாப்பிட வேண்டாமா?"

"வேண்டாம். வழியில் சாப்பிட்டு விட்டேன்!"

"கல்கத்தாவிலிருந்து அண்ணா கடிதம் எழுதியிருக்கிறான்."

"இன்று ஞாயிற்றுக் கிழமையாச்சே, தபால் ஏது?"

"எக்ஸ்பிரஸ் டெலிவரியில் வந்திருக்கிறது. கேளுங்களேன். அண்ணாவும் மன்னியும் நாளைக் காலையில் இங்கே வருகிறார்களாம். உங்களை ரயிலடிக்கு வரச்சொல்லி எழுதியிருக்கிறான் அண்ணா. வந்தால் ஒரு வாரமாவது தங்குவார்கள்."

"திடீரென்று எதற்காக வருகிறான்?"

"நான்தான் எழுதினேன். அவனைப்பார்த்து எத்தனையோ நாளாயிற்று. அவனுடைய கல்யாணத்தின் போது பார்த்ததுதானே? நீங்கள் அப்பொழுது கூடப் பார்க்கவில்லை. அண்ணா கல்யாணத்துக்கு நீங்கள் எங்கே வந்தீர்கள்?"

"அதற்காக இப்பொழுது, தம்பதி சகிதமாக வந்து நமக்கு எல்லாம் தரிசனம் தரப்போகிறானோ?"

"உங்களுக்கு எப்படியும் எங்கள் மனுஷ்யாளைப் பிடிக்காது. அது என் பாவம்!" என்று சொல்லிக் கொண்டே, 'விருட்' டென்று சமையற் கட்டுக்குள் பாய்ந்தாள்.

அவளைச் சட்டென்று பிடித்து நிறுத்தி "அடி அசடே! சும்மா விளையாட்டுக்கு ஏதாவது சொன்னால் இப்படிக் கோபித்துக் கொள்ளலாமோ? நாளைக்குக் காலையிலா வருகிறான்! எங்கே கடிதத்தைக் கொண்டு வா படிக்கலாம்" என்றான் வாசு.

கல்யாணி கடிதத்தைக் கொடுத்தாள். அதைப் பிரித்துப் படித்துக்கொண்டே "உன் மன்னிக்கு வயது என்ன இருக்கும்? இருபதா?" என்று கேட்டான்.

"என் வயதுதான். ஆனால் சற்று உயரம்."

"அப்படியா? அவளும் உன்னைப் போலவே நல்ல அழகாக இருப்பாளா?"



"சீ, எப்ப பார்த்தாலும் இந்தப் பேச்சுத் தானா? நான் இப்பொழுதே சொல்லி விடுகிறேன். அண்ணா கௌரவத்துக்கு ஆசைப் பட்டவன். எங்கள் மத்தியில் அந்தப் பெண்ணை, அநாகரிகமாகப் பார்ப்பது, கோணலாகப் பார்ப்பது முதலியவற்றை விட்டுவிட வேண்டும். இல்லா விட்டால் எனக்கு மானம் போய்விடும்" என்று எச்சரிக்கை செய்தான்.

"என்ன, இன்று கல்யாணிக்கு இவ்வளவு கோபமும் சந்தேகமும் வருகிறது! நான் அப்படி எல்லாம் இருப்பேனா? அவ்வளவு முட்டாளா?" என்று அவளைச் சமாதானம் செய்தான் வாசு.

அன்று வாசுதேவன் சீட்டு விளையாடுவதற்கு யார் வீட்டுக்கும் போகவில்லை. வரப் போகும் விருந்தினர்களை எப்படி எப்படி உபசரிப்பது என்ற பிரச்னையில் மூளையைக் குழப்பிக் கொண்டான்.

"நல்ல வேளை, அவர்கள் வரும் போது நான் வெறுங் கழுத்தோடு இருக்காமல் கழுத்து நிறையச் சங்கிலி பண்ணிப் போட்டுக் கொண்டேனே! அதைச் சொல்லுங்கள். காதுக்கு மட்டும் ஒரு வைரத்தோடு வேண்டும். அதையும் நான் பண்ணிக் கொண்டு விட்டால் எனக்கு நிகர் யாரும் இல்லை. இப்பொழுது அதற்கு அவசரமில்லை. நாலைந்து வருஷம் போகலாம். சங்கிலி பண்ணினதில் உங்களுக்கு ஏற்பட்ட சிரமம் இன்னும் தீர்ந்திருக்காது" என்றாள் கல்யாணி.

"சரி, அதைப் பற்றி இப்பொழுது என்ன? நான் அதிகாலையில் ரயிலடிக்குப் போய் விட வேண்டும். சாயங்காலமே 'டாக்ஸி'க்குச் சொல்லி வைத்து விடுகிறேன். நீயும் ரயிலடிக்கு வருகிறாயா?"

"நான் எதற்கு? அண்ணாவை உங்களுக்குத் தெரியாதா? எனக்கு எத்தனையோ வேலை இருக்கிறது. நீங்கள் மட்டும் போய்விட்டு வாருங்கள்."

அடுத்த நாள் அதிகாலையில் வாசுதேவன் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொண்டு ரயிலடிக்குப் புறப்பட்டு விட்டான். அன்று ரயில் அரை மணி தாமதமாக வந்தது.

இரண்டாவது வகுப்பிலிருந்து வாசுவின் மைத்துனன் கோபாலனும் அவன் மனைவி ராதையும் இறங்கினார்கள்.

வாசுதேவனைக் கண்டதும் கோபாலன் "ஹலோ! மிஸ்டர் வாசு. ரொம்ப நாழிகையாகக் காத்துக் கொண்டிருக்கிறீர்கள் போல் இருக்கிறது. என் கடிதம் கிடைத்திருக்குமே!" என்றான்.

"கிடைத்தது" என்று சொல்லிக் கொண்டே, கோபுவின் மனைவி ராதையைப் பார்த்தான் வாசு. பார்த்தவன் அப்படியே அயர்ந்து விட்டான் ஒரு நிமிஷம். பிறகு சமாளித்துக் கொண்டு, "போகலாமா! டாக்ஸி கொண்டு வந்திருக்கிறேன்" என்று சொல்லியபடி அவர்களை அழைத்துக் கொண்டு வெளியே நடந்தான்.

கோபாலனுக்கும், ராதைக்கும் வாசுவின் வீட்டில் ராஜோபசாரம் நடந்தது. கோபாலன் தன் அருமைத் தங்கைக்குக் கல்கத்தாவிலிருந்து விதம் விதமான புடவைகளும், ஜாக்கெட்டுகளும் வாங்கி வந்திருந்தான்.

"என்ன, அண்ணா! இவைகளெல்லாம் ரொம்ப ரொம்ப பிரமாதமாக இருக்கிறதே. இவற்றைக் கொண்டு ஏழு கல்யாணம் பண்ணி விடலாம் போல் இருக்கிறதே!" என்று சந்தோஷத்தோடு சொல்லி ஆச்சரியப் பட்டாள் கல்யாணி. வாசுவுக்கும் அது பெருமையாகவே இருந்தது. தனக்கு அத்தகைய பணக்கார மைத்துனன் வாய்த்ததில் அவன் பெருமை கொள்ளாமல் என்ன செய்வான்?

கோபாலன் மனைவி ராதையும், கல்யாணியுடன் மனம் கலந்து பழகினாள். "அக்கா, அக்கா" என்று சுற்றிச் சுற்றி வந்தாள்.

"இந்தச் சங்கிலி எத்தனை பவுன் அக்கா? புதுசு மாதிரி இருக்கிறதே" என்று அவள் சங்கிலியை வாங்கிப் பார்த்தாள்.

"இந்தப் 'பாட்டர்ன்' நன்றாக இருக்கிறது! இது மாதிரி அந்தப் பக்கங்களில் செய்யத் தெரியாது. இது எத்தனை பவுன்? பத்து பவுனா?" என்று கேட்டாள் ராதை.

"ஏன் உனக்கு இது மாதிரி வேண்டுமா?"

"இதுமாதிரி என்ன? இதையே எடுத்துக் கொண்டு விட்டால்? அதற்குப் பதிலாக

என்னுடைய சங்கிலியைக் கொடுத்து விடுகிறேன். இதுவும் புதிசுதான். பன்னிரண்டு பவுனுக்குப் பண்ணிற்று'' என்று சொல்லிக் கொண்டே தன் கழுத்தில் இருந்த ஒரு சங்கிலியைக் கழற்றி, தன் நாத்தனார் கழுத்தில் போட்டாள் ராதை.

அந்தச் சங்கிலியும் நன்றாகத்தான் இருந்தது. மேலும் எடையிலும் சற்று அதிகம் என்பதை அறிந்த போது பதில் சொல்லாமல் ஏற்றுக் கொண்டு விட்டாள் கல்யாணி.

இந்தச் சங்கிலி பரிவர்த்தனை புருஷர்களுக்குத் தெரியவேண்டாம்; அவர்களாகக் கண்டு பிடித்துக் கேட்டால் சொல்லிக் கொள்ளுவது என்ற ஏற்பாட்டுடன் முற்றுப் பெற்றது அந்த விவகாரம்.

ஐந்தாறு நாட்கள் கழித்துக் கோபாலன் தன் மனைவியுடன் ஊருக்குப் புறப்பட்டு விட்டான்.

ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுவதாகச் சொல்லிவிட்டு, ராதை கல்யாணியிடம் பிரியா விடை பெற்றுக் கொண்டாள்.

இந்த ஐந்தாறு நாட்களில் ராதையின் குணமும் செயலும் கல்யாணிக்கு மிகமிகப் பிடித்து விட்டது. கண்ணில் நீர் கரக்க விடை கொடுத்து அனுப்பினாள்.

அவர்கள் புறப்பட்டுச் சென்ற ஒரு வாரத்துக்குப் பிறகு, கல்யாணிக்கு ராதையிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

''பிரிய சகோதரி, நாங்கள் சௌகரியமாக வந்து சேர்ந்தோம். ஊருக்குப் புறப்படுவதற்கு முன் உங்களிடம் ஒரு விஷயம் சொல்லிவிட்டு வர வேண்டும் என்று நான் நினைத்தேன். ஆனால் அதற்குப் போதிய அவகாசமும், துணிவும் ஏற்படவில்லை. ஒரு கால், இதற்குள் உங்கள் கணவர் அந்த விஷயத்தைச் சொல்லியிருக்கலாம். இருந்தாலும், மறுபடியும் சொல்லுகிறேன், கேளுங்கள்.

''உங்களுடைய கணவர் ஏற்கெனவே, அதாவது உங்கள் விவாகத்துக்கு முன்பே, எனக்குப் பரிச்சயமானவர். அவரும் நாங்களும் ஒரே ஊரில் ஒரே தெருவில் குடியிருந்தோம். அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வந்து போவார். என்னுடைய தகப்பனாருக்கு அவரைப் பிடித்து விட்டது. எனக்குக்கூட, இப்பொழுது உங்களிடம் சொல்லுவதில் என்ன தவறு?—அவரைப் பிடித்திருந்தது. அவரும் நானும் மனம் கலந்து பழகினோம்; பேசினோம், என்னை விவாகம் செய்து கொள்ளுவதாகச் சொன்னார். நான் நம்பினேன்; என் தகப்பனாரும் நம்பினார். ஆனால் உங்களைப் பார்த்த பிறகு அவர் மனம் மாறி இருக்க வேண்டும். ஜாதகப் பொருத்தம் சரி

வில்லை என்று சொல்லி விட்டார். கடைசி வரைக்கும் நம்ப வைத்து எங்களை ஏமாற்றி விட்டார். அதுவும் ஒரு நன்மைக்குத்தான் என்று இப்பொழுது நினைக்கிறேன். நான் செய்த புண்ணியமோ, வேறு யார் செய்த புண்ணியமோ, உங்களுடைய சகோதரர் எனக்குக் கணவராக வாய்த்தார். எங்களுக்கு ஒரு குறைவும் இல்லை. நாங்கள் சௌக்கியமாக இருக்கிறோம். உங்கள் சகோதரர் என்னிடம் தம் உயிரையே வைத்திருக்கிறார்.

உங்களுடைய கணவரும் அதிருஷ்டசாலிதான். இல்லாவிட்டால் உங்களைப் போன்ற ஒரு அழகியை மனைவியாகப் பெறுவது ஏது? கள்ளம் கபடமற்ற வெள்ளையுள்ளம் படைத்த உங்களை மனைவியாகப் பெற அவர் என்ன புண்ணியம் செய்திருக்க வேண்டும்?

உங்களிடம் அவருக்குள்ள அன்பையும் ஆசையையும் நான் சந்தேகிக்கவில்லை.

ஆனால் அவர் தங்களுக்குச் செய்து கொடுத்த, இப்பொழுது என்னிடம் என் பெட்டியில் இருக்கும் அந்தச் சங்கிலியை நினைக்கும்போது சிறிது சந்தேகம் ஏற்படுகிறது.. அப்போதே நான் தெரிந்து கொண்டு விட்டேன், அது தங்கம் அல்ல என்பதை.

நான் தங்களுடன் பழகின அந்த ஐந்நூறு தினங்களில் உங்களுடைய குடும்ப நிலையும் ஓரளவு எனக்குத் தெரிந்தது. என்னுடைய ஞாபகமாக இருக்கட்டும். பரிசு என்று சொல்ல மாட்டேன். நான் கொடுத்த அந்தச் சங்கிலியை ஜாக்கிரதையாகக் காப்பாற்றி கொள்ளுங்கள். சமயத்தில் அது ஈடு கொடுக்கும். உங்கள் அண்ணாவுக்கு நான் சொல்லி விட்டேன்.

அன்புள்ள மன்னி

ராதை.

கடிதத்தைப் படித்து முடித்த கல்யாணிக்கு அப்பொழுது ஏற்பட்ட மெய்ப்பாட்டை இப்பொழுது நினைத்துப் பார்த்து எழுத முடியாது. தன் அண்ணனை வாழ்த்தினான். மன்னி ராதையை வாழ்த்தினான். ஆனாலும் ஒரு சந்தேகம் அவன் மனத்தில் தங்கி அவனை வதைத்தது. தனக்குத் தன் கணவன் செய்து கொடுத்த அந்தச் சங்கிலி, தங்கமல்ல என்று அவளால் நினைக்க முடியவில்லை எப்படியும் ஒரு சமயத்தில் உண்மை வெளியாகும் என்று நினைத்தாள்.

அவள் எதிர்பார்த்த அந்தச் சமயம் விரைவிலேயே ஏற்பட்டு விட்டது.

ஒரு நாள் வழக்கம் போல் ஆபீஸை விட்டு வீட்டுக்கு வந்த வாசுதேவன் சற்று உற்சாகமாகவே வந்தான்.

"கல்யாணி நமக்குக் கடைசியில் விடிவு காலம் வந்து விட்டது. என்னை ஆபீஸில் மானேஜராக உயர்த்தியிருக்கிறார்கள். சம்பளம் இருநூற்று ஐம்பது ரூபாய். வருகிற முதல் தேதி முதல் பதவியை ஒப்புக் கொள்ள வேண்டும். என்ன சொல்லுகிறாய்?"

"சொல்லுவதென்ன. நாலைந்து வருஷங்களில், வெள்ளைத்தோடு மாறி வயிரத்தோடு வந்துவிடும். அப்படித்தானே."

"ஆனால் ஒரே ஒரு சின்ன சிரமம் இருக்கிறது. ஐந்நூறு ரூபாய் 'டிபாஸிட்' கட்ட வேண்டுமே. என்னிடம் இப்போது ஐந்நூறு பைசா இல்லையே!"

"உங்களிடம் இல்லாவிட்டால் என்ன? என்னிடம் இருக்கிறது. தருகிறேன்."

"என்னது!"

"என்னுடைய சங்கிலியைத் தருகிறேன். அதை எங்காகிலும் ஈடு காட்டி ஐந்நூறு ரூபாய் வாங்குங்கள், வெண்ணெயை வைத்துக் கொண்டு யாராவது நெய்க்கு அழுவார்களா?"

"ஐயோ கல்யாணி. நீ உண்மையை அறியாமல் இப்படிச் சொல்லுகிறாய். நான் உனக்குச் செய்து தந்த நகை தங்கம் அல்ல. அது ஐந்து ரூபாய் கூடப் பெறாதே!"

"ஐந்து ரூபாய் பெறாதா" என்று திடுக்கிட்டவன் போலக் கேட்டாள் கல்யாணி.

"ஐந்து காசு கூடப் பெறாது. கல்யாணி உன்னை நான் மனமறிந்து ஏமாற்றிவிட்டேன்."

"அது போனால் போகிறது. இதோ இதைப் பாருங்கள். இது எத்தனை ரூபாய் பெறும்?" என்று சொல்லிக் கொண்டே தன் மன்னி தனக்குக் கொடுத்து விட்டுப் போன அந்தச் சங்கிலியைக் கொடுத்தாள்.

வாசுதேவன் அதைத் தன் கையில் வாங்கிப் பார்த்தான்.

"இது ஏது?"

"இது என் மன்னி எனக்குக் கொடுத்தாள். நீங்கள் எனக்குக் கொடுத்த சங்கிலியை அவளுக்குக் கொடுத்து விட்டேன்."

"ஐயோ, கல்யாணி என்ன காரியம் செய்து விட்டாய்? அது தங்கம் அல்லவே! உன் அண்ணன் உண்மையை அறிந்தால் விபரீதமாகி விடுமே!" என்று சொல்லிப் பதறினான்.

"ஒரு விபரீதமும் ஆகாது. அதன் உண்மை ஸ்வரூபம் அறிந்துதான் என் மன்னி அதை மனமகிழ்ச்சியோடு பெற்றுக் கொண்டு, தான் அணிந்திருந்த விலையுயர்ந்த சங்கிலியை எனக்குக் கொடுத்து விட்டுப் போயிருக்கிறாள்."

"முன்பு அவளை விவாகம் செய்து கொள்ளுவதாகச் சொல்லி ஏமாற்றினீர்கள். அவள் அந்த விவரத்தை எல்லாம் கதை கதையாக எழுதியிருக்கிறாள். அவள் உங்களிடம் முன்பு கொண்டிருந்த அன்புக்கு அடையாளமாகவும் தன் கணவனின் சகோதரி என்ற முறையில் எனக்காகவும், இந்தச் சங்கிலியை இப்போது கொடுத்திருக்கிறாள். நல்ல சமயத்துக்கு இது உதவும் என்று அவள் எழுதியிருக்கிறாள். அதன்படியே இதைப் பெற்றுக் கொண்டு உங்களுடைய உத்தியோக உயர்வுக்கு வழி தேடிக் கொள்ளுங்கள். இந்தாருங்கள் பிடியுங்கள்!" என்று சங்கிலியை நீட்டினாள்.

வாசுதேவன் ஒன்றும் புரியாமல் கல்யாணியைப் பார்த்துக் கண்களை அகல விழித்தான்.

# மாப்பிள்ளை ராமு

கே. ஏ. எஸ்.

வக்கீல் வரதராஜய்யங்கார் தன் கையிலிருந்த கடிதத்தை மீண்டும் ஒரு முறை படித்துவிட்டு உரக்க, "மைதிலி, மைதிலி...! என்றார். மைதிலி வந்ததும் "உன் அண்ணு வெங்கிட்டு கடிதம் போட்டிருக்கிறான்! அவன் சிநேகிதன் ராமஸ்வாமி உன்னைப் பார்க்க வருகிறானும்! உன் அம்மாவிடம் போய்ச் சொல்லு!" என்றார். ஆனல் அதற்கு அவசியமே யில்லாமல் போயிற்று. "என்ன விசேஷம்?" என்று கேட்டுக் கொண்டே ருக்மிணியம்மாளே அங்கே வந்தாள்.

மைதிலி விஷயத்தைக் கூறியதும் "ஏதோ போகட்டும்! பெருமான்தான் பார்த்து நன்ருக நடத்தி வைக்க வேண்டும்! உன் அப்பா புத்திதான் கோணலாயிற்றே!" என்ருள் ருக்மிணியம்மாள்.

"இதோபார், ருக்மிணி! மைதிலி போகும் இடத்தில் கண்ணைக் கசக்கக் கூடாது! அதற்குத்தான்" என்று அய்யங்கார் ஆரம்பித்தார்.

"ஆமாம்! அதற்குத்தான் வருகிற வரனை யெல்லாம் வக்கீல் மாதிரி கேள்வி கேட்கிறீர்கள்! போதுமே! எனக்கு நாத்தனர் வாய்த்த அழகும் கணவன் வாய்த்த லக்ஷணமும்!" என்று கூறிக் கொண்டே ருக்மிணியம்மாள் உள்ளே சென்ருள்.

"உம்...உன்னைச் சொல்லி என்ன? நம்மைப் படைத்தானே! அவனைத்தான் சொல்ல வேண்டும்" என்று கூறிக்கொண்டே அய்யங்கார் வெளியே சென்ருர்.

மதுரையில் பிரசித்தி பெற்ற வக்கீல் வரதராஜய்யங்கார். 'கிரிமினல்' 'ஸிவில்' எல்லாம் அவருக்குத் தண்ணீர் பட்டபாடு. வரதராஜய்யங்கார் ஒரு கட்சிக்காக ஆஜராகிருரென்ருல் எதிர்க்கட்சி ஆளுக்குக் கலக்கம்தான். அடித்துப் பேசுவதில் அய்யங்காருக்கு நிகர் அய்யங்கார்தான்.

கோர்ட்டில் சந்தேகத்தை ஆதாரமாக வைத்துக் கொண்டே பலருக்குக் கேஸை வெற்றிகரமாக்கிய அய்யங்கார் வீட்டிலும் சந்தேகத்திற்கு முதல் இடம் கொடுத்தார். தொட்டதற்கெல்லாம் சந்தேகம்.

ஒருமுறை அவருக்கு ஒரு பெரிய மனிதர் டீ பார்ட்டி கொடுத்தாராம். வரிசையாக நண்பர்களுடன் உட்கார்ந்திருந்த அய்யங்கார் பார்ட்டி ஆரம்பமாகுமுன் நண்பர்களிடம் "எந்த ஹோட்டலிலிருந்து இன்று பக்ஷணம் வரவழைத்திருக்கிறீர்கள்?" என்று கேட்டவுடன் "குமார் கபே" என்று பதில் வந்தது.

"அடடா, மேல மாசி வீதி சுப்ரமணிய அய்யர் இந்த ஹோட்டலில் சாப்பிட்டு விட்டுத்தான் இரண்டு வருஷத்திற்கு முன்னல் தீராத வயிற்று வலியால் கஷ்டப்பட்டார்!" என்று கூறிக் கொண்டே எழுந்து விட்டதாகக் கேள்வி.

அவருடைய சந்தேகங்களுக்கு அஸ்திவாரம் போட்டுப் பெரிய கட்டிடம் கட்டியவன் விதந்துவான அவர் தமக்கை.

"அக்கா, நான் நேற்று ராத்திரி தும்மினேனே?" என்று வினவுவார் தம்பி.

"ஆமாம், அம்பி! ராத்திரியே கேட்க வேண்டு மென்றிருந்தேன். ஆனல் எழுந்திருந்து கேட்க முடியவில்லை. அம்பி! எதற்கும் இன்றைக்கு வெந்நீரிலேயே ஸ்நானம் செய்! குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்தால் ஜலதோஷம் பிடித்துக் கொள்ளும்!" என்று அக்கா உத்தரவு போடுவாள்.

"ஜலதோஷத்துடன் போனல் பாதகமில்லையே, அக்கா! முத்துஸ்வாமி தெரு சிவப்பு மாடி வீட்டில் குடியிருந்த மோகனசுந்தரத்தைத் தெரியுமல்லவா? அவர் அப்படித்தானே குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்து 'டபிள் நிமோனியா'வில் போய் விட்டார், உனக்குத் தெரியுமே!"



"ஆமாம், ஆமாம்! அம்பி, பத்திரம்!"

ருக்மிணி இதையெல்லாம் கேட்டுக் கொண்டேயிருப்பாள். கடைசியில் பொறுக்க முடியாமல் "போதும் உங்கள் பிதற்றல்!" என்று கூறிச் சம்பாஷணைக்கு ஒரு முற்றுப் புள்ளி வைக்கும் வரையில் பேச்சு நடந்து கொண்டே யிருக்கும்.

அப்படிப்பட்ட அய்யங்கார் தமது ஒரே பெண்ணான மைதிலிக்கு விவாகத்தை எளிதில் செய்துவிடுவாரா? மைதிலி நல்ல அழகி. படித்தவள். எனவே அலசிஅலசிப் பார்த்தார். படிப்பு இருந்தால் பணம் இல்லை. பணம் இருந்தால் அழகு பூஜ்யம். ஆகவே வரன்கள் தட்டிக் கொண்டே வந்தன. படிப்பு, பணம், அழகு மூன்றும் இருந்த ரிட்டையர்டு கலெக்டர் கிருஷ்ணய்யங்கார் புதல்வன் மைதிலியை வந்து பார்த்தான். அவனுக்கு மைதிலியை மணந்து கொள்ளப் பூரண சம்மதம்தான்.

அய்யங்கார் கனைத்துக் கொண்டு, "ஆமாம்! என் பெண்ணை உனக்குக் கொடுக்கிறேன் என்று வைத்துக் கொள். நீ பம்பாயிலிருக்கிறாய்! வீடு கிடைக்காவிட்டால் என்ன செய்வாய்?" என்று கேட்டார்.

"இதென்ன பிரமாதம்! வீடு கிடைத்தவுடன் அவளை அழைத்துக் கொள்கிறேன்!" என்றான் அவன்.



"சரி! முதலில் வீட்டைப் பிடித்துக்கொள். அப்புறம் அவள் கரத்தைப் பிடிக்கலாம்!" என்றார் அய்யங்கார். அவன் கோபத்துடன் போய்விட்டான். இதில் அவர் தமக்கையைத் தவிர மற்றெல்லாருக்கும் அதிருப்தி!

"பார்த்தாயா அக்கா? இந்தப் பையனுக்கு மைதிலியின் மேல் உண்மை ஆசை இல்லை! தத்துப் பித்தென்று என்னவோ உளறுகிறான்!" என்றார் அய்யங்கார்.

இதேமாதிரி பெண்பார்க்க வந்த வேறு ஒருவனை, "என்பெண்ணை நீ எப்படி வைத்துக் கொள்வாய்!" என்று அய்யங்கார் கேட்டவுடன் வெல வெலத்துப் போனான் அவன்.

கடைசியில் தமது ஒரே மருமானுக்குக் கல்யாணம் செய்து பார்க்காமல் அவருடைய தமக்கை காலமானாள்.

வரதராஜய்யங்கார் வீட்டிற்குப் போய் மனிதன் பெண்ணைப் பார்ப்பானா என்ற நிலைமை ஏற்பட்டு விட்டது. அந்தச் சமயத்தில்தான் கோயமுத்தூரில் படித்துக்கொண்டிருந்த அவர் புதல்வன் வெங்கிட்டு கடிதம் எழுதியிருந்தான்.

* *

வெள்ளிக்கிழமை யன்று காலையிலிருந்து வீடு அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது. கடைசியில் ஒரு மணிக்கு ராமஸ்வாமி மட்டும் வந்தான். புது விதமாக இருந்த பொழுதிலும் மைதிலிக்கும் மற்றவர்களுக்கும் அவனை மிகவும் பிடித்து விட்டது.

அய்யங்கார் இந்தத் தடவை வாயைத் திறப்பதில்லை என்ற விரதம் கொண்டிருந்தார்.

"எங்கே பெண்ணை ஒரு பாட்டு பாடச் சொல்லுங்கள்" என்றான் ராமஸ்வாமி. மைதிலி ஒரு கீர்த்தனையை முடித்ததும், "சுமாராக இருக்கிறது! குற்றம் சொல்ல முடியாது! சாரீரம் அவ்வளவு...பரவாயில்லை...ஞானம் தான் கொஞ்சம் குறைவு!" என்றான் ராமஸ்வாமி.

அய்யங்கார் பதில் பேசவில்லை. ராமஸ்வாமி அவரைப் பார்த்து, "உங்களிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டுமே!" என்று கேட்டான்.

"என்ன?" என்றார் அய்யங்கார்.

"வந்து:......அதாவது......நான் இதுவரை பத்து பதினைந்து இடங்களுக்குப் பெண் பார்க்கப் போயிருக்கிறேன்! அவர்களில் ஒருவராவது......"

"அப்பொழுது இது சம்மதமா?' என்று வினவினார் அய்யங்கார்.

"கொஞ்சம் பொறுங்கள்! பெண் பார்ப்பதென்றால் விளையாட்டா! நமது வாழ்க்கையை ஆரம்பிக்கிறோ மல்லவா! பெண்ணுக்கு அழகு மட்டும் இருந்தால் போதுமா! உதாரணமாகக் குடும்பத்தை நடத்தத் தெரிய வேண்டாமா! சரி, அது போகட்டும்! இப்பொழுது சொல்லுங்கள்! உங்கள் பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதால் எனக்கு லாபம் என்ன? நஷ்டம் எவ்வளவு! இதற்குப் பதில் சொல்வீர்களா?"

அய்யங்கார் ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்திருந்தார். கேள்வி கேட்டு அவர் பழக்கப் படுத்திக் கொண்டிருந்தாரே ஒழியப் பதில் சொல்லி அவருக்குப் பழக்கமில்லை.

இப்பொழுது மைதிலி முன் வந்தாள், தைரியமாக ராமஸ்வாமியிடம்.

"நான் இதற்குப் பதில் சொல்லலாமா?" என்றாள், அவன் சம்மதத்திற்காகக் காத்துக் கொண்டிராமல்.

"ஆகா, பேஷாய்ச் சொல்லலாம்!" என்றான் ராமஸ்வாமி.

"லாபம், உங்கள் உடம்பை ஓட்டலில் சாப்பிட்டுக் கெடுத்துக் கொள்ளாமல் இருப்பது! கஷ்டம்......அது அனுபவத்தில்தான் தெரிய வரும்!" என்றாள் மைதிலி.

அய்யங்கார் பதில் பேசவில்லை. ஏதோ டிராமா பார்ப்பதுபோல் உணர்ச்சி அவருக்கு.

"தேவலையே!" என்றான் ராமஸ்வாமி. உடனே "அது சரி! உனக்கு மாமியார் ஒரு தூமகேதுவாகவும் காத்தனூர் ராக்ஷஸியாகவும் சேர்ந்து ஒருவருக்கொருவர் சண்டை போட்டுக் கொண்டால் நீ யார் பக்கம் சேர்ந்து கொள்வாய்?" என்றான்.

"எந்தப் பக்கம் ஜயிக்குமென்று தோன்றுகிறதோ, அங்கேதான்!"

"பேஷ்! மூன்றாவது கடைசிக் கேள்வி! நான் கோபக்காரன்! என்னை எப்படிச் சமாளிப்பாய்?"

"இதென்ன பிரமாதம்! பெரிய பெரிய யுத்தங்களை கண்ணீரால் நின்றிருக்கிறதே!"

ராமஸ்வாமி எழுந்து போய்விட்டான். அய்யங்கார் சுய உணர்வு வெகுநேரம் சென்ற பின்தான் அடையப் பெற்றார்.

இரண்டு மூன்று தினங்களில் வெங்கிட்டு விடமிருந்து மற்றொரு கடிதம் வந்தது. அதில் 'ராமஸ்வாமிக்குப் பரம சம்மதம்! மைதிலிக்குப் பிடித்திருந்தால் முகூர்த்தம் வைக்கவும். பையனுக்குப் பூர்வீக சொத்து இருக்கிறது. அத்துடன் பெரிய பரீக்ஷைக்கும் படித்துக் கொண்டிருக்கிறான். இந்த வரனை நழுவ விடாதீர்கள்' என்று எழுதியிருந்தான் வெங்கிட்டு.

"அதென்ன ருக்மிணி! உலகத்தில் கண்டும் கேட்டுமறியாத விஷயம் போலிருக்கிறது! நான் இருக்கிறேன், மைதிலியை என்னென்னவோ கேள்வி கேட்கிறானே! பையனுக்கு ஏதாவது......" என்று இழுத்தார் அய்யங்கார்.

"ஆமாம்! நீங்கள் கலெக்டர் பையனையும் மிராசுதார் பையனையும் குறுக்குக் கேள்வி கேட்கவில்லையா? அப்பொழுது உங்கள் மூளையைப் பற்றிச் சந்தேகிக்க மாட்டார்களோ? எல்லாம் இந்த வரனை நிச்சயம் செய்யத்தான் வேண்டும்! மைதிலியும் சம்மதித்து விட்டாள்!" என்றாள் ருக்மிணி.

"அமெரிக்கா, லண்டனில் கூட இதை நான் கேள்விப் பட்டதில்லை. உம்......நடக்கட்டும்!" என்றார் அய்யங்கார். மைதிலி ராமஸ்வாமியின் மனைவி ஆனாள்.

* * *

அந்த வருஷம் தலை தீபாவளிக்கு ராமஸ்வாமி வந்திருந்தான். வாசல் முன் அறையில் மைதிலியும் அவள் கணவனும் உட்கார்ந்து அரட்டை யடித்துக்கொண்டிருந்தார்கள். வரதராஜய்யங்கார் கூடத்தில் போடப்பட்டிருந்த ஈஸிசேரில் கண்ணை மூடிக்கொண்டபடி படுத்திருந்தார்.

"என்ன, மைதிலி! நான் மட்டும் அன்று அப்படிச் சாமர்த்தியமாகக் கேள்வி கேட்டு உன் அப்பாவை வாயைத் திறக்க வொட்டாமல் பண்ணியிருக்காவிட்டால் உனக்கு இது தலை தீபாவளியாக இருக்க முடியுமா?" என்று கேட்டான் ராமஸ்வாமி.

"அடேயப்பா! பெரிய கேள்வி கேட்டுவிட்டீர்கள்! போன வருஷம் அண்ணா லீவில் வந்திருந்தபொழுது அப்பா படுத்தும் பாட்டைப் பார்த்துவிட்டு, நானும் அவனும் சேர்ந்து இந்தக் கேள்விகளைத் தயாரித்தோம். அண்ணா உங்களுக்குக் கேள்வியைக் கொடுத்துவிட்டு எனக்கு லெட்டர் எழுதியிருந்தான். பெரிய புளி ஆயிற்றே நீங்கள்!"

மைதிலியும் அவள் கணவனும் சேர்ந்து சிரித்தார்கள்.

இதைக் கேட்ட அய்யங்கார் அங்கு வந்த மனைவியிடம் மெதுவான குரலில் எல்லாவற்றையும் கூறிவிட்டு, "நம்ம மைதிலியைக் கல்யாணம் பண்ணிக் கொண்டதால் ராமஸ்வாமி பெரிய பெரிய பரீக்ஷைகளெல்லாம் 'பாஸ்' செய்து விடுவான்!" என்றார்.






## பரம்பரை குண மேன்மை

எத்தனையோ ஆண்டுகளாக இந்தியப் பெண்மணிகள் தங்கள் கூந்தலை அழகு படுத்த டாம்கோ பரிமள கூந்தல் தேங்கா யெண்ணெயைத்தான் உபயோகித்து வந்துள்ளனர். அதன் பாரம்பரிய குண மகிமையால் இந்த இரகசியம் மேலும் தலைமுறை தலைமுறையாக தவறாமல் அனுசரிக்கப்பட்டு வருமென்பதற்கு ஐயமில்லை. நீங்களும் அதை அறிந்து கொள்ளுங்கள். உங்கள் கூந்தல் மிருதுவாயும் பளபளப்பாயும் விளங்க டாம்கோ பரிமள கூந்தல் தேங்கா யெண்ணெயை தினம் உபயோகியுங்கள்.



## டாம்கோ பரிமள கூந்தல் தேங்கா யெண்ணெ




ரோஜா, மல்லிகை, லவண்டர் என்ற மூவித வாசனைகளில் கிடைக்கும்.



டாம்கோ தேங்கா யெண்ணெ ஷாம்பூவினால் உங்கள் கேசத்தை வாரம் இரு முறை அலசிக் கழுவுங்கள்

டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# பயத்தின் காரணம்



துரோணன்

முதன் முதலாக அவர் என்னைக் கண்டதும் ஏதோ பேயைக் கண்டுவிட்டது போல் ஓடினார். எனக்கே இது ஒரு புதுமாதிரியான ஆச்சரியமாகத்தா னிருந்தது. பின்னர் சந்தைக் குள்ளிருந்த பழைய இரும்புச் சாமான் கடைக்கு எதிரில் போய், ஒரு பெரிய அரிவாளைப் பேரம் தீர்த்துக் கொண்டிருந்தேன். ஆனால் பாவம்! தற்செயலாக அதே கடைப் பக்கம் வந்து கொண்டிருந்த அந்தப் பெரிய மனிதர் மீண்டும் என்னைக் கண்டு ஓட்டமாக ஓடிக் கூட்டத்திற்குள் மறைந்து விட்டார்!

இப்படி ஒரு தடவையா, இரண்டு தடவையா? நாலைந்து தடவைகளாகிவிட்டன. மூன்று தினங்களுக்கு முன்பும் கூட இப்படித் தான். கடைத் தெருவில் தற்செயலாக நேருக்கு நேராகச் சந்திக்கும்படி நேரிட்டு விட்டது. அப்பொழுதும் கூட இப்படியே தான். ஒரு கால் என் உருவத்திலேயே ஏதோ ஒரு பயமுறுத்தும் தன்மை இருக்கின்றதோ என்றுகூட எனக்குச் சந்தேகம் தோன்றிற்று.

எவ்வளவோ யோசித்தும், எனக்கொன்றும் விளங்கவில்லை. நல்ல இலட்சணமான வாட்ட சாட்டமான ஒரு பெரிய மனிதர் அதிலும், ஒரு குடும்பஸ்தர் போன்ற அவர் முன்பின்னறியாத என்னிடம் என்ன பயங்கரத்தைக் கண்டுவிட்டார்? ஒருகால்—நான் யாரென்பதைத் தெரிந்து கொண்டுவிட்ட ஒரு ‘கிரிமினல்’ பேர்வழியாக இருக்குமோ?

சீ, சீ! அப்படியிருக்க முடியாதென்று என் மனச்சாட்சி கூறிற்று. பின்னர்? — என்னை அவர் ஏதோ ஒரு வேண்டாத பந்துவாகவோ, அல்லது என்போலுள்ள யாரிடமாவது கடனோ பட்டிருக்க வேண்டும். அதனால்தான் அப்படிப் பயந்து ஓடுகிறார் என்ற முடிவுக்கு நான் வந்தபோது அவர் மீது எல்லை மீறிய பச்சாத்தாபம் தான் எனக்கு ஏற்பட்டது. பாவம், எப்படியாவது அவரைச் சந்தித்து என்னைப்பற்றிய அபிப்பிராயத்தை மாற்றிவிட வேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டேன். மேலும் அவருடைய பயங்கொள்ளித் தனத்தின் இரகசியமும் விளங்கு மல்லவா? ஆனால், ஒவ்வொரு நாளாகக் கழிந்து என்னுடைய ஒரு மாத ‘ரஜா’க் காலமும் தீர்ந்துவிடும்போலிருந்தது.

* * *

மேலாவிலிருந்து அன்று காலைதான் எனக்கு உத்தரவு வந்திருந்தது. வேலூர்ச் சிறையில் காலரா நோய் பரவியிருப்பதாகவும், அங்குள்ள கைதிகளை உடனடியாக வேறு சிறைக்கு மாற்ற வேண்டியதின் நிமித்தம், மேற்கொண்டு ரஜா கோராமல் மறுதினமே வந்து சேரும்படிக்கும் எனக்கு அறிவிக்கப்பட்டிருந்தது. அன்று மாலை தற்செயலாக என்னுடைய வெகுநாளைய நண்பன் ராஜுவைச் சந்தித்து அவனுடன் அரட்டையடித்துக் கொண்டே ‘காந்தி பார்க்’ பெஞ்சியில் வந்து உட்கார்ந்து கொண்டேன். ஊர் விஷயம், உலக விஷயமெல்லாம் பற்றிச் சற்று நேரம்தான் பேசிக்கொண்டிருந்தோம். கூப்பிடு தூரத்தில் அந்தப் பெரிய மனிதர் போய்க் கொண்டிருந்தார். நல்ல வேளையாக நான் இருப்பதை அவர் கவனிக்கவில்லை போலும்! உடனே என் நண்பனைத் தூண்டி, “அந்த மனிதரை உனக்குத் தெரியுமா?” என்று பரபரப்புடன் கேட்டேன். எனது கேள்வியினால் அவன் சிறிது ஸ்தம்பித்து விட்டான். பின்னர், “என்ன? உனக்கு அவரைத் தெரியாதா?” என்று என்னையே எதிர்க் கேள்வி போட்டான்.

“தெரிந்தால் உன்னை ஏன்டா கேட்கிறேன்? சொல்லித் தொலையேன்!” என்று நான் துரிதப்படுத்தவும், அவன், “போடா, போ! நீ உத்தியோகம் பார்த்து நாசமற்றுப் போனாய்! இவரைத் தெரியாது என்று வெட்கமில்லாமல் சொல்லிக்கொள்கிறாயே!” என்று பதில் கூறி என்னைச் சோதனையிலாழ்த்திவிட்டான். ஆனால், அதிக நேரம் என் மூளைக்கு வேலை கொடுக்காமல், “அவரைக் கூப்பிடட்டுமா?” என்று கேட்டு வைத்

தான். நான் தலையசைக்கவும், நாலைந்து தடவை கையைத் தட்டினான். அவரும் நாலா திக்கிலும் நோக்கிவிட்டு இவனைக் கவனிக்கும்போது, நானும் என் பயங்கர முகத்தைவேறுபக்கம்திருப்பிக்கொண்டேன்!

அவர் எங்களைச் சமீபித்தவுடன், பாவம், அவர் முகம் பேயறைந்தது போல் வெளிறி விட்டது! நல்ல வேளையாக என் நண்பன் அவரைக் கையைப் பிடித்து, தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டான். பின்னர், அவன் என்னை நோக்கி; "இவரைத் தெரியாமல் ஏதோ திருட்டுப் பயல்போல் விழிக்கிறாயே! இவரும் ஒரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்தாண்டா! புதுக்கோட்டை பீமசேன ராவ் என்ற பெயர் உனக்குத் தெரிந்திருக்க வேண்டுமே! கடைசியாக, தியாக சமுத்திரம் இலாக்காவில் இருந்து விட்டு, 'ரிடையர்' ஆகி இப்பொழுதுதான் ஒரு வருஷமாகிறது. இவர் நானிருக்கும் பாணுதுரை சந்நிதித் தெருவில்தான் இருக்கிறார்" என்றான். இவ்விதம் எனக்கு அறிமுகப் படுத்தின உடனேயே நான் ஆச்சரியத்துடன் அவரை நோக்கினேன். இதேபோல் என்னைப் பற்றியும் நான் வேலூரிலிருந்து ஒரு மாத ஓய்வில் வந்திருக்கும் போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் என்று அவருக்கு அறிமுகப்படுத்தி விட்டு, பள்ளிக்கூட வாழ்வில் நான் வாங்கின அடி, உதைகள் முதற் கொண்டு விஸ்தரிக்க ஆரம்பித்து விட்டான். ஆனால் அவரோ, இதிலெல்லாம் கவனமின்றியே என்னுடைய ஒவ்வொரு அங்கத்தையும் மிரண்ட விழிகளுடன் நோட்டமிட ஆரம்பித்தார். பின்னர், இலேசான ஒரு அசட்டுச் சிரிப்புடன், "இது உங்கள் சொந்த ஊரா?" என்றார். நான் தலையசைத்தேன். பின்னர், ராஜுவை நோக்கி, "என்ன, வேலூரிலா இவர் இருக்கிறார்?" என்று மீண்டும் ஒரு முறை கேட்டார். அவன் அதை வற்புறுத்திக் கூறவும், அவர் திடீரென்று என் கைகளைக் குலுக்கிக் கொண்டே, "ஏன் ஸார், அவன் அங்கேதான் இருக்கிறானே?" என்றார் பரபரப்புடன்.

நான் ஒன்றும் விளங்காமல், "நீங்கள் யாரைக் கேட்கிறீர்கள்?" என்றேன் மனத்தில் குழப்பத்துடன்.



"அவன்தான் ஸார், அவன்தான் படைவெட்டி மாணிக்கம்!" என்றார் தடுமாறிக் கொண்டே. அவருடைய விசாரணையினால் எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஆனால் அவர் முகமோ பரிதாபமாக இருந்தது.

"ஸார், நான் ஏதோ கேட்கிறேனே என்று நினைக்காதீர்கள். எங்கே, உங்கள் வலது காலில் உள்ள 'பூட்ஸை'க் கழற்றுங்கள்" என்றார். அவரது வேண்டுகோளின்படியே நான் அதைக் கழற்றி யெறிந்தவுடன் அவர் வியப்புடன் என் காலைக் கூர்ந்து பார்த்து விட்டு, பரபரப்புடன் என் கரங்களைக் கெட்டியாகப் பற்றிக் கொண்டார்.

"ஸார்! ஒரு வாரத்துக் கப்புறம் இன்றைக்குத்தான் நான் நிம்மதியாகத் தூங்குவேன்!" என்று மகிழ்ச்சியுடன் அவர் உரக்கக் கூவினார்.

இந்த நாடகத்தைப் பார்த்துக்கொண்டிருந்த என் நண்பன் ஒன்றுமே புரியாமல் எங்கள் இருவர் முகங்களையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"அப்படி யென்ன ஸார், உங்களுக்குப் பயம்?" என்றேன்.

"பயமா? நன்றாகச் சொன்னீர்கள்! அவனுடைய வரலாறு ஒரு நாவல் மாதிரி, ஸார்" என்றார் சற்றே பீதியுடன்.

"அப்படியா!" என்று நான் மிகுந்த ஆர்வத்துடன் கேட்டேன்.

"உங்களுக்குச் சொன்னால் நம்ப மாட்டீர்கள். ஏதோ கட்டுக் கதையோ என்று நீங்கள் நினைக்கக் கூடும். ஆனால், இந்தப் போலீஸ் இலாக்காவிலே நீங்களும் எத்தனையோ அனுபவமெல்லாம் பட்டிருந்தாலும் கூட, என் இருதயம் போலவே உங்களுக்கும் அமைந்திருக்காது அல்லவா?" என்ற முதல் பீடிகையுடன் அவர் துவங்கினார்:

2

நானும் போலீஸ் இலாக்காவில் 'சப் இன்ஸ்பெக்டர்' என்ற பெயருடன் அடி வைத்து எப்படியோ இருபத்தெட்டு வருஷங்களை ஓட்டினேன். எனக்குக் குழந்தைப் பருவ முதலே, சிறு பூனையைக் கண்டால் கூட நடுக்கம் தான். இப்படிப் பட்டவன்

காகப் போலீஸ் இலாக்காவும், தனி அதிகாரிகளும் எவ்வளவோ சிரமப் பட்டார்கள். ஒவ்வொரு சமயம் பரிசுகள் கூட ஏற்படுத்தி அவனைப் பிடிப்பதென்று பார்த்தார்கள். ஆனால் யார்தான் துணிந்து யமன் வாய்க்குள்ளே போவார்கள்? விஷயங்கள் இந்த ரீதியில் போய்க் கொண்டிருக்கையில்தான், எங்கேயோ கிடந்த என்னைக் கொண்டு வந்து இந்தப் பிராந்தியத்திற்கு மாற்றினார்கள். 'சரி, நான் தான் தட்டுக் தடுமாறி என் இதயத்தை வெளிக் காட்டிக்கொள்ளாமல் காலத்தை ஓட்டி வந்தேன். மிச்ச மிருந்தது ஒரு ஐந்தாறு வருஷ சர்விஸ்தான். இந்தக் காலத்தில் தான், புதுக்கோட்டை வட்டாரத்தையே நாசமாக்கிக் கொண்டிருந்த 'படைவெட்டி மாணிக்கம்' வந்து சேர்ந்தான். அடேயப்பா! நினைத்தாலும் வயிற்றைக் கலக்குகிறது. ஆள் பெரிய ஆஜானுபாகுவாக இருப்பான். ஒரே மூச்சில் ஒன்பது வேலிகளைத் தாண்டுவான். கையில் கோலையெடுத்துக் கொண்டு சுழற்ற வாரம்பித்து விட்டால், ஒரு படையையே சாய்த்து விடுவான். — ஏன், இவனைப் பற்றி அங்கே வேலூர் ஜெயிலிலே உங்களுக்குத் தெரிந்திருக்குமே?'' என்று இடையே ஒரு கேள்வியைப் போட்டார் என்னை நோக்கி. நான் அவர் போக்கின்படியே தலையசைக்கவும் மீண்டும் தொடர்ந்தார்.

''அவன் நடத்தியிருந்த களவு, கொலைக் கேசுகள் மட்டும் ஒரு தனிக் கட்டு. இவனுக்



பூமியில் இருப்பதில் கடவுளுக்கு விருப்பமில்லை' என்று எண்ணிக் கொண்டே கல்லாக் கோட்டைக்கு வந்து சேர்ந்தேன்.

இரண்டு மாதங்களாகி விட்டன. மேலாவிருந்தோ கடுமையான உத்தரவுகளெல்லாம் தினமொன்றாகச் சீறிக்கொண்டு வந்துகொண்டிருந்தன. நானும் எவ்வளவோ உபாயங்களெல்லாம் பார்த்து விட்டேன். ஒன்றும் உருவாக நடந்து விடவில்லை.

ஊருக்கு வடக்கே சரவணன் தோப்பு என்று பெயர் போன காடு உண்டு. எங்கும் இலந்தை மரங்களும் கருவை மரங்களும் தான். அந்தத் தோப்புக்குள் சூரிய வெளிச்சம் விழுந்தே யாரும் பார்த்திருக்க மாட்டார்கள். அதற்குள்ளே ஒரு பாழடைந்த கிணறும் ஒரு முனீசுவரன் கோவிலும் இருக்கிறது. அந்த இடத்தில்தான் மாணிக்கத்தின் வாசம் என்று அறிந்தோம். என் சகாக்கள் ஒரு யோசனை சொன்னார்கள். அதாவது, மாணிக்கத்திற்குப் புகையிலை யென்றால் ரொம்பப் பிரியம். இதை வைத்துக் கொண்டு தந்திரத்தினால் பிடித்துவிடலா மென்பதுதான். அதுவும் எப்படி? எனக்குப் பெண் வேஷம் போட்டு



கிழிந்த கோட்டு அணிந்திருப்பவர் (தையற்காரனைப் பார்த்து):—ஏன் ஐயா, தையற்காரரே! இந்தமாதிரி கோட்டு ஒன்று தைத்துக் கொடுக்கிறீரா?

தையற்காரர்:—நான் நல்ல கோட்டாகத் தைத்துக் கொடுத்து விடுகிறேன். நீங்கள்தான் அந்தமாதிரி செய்து கொள்ள வேண்டும்!

வித்து என்னையே அனுப்பி விடுவதென்று! ஏற்கெனவே எனக்கு இந்தக் கலையில் தேர்ச்சி உண்டாகையால் உடன்பட்டேன்.

"அந்திமயங்கும் நேரம். நான் உருப்படுத்தியிருந்த சில புரியாத பாஷைப் பாட்டுடன் குறத்தி வேஷத்தில் தோப்பைக் கடக்க வாரம்பித்தேன். எனக்கு அன்று நல்ல காலமோ போதாத காலமோ தெரியவில்லை; அந்த மாணிக்கம் எதிர்ப்பட்டான். என் உடல் ஒரு தரம் வியர்த்து விட்டது. இருந்தாலும் அச்சமயம் கடவுள் எனக்குத் தைரியத்தைத்தான் கொடுத்தார். மடியில் செருகியிருந்த பையை எடுத்து அதிலிருந்த வெற்றிலைப் பாக்கை ஒய்யாரமாகப் போட்டுக் கொண்டேன். அவனும் என்னைச் சமீபித்து மரத்தடி வேரின்மீது உட்கார்ந்தான். நான் சற்றே பிகுவுடன் எழுந்திருக்கவும், அவன் என் கையைப் பிடித்தான். அப்பப்பா! நான்கு வளையல்கள் சுக்கல் சுக்கலாக நொறுங்கின. அடுத்த கணம், அவன் ஒரு கேலி நகைப்புடன் என் கையிலிருந்ததைப் பிடுங்கிக் கொண்டான். நான் பொய்க் கோபத்துடன் குரலை மாற்றிக் கொண்டே வாயில் வந்தபடி உளறினேன். மீண்டுமொரு கேலி நகைப்புடன் உல்லாசமாக அவன் கீழே படுத்தான். அடுத்த கணம் நான்,

"தூரமடி சொக்கநாடு—தில்லேலேலோ
தூங்கிவர வேணுமடி—தில்லேலேலோ!"

என்று உரத்த குரலில் பாடிக் கொண்டே கைத் தகரக் குவளையைத் தட்டித் தாளமிட்டேன். (இதுதான் எங்கள் ஊழியர்களுக்கு ஒத்திகையிடப் பெற்றிருந்த சமிக்ஞை) அவ்வளவுதான்! வரிசையாக ஒருவர் மேல் ஒருவராக அவன்மீது வந்து விழுந்தனர். ஐயோ! அந்த அரை மணிப் போராட்டத்தை இப்பொழுது நினைத்தாலும் கலங்குகிறது!

இத்துடன் நிறுத்திவிட்டு மிஸ்டர் பீமசேன ராவ் எழுந்திருக்க நினைத்தார் போலும்!

"அதென்ன ஸார்! அதற்குள் நிறுத்தி விட்டீர்களே! அப்புறம் என்ன ஆயிற்று? இவ்வளவு வருஷங்களுக்குப் பின்பும்கூட மாணிக்கத்தைப் பற்றிய பயம் உங்களுக்கு இருக்க வேண்டியதன் காரணம் என்ன?" என்று கேட்டேன் நான்.

அவர் தொடர்ந்தார்:—

"அப்புறம் என்ன? புதுக்கோட்டை நீதி மன்றத்தில் கேஸ் நடந்தது. வேலூர் சிறையில் மாணிக்கத்திற்கு ஆறு வருஷம் கடுங் காவல் தண்டனை கிடைத்தது. எனக்கும் இலாக்காவில் நல்ல பெயர் என்று வைத்துக் கொள்ளுங்களேன்! இது நடந்து ஒரு மாதத்திற்குப் பின் உத்தியோகக் காரியமாக நான் வேலூர்ச் சிறைக்குப் போக வேண்டியிருந்தது. தற்செயலாக என்னைக் கண்டு விட்ட மாணிக்கம் அப்பொழுது என்ன சொன்னான், தெரியுமா? "துரைவாள்! சாகசம் பண்ணி என்னைப் பிடித்துக் கொடுத்து விட்டதாக நீ இறுமாப்புக்கொள்ள வேண்டாம். இந்த ஆறு வருசத்தையும் ஆறே நாளாகப் போக்கிவிட்டு வந்து சேருகிறேன். நீ உத்தியோகத்திலே இருந்தாலும் சரி, எங்கேயாலும் மாற்றலாகிப் போனாலும் சரி, என் அரிவாளாலே தான் உனக்கு முடிவுகாலம். தெரிஞ்சிச்சா?" என்றான் ஏக வசனத்தில். அப்பொழுது அவனது கூர்மையான விழிகளும், ஆக்ரோஷம் நிரம்பிய வார்த்தைகளும் எப்படி யிருந்தன!

அதன் பின்னர், எப்படியோ ஐந்து வருஷங்களைக் கழித்துவிட்டுப் போன வருஷம் 'ரிடையர்' ஆனேன். வேலூர்ச் சிறையில் சூப்பிரண்டாக இருந்தவரிடம் 'சார்ஜை' ஒப்புவித்து விடும்படிக்கு உத்திரவு இருந்ததால் மீண்டும் அங்கு போகும்படிக்கு நேர்ந்தது. நானும் எவ்வளவோ முயற்சித்து அவன் கண்களில் படாமலிருக்க நினைத்தும் முடியவில்லை. இந்த வயசு காலத்தில் என் உருவத்திலும் சில மாறுதல்கள் இருந்தும் கூட அந்தக் கொலைகார மாணிக்கம் என்னை மறக்கவேயில்லை, ஸார்! கம்பிக்குள்ளிருந்தவாறே, "எசமானே! இன்னும் பதினொரு மாசகாலம், ஞாபகமிருக்கட்டும்! அதுவரையில் நீ சாகாமல் எனக்காக இரு!" என்று விரலையாட்டிக் கொண்டே கர்ஜித்தான்.

மிஸ்டர் ராவ் மீண்டும் சற்று நிறுத்தி விட்டு ஏதோ சந்தேகத்துடன் என்னை நோக்கினார். பின்னர், கனைத்துக் கொண்டே, "இப்பொழுது சொல்லுங்கள் ஸார்—வருஷம் ஒன்றாகிறது. அவனும் அநேகமாக விடுதலையடைந்து வெளியில் வந்திருப்பான்......" என்று கூறிவிட்டுக் குழம்பினார்.

"ஏன் ஸார், இப்பொழுது பத்து தினங்களாக நீங்கள் என்னைக் கண்டபோதெல்லாம் ஏன் அப்படிப் பதுங்கினீர்கள்?" என்றேன்.

"அதை ஏன் ஸார் கேட்கிறீர்கள்! அப்படி ஒன்றும்..." என்று சொல்ல வந்த வார்த்தைகளை விழுங்கிக் கொண்டிருந்தார் ராவ்.

"பரவாயில்லை, சொல்லுங்களேன்!" என்று நான் உற்சாகப்படுத்தினேன்.

"உங்களுக்கும், அந்த மாணிக்கத்திற்கும் கொஞ்சம்கூட வித்தியாசமே இல்லை. போதும் போதாததற்கு என் எதிரிலேயே அரிவாள் ஒன்றை வேறு நீங்கள் வாங்கி என் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டீர்கள்! ஆனால் நீங்கள் பூட்ஸை போடாமலிருந்தால் நான் காலைக் கவனித்து விட்டு அந்த ஆறாவது விரல் இல்லையென்பதைக் கொண்டு தைரியமாக நடமாடி யிருப்பேன், ஸார்! இப்போது என்னைப் பரிகாசம் செய்ய மாட்டீர்களே?" என்றார் ராவ்.

"ஆக, என்னைக் கைதியான கொலைகார மாணிக்கமாகவே கருதி விட்டீர்கள்!" என்று சிரித்துக் கொண்டே கூறிவைத்தேன். ஆனால் மிஸ்டர் ராவ் கூறியது உண்மை! என் இலாகாவிலேயேகூட நான் உடுப்பின்றி இருக்கும் தருணமெல்லாம் சார்ஜண்டு துரை என்னைக் கேலி செய்வதுண்டு. இதை அப்பட்டமாக இவரிடம் ஒப்புக் கொள்வானேன்!

"எப்படியானால் என்ன ஸார்? கடந்த ஒரு வாரம் எனக்குத் தூக்கமில்லை. இன்றைக்கு வேண்டுமானால் நான் கொஞ்சம் நிம்மதியாகத் தூங்கலாம். ஆனாலும் ஏதோ ஒரு நாள் மாணிக்கத்தின் பரிசு எனக்குக் கிடைக்காமலா இருக்கப் போகிறது? நீங்களும் பத்திரிகையில் பார்க்கத்தான் போகிறீர்கள்!"— என்றார் மிஸ்டர் ராவ். அவரது தொனி பரிகாசமாக இருந்தாலும், அதில் ஆழ்ந்த கிலியும் பிரதிபலிப்பது நன்றாகத் தெரிந்தது.

"மிஸ்டர் ராவ்! இன்றைக்கு மட்டுமென்ன? என்றைக்குமே நீர் நிம்மதியாகத் தூங்கலாம். போம்" என்று கூறிக்கொண்டே அவரது முதுகில் தட்டினேன்.

ராவ் குழம்பியவாறே விழித்தார். சட்டைப் பையில் அன்று காலை எனக்கு வந்திருந்த உத்தரவை யெடுத்து அவரிடம் நீட்டினேன். அதை ரொம்பவும் ஆர்வத்துடன் அவர் நோக்கினார். என் நண்பனும் ஆச்சரியத்துடனே அதை நோக்கினான். அடுத்த கணம் அவர் எல்லையில்லா மகிழ்ச்சி மிகுதியுடன், "ஸார், ஸார்!" என்று கூவிக் கொண்டே என் முதுகில் தட்டினார்.

அந்த உத்தியோக பூர்வமான உத்தரவில், வேலூர்ச் சிறையில் காலரா நோயின் கொடுமை பற்றி விஸ்தரித்திருந்ததுடன், நேற்று அந் நோய்க்குப் பலியான மூன்று கைதிகளின் பெயர்களும் குறிப்பிடப்பட்டிருந்தன. அந்த மூன்றாமவனது பெயர்தான்: 317ம் நெம்பர் கைதி படை வெட்டி மாணிக்கம்!

* *

பீமசேன ராவ் என்னிடமிருந்து விடை பெற்றுக் கொள்ளும்பொழுது அவரது முகத்தில் குடியிருந்த நிரந்தரமான கிலி மறைந்தோடி விட்டது! அவரைத் தொடர்ந்தே, "நீ எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் இங்கேயே உட்கார்ந்து இரு! எழுதுவதற்கு விஷயம் கிடைத்துவிட்ட பின்னர் இனி இங்கு ஒரு நிமிஷம்கூட என்னால் உட்கார்ந்திருக்க முடியாது!" என்று கூறிக்கொண்டே ஓடி விட்டான் என் நண்பன் ராஜு.

# சகோதர பாகம்

சோம்பேறி ஒருவனுக்குப் பணம் தேவையாக இருந்தது. வேலை செய்யாமல் பணம் சம்பாதிப்பதற்கு ஏதாவது வழி இருக்கிறதா வென்று யோசித்துப் பார்த்தான். பக்கத்துத் தெருவில் ஒரு பெரிய பணக்காரன் வசிப்பது அவனுக்கு ஞாபகம் வந்தது. உடனே அவனிடத்தில் போனான்.

"சகோதரனே! நீயும் நானும் ஆதாமின் பிள்ளைகளல்லவா?" என்று அவனிடம் பீடிகை போட்டான். அவனை அறிந்து கொள்ள முடியாத பணக்காரன், "ஆமாம், இப்பொழுது அதற்கென்ன?" என்று சோம்பேறியைக் கேட்டான்.

"அப்படியானால் உனக்குடையவைகளையெல்லாம் என் சகோதர பாகத்தைப் பிரித்துக் கொடுத்து விடு" என்று விஷயத்தை வெளியிட்டான் சோம்பேறி.

பணக்காரன் சற்று நேரம் யோசித்து விட்டு 'உன் சகோதர பாகம்தானே வேண்டும். இதோ தந்து விடுகிறேன்" என்று கூறி வீட்டுக்குள்ளே போனான்.

சோம்பேறிக்குத் தன் உரிமைப் போராட்டத்தின் வெற்றியை நம்ப முடியவில்லை. பணக்காரன் வெளியில் வருவதை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். பணக்காரன் சிறிதுநேரத்தில் வெளியில் வந்தான். "சகோதரனே, உலக மக்கள் அனைவரும் ஆதாமின் பிள்ளைகளாதலால் அவர்களும் என் சகோதரர்கள். அத்தனை பேர்களுக்கும் எனக்குடையவைகளைப் பங்கிட்டு உன்பாகத்தைக் கொண்டு வந்திருக்கிறேன்" என்று சொல்லிக் காலணாவை நீட்டினான் பணக்காரன்.

அப்போது சோம்பேறியின் முகத்தில் அசடு வழிந்தது. —ஜே. பொன்னையா.





KIPAK
INHALANT RUB
COLDS











## கணியூர் ஸ்ரீனிவாசன்

### காட்சி 1

[மாலை ஐந்து மணி. மூர்த்தி ஆபீஸி லிருந்து வீட்டுக்கு வருகிறான்.]

மூர்த்தி :—(உள்ளே நுழைந்தவாறே) மைதிலி! மைதிலி!

[கூடத்தில் அவளைக் காணாமல் சமைய லறைக்குள் சென்று தேடுகிறான். அங்கு அவள் ஒரு மூலையில் முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு அமர்ந்திருக்கிறாள்.]

மூர்த்தி :—மைதிலி! என்ன சமாசாரம்? ஏன் இப்படி அசோகவனத்துச் சீதை மாதிரி......

மைதிலி :—(ஆத்திரத்துடன்) என்னை ஒரு பொருட்டாக மதித்து நான் கேட்டதை வாங் கிக் கொண்டு வராமற்போனாலும் பரிகாசம் பண்ணவாவது தெரிகிறதே!......

மூர்த்தி :—(ஒன்றும் விளங்காமல்) மைதிலி! நீ என்ன சொல்கிறாய்? நீ இன்றைக்கு என்னை என்ன வாங்கிக் கொண்டு வரச் சொன்னாய்? ஓஹோ! அந்த டபின் கவர் பிளாஸ்டிக் ரிப்பன் வாங்கிவரவில்லை என்கிற கோபமோ?

மைதிலி :—(தலை நிமிர்ந்து) கொஞ்சம் யோசித்துப் பாருங்கோ! நான் இன்றைக்கு உங்களை அந்த ரிப்பனா வாங்கிக் கொண்டு வரச் சொன்னேன்? (பெருமூச்சு விட்டு) ஊஹ்ம்......உங்களுக்கு அந்தப் புஸ்தகத்தைத் திருப்பி வாங்கிக் கொண்டு வர மனமில்லை. அவ்வளவுதானே?

மூர்த்தி :—(ஆயாசத்துடன்) எந்தப் புஸ் தகம், மைதிலி?

மைதிலி :—ஏதோ ஒரு நாவல் விலைக்கு வாங் கிக்கொண்டு வருகிறபோது யாரோ சிநே கிதர் கேட்டதனாலே அவர் கிட்டே கொடுத்து விட்டேன் என்று பதினைஞ்சு நாளைக்கு முன் னால் சொன்னீர்களே, நீங்கள்! அதை இன் னும் அவரிடமிருந்து வாங்கிக் கொண்டு வந்த பாட்டைக் காணுமே!

மூர்த்தி :—பூ! இவ்வளவுதானா விஷயம்! இப்பொழுதே போய் அதை வாங்கிக் கொண்டு வந்து விடுகிறேன்.

### காட்சி—2

[சந்திரசேகரனின் வீடு. சந்திரசேகரன் தன் மனைவி சகிதம் எங்கோ வெளியே போக ஆயத்தமாக நிற் கிறான். மூர்த்திவருகிறான்]

சந்திரசேகரன் :—வா, அப்பா! வா! ஏது இந்த நேரத்திலே அபூர்வமாக?...

மூர்த்தி :—(அசட்டுச் சிரிப்புடன்) ஒன்று மில்லை!...வந்து...இரண்டு வாரத்துக்கு முன்னாலே உன்னிடம் 'சங்கீதக் கோலை' என்று ஒரு புஸ்தகம் கொடுத்தேனே!...அது இப்போது கொஞ்சம் அவசரமாகத் தேவை யாயிருக்கிறது!

சந் :—(புன்னகையுடன்) ஏது இப்படி திடீரென்று வந்து கேட்கிறாயே! உன் மனைவி நூரத்தினாளாக்கும்! அவளுக்குப் பாட்டுக் கீட்டு சொல்லித் தருவதாக உத்தேசமோ?

மூர்த்தி :—(குறுக்கிட்டு) சேச்சே! அதெல் லாம் ஒன்றுமில்லை!...

சந் :—(தலையைச் சொறிந்து கொண்டே தன் மனைவியைப் பார்த்து) ஏன் சுவர்ணம், அதை யார் வாங்கிக் கொண்டு போனார்கள்? ராயர் தெரு கிருஷ்ணமூர்த்தி தானே படித்து விட்டு இரண்டு நாளிலே தருகிறேன் என்று ஒரு வாரத்துக்கு முந்தி வாங்கிக் கொண்டு போனான்?

சுவர்ணம் :—(கதவு மறைவில் நின்று) ஆமாம், அவர்தான் வாங்கிக் கொண்டு போனார்!... உம் ... சினிமாவுக்கு நாழிக்கே போய்க் கொள்ளலாமா?

மூர்த்தி :—நீங்கள் எங்கேயோ அவசரமாகப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் போலிருக் கிறது!...சரி, அப்படியானால் நான் கிருஷ்ண மூர்த்தியிடமே போய் விசாரிக்கட்டுமா?

சந் :—அதுதான் சௌகரியம், மூர்த்தி! நான் கொடுக்கச் சொன்னேன் என்று சொல் லிக் கேளு. உடனே கொடுத்து விடுவான்... (அசட்டுச் சிரிப்புடன்) மன்னிச்சுக்கோப்பா! நீ வந்து கேட்கிற போது கொடுக்க முடிய வில்லையே என்று எனக்கு...

மூர்த்தி :—அதனுலென்ன, பரவாயில்லை. சரி! அப்போ நான் வரட்டுமா?

[விடை பெற்றுக் கொண்டு கிருஷ்ண மூர்த்தியின் வீட்டுக்குப் போகிறான்]

### காட்சி—3

[கிருஷ்ணமூர்த்தி ஈஸிசேரில் சாய்ந்து படுத்திருக்கிறான். மூர்த்தி உள்ளே வருகிறான்.]

கிரு :—வா, அப்பா மூர்த்தி! எங்கேயாவது வழி தவறி வந்து விட்டாயா, என்ன? ஆளை இந்தப் பக்கம் பார்ப்பதே அபூர்வமாயிருக் கிறதே!

மூர்த்தி :— உன்னிடம் ஒரு காரியமாக வந்தேன், கிட்டு! சந்திரசேகரன் உன்னிடம்

'சங்கீதக் கோலே' என்று ஒரு புஸ்தகம் கொடுத்தானே, அதைக் கொஞ்சம் எடுத்துத் தருகிறாயா? அது என்னுடைய புஸ்தகம்......

நீரு :—(உள் புறம் திரும்பி) கோமதி! அப் புஸ்தகத்தைக் கொஞ்சம் சீக்கிரம் தேடி எடுத்துக் கொடு!

கோமதி :—(உள்ளிருந்தபடியே) மூர்த்தா நான் அதிலிருந்த படத்தை எல்லாம் கிழித்து எடுத்துக் கொண்டு நீங்கள் அதைப் பேப்பர்காரனிடம் போட்டு விடவில்லையா?



மூர்த்தி :—(துள்ளிக் குதித்து) என்னது. பேப்பர் காரனிடம் போட்டாச்சா?

நீரு :—(அவனைக் கையமர்த்தி) இரு. அப்பா! பதட்டப்படாதே! (உள் புறம் திரும்பி) என்ன கோமு, அந்த லைப்ரரிப் புஸ்தகத்தை அல்லவா பேப்பர் காரனிடம் போட்டோம்! வினைத்துப் பாரு!......நான் சொல்கிறது வேறு புத்தகம்...!

கோமதி :—(கதவின் மறைவுக்கு வந்து) ஓ! அதைச் சொல்கிறேனா? அட்டை இரண்டுமில்லாமல்...! அடடா, அது இங்கே இல்லையே! புதுப் புது பக்ஷணங்கள் பண்ணுகிற முறையெல்லாம் அதிலே போட்டிருந்தது. பார்த்து எழுதிக் கொண்டு கொடுக்கிறேன் என்று விசாலாட்சி மாமி மூன்று நாளைக்கு முந்தி வாங்கிக் கொண்டு போனாள்! இன்னும் திருப்பித் தரவில்லை.

[மூர்த்திக்குத் தலை சுற்றுகிறது.]

மூர்த்தி :—(சமாளித்தபடியே) அப்போ நான் போயிட்டு வரட்டுமா?

நீரு :— அவசரப்படாதே, மூர்த்தி! ...... கோமதி! நீ உடனே விசாலாட்சி மாமியிடம் போய் அந்தப் புத்தகத்தைக் கையோடு வாங்கிக் கொண்டு வந்து கொடு!

[கோமதி விடு விடென்று போய்விட்டுப் பத்து நிமிஷங்கள் கழித்துத் திரும்புகிறாள். கதவின் இடுக்கில் மறைந்து கொண்டு சற்று உரக்கவே வாய் விட்டுச் செய்தியை அறிவிக்கிறாள்.]

கோமதி —அந்த மாமியிடமிருந்து நாலு வீடு தள்ளி இருக்கிற மைதிலி என்கிற பெண் வாங்கிச் சென்றிருக்கிறாளாம்......

மூர்த்தி :—(எரிச்சலோடு) அங்கேயே கேட்டுப் புத்தகத்தை வாங்கிக் கொள்கிறேன். நீங்கள் சிரமப்பட வேண்டாம்!

[தன் வீட்டுக்கு விரைகிறான்.]

### காட்சி 4

[வாசல் கதவைத் திறந்து கொண்டு 'விடுவிடு'வென்று மூர்த்தி தன் வீட்டுக்குள் போகிறான். மைதிலி கூடத்தில் அமர்ந்திருக்கிறாள்.]

மைதிலி :— இவ்வளவு நேரம் கழித்துக் கடைசியிலே வெறுங்கையோடு தானே திரும்பி வந்திருக்கிறீர்கள்! கையில் ஒன்றுமில்லையே!

மூர்த்தி :—(ஆத்திரத்துடன்) தரித்திரமே! புஸ்தகத்தை இங்கேயே வைத்துக் கொண்டு தானே என்னை ஊரெல்லாம் கால் கடுக்கச் சுற்றி வரப் பண்ணினாய்! உன்னை என்ன செய்கிறேன், பார்!

மைதிலி :— (கலங்கிப் போய்) நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? புரியவில்லையே!

மூர்த்தி :—(கோபத்துடன்) ஏன் புரியப் போகிறது? விசாலம் மாமியிடமிருந்து நீதானே புஸ்தகம் வாங்கிண்டு வந்தாய்?

மைதிலி :—(திகைப்புடன்) அட ராமா! நீங்கள் நாலு ரூபாய் விலை கொடுத்து வாங்கின புஸ்தகம் அதுதானா? அதிலே இருபது இருபத்தஞ்சு பக்கம்கூட இருக்காது போலிருக்கிறதே! அதற்கா நாலு ரூபாய்?

மூர்த்தி :— (திடுக்கிட்டு) என்ன உளறுகிறாய், மைதிலி! அதிலே நானூறு பக்கத்துக்கு மேலே யிருந்ததே! எங்கே, அதை எடுத்துக் கொண்டு வா, பார்ப்போம்!

[மைதிலி புஸ்தகத்தைக் கொண்டு வருகிறாள். மூர்த்தி அதை வாங்கிப் பார்க்கிறான்.]

மூர்த்தி :—(சோர்ந்து போய்) அட, பரமசிவா! நான் வாங்கின புதுப் புஸ்தகம் இந்த நிலைமையிலா இருக்கிறது? ஒரே ஒரு அத்தியாயத்தைத் தவிர புஸ்தகத்திலே பாக்கி மூப்பத்தொரு அத்தியாயம் எங்கே போச்சு என்று தெரியவில்லையே!

மைதிலி :— அதென்னமோ விசாலாட்சி மாமி இதைத்தான் என்னிடம் கொடுத்தாள்! புதுப்புது பக்ஷணம் பண்ணுகிற வழியெல்லாம் இதிலே போட்டிருக்கிறது. படிச்சுப் பாருடி என்று சொன்னாள். அதைப் பார்த்து நான்கூட வருகிற ஞாயிற்றுக் கிழமை மூனங்கி அல்வா டிபன் பண்ணலாமான்னு......

மூர்த்தி:—(குறுக்கிட்டு) போதும், போதும்! நிறுத்திக்கொள்! நீ ஒரு அல்வாவும் பண்ண வேண்டாம்..... முதல் காரியமாக ஒவ்வொரு காகிதத்தையும் நாலு நாலாகக் கிழித்து வை! தினம் தினம் பல்பொடி கட்டுவதற்காகவாவது பிரயோசனப் படட்டும்!

மைதிலி :—(புன்னகையுடன்) நல்ல புஸ்தகம் வாங்கி, நன்றாகத்தான் இரவல் கொடுத்தீர்கள், போங்கள்!

[அதைக்கேட்ட மூர்த்தியின் உதடுகளிலும் புன் சிரிப்பு வழிகிறது.]

திரை



## வாழ்க்கையின் இன்பம் அக் கடும் தலைவலி ஒழிந்தபின்

"நான் எப்பொழுதும் தலை வலியால் அவதிப் பட்டுக் கொண்டிருந்தேன். ஒன்றிலும் குணம் கிடைக்கவில்லை. பின்னர் "க்ருஷன்" உபயோகிக்க ஆரம்பித்ததிலிருந்து எனது வலிகள் அறவே ஒழிந்து அநேக விதங்களில் குணமடைந்திருக்கிறேன். மண்டை பிளக்கும் தலைவலியால் வாழ்க்கையே வியர்த்தம் எனக் கருதினேன். ஆனால் அது இப்பொழுது முற்றிலும் வேறு விதமாய் விட்டது — "க்ருஷ"னுக்கு எனது நன்றி." —M. S.

வயிற்றைக் கோளாறு செய்வதும் ரத்தத்தை விஷமாக்குவதுமான அசுத்தங்கள் குடலுக்குள் சேமிக்கப்படுகின்றன என்பதே மண்டை பிளக்கும் தலைவலிகளின் தாத்பர்யம். உங்களது உட்புற அவயவங்களை ஆரோக்கியமாகவும் ஒழுங்காகவும் இயக்குவதால் "க்ருஷன்" அவ்விஷப் பொருள்களை வெளியேற்றி விடுகின்றது. க்ருஷன் உங்களுக்கு வலிகளிலிருந்தும் நோய்களிலிருந்தும் விடுதலை அளிப்பதால் வாழ்க்கையில் புத்துணர்வும் ஊக்கமும் அடைகிறீர்கள்.

**"க்ருஷன்"** உங்களை ஆரோக்கியமாகவும் ஆனந்தமாகவும் இருக்க உதவுகிறது

KSM—2

# பொங்கல் பரிசு

**ஸ்ரீ சுதன்**



பொங்கலுக்கு இரண்டு நாட்கள் இருந்தன. தியாகராஜன் காஷியராக வேலை பார்த்து வந்த பாங்கில் அன்று காலை தான் பொங்கல் போனஸ் பட்டுவாடா ஆயிற்று. சிப்பந்திகள் அனைவருக்கும் இரண்டு மாதச் சம்பளம் போனஸாகக் கிடைத்தது. தியாகராஜன் தன்னுடைய இரண்டு மாதச் சம்பளமான நூற்றி ஐம்பது ரூபாய் பணத்தைப் பெற்றுக் கொண்டான். அப்பொழுதுதான் சட்டென்று அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. மூன்று மாதங்களுக்கு முன் தியாகராஜன் பாங்கில் கணக்கு வைத்துக் கொண்டிருந்த யாரோ ஒருவருடைய 'செக்'குக்குப் பணம் கொடுக்கும் போது தவறுதலாக நூறு ரூபாய் அதிகமாகக் கொடுத்து விட்டான். அன்று கணக்கற்ற செக்குகளுக்குப் பணம் கொடுத்த அவனால் எந்த நபருக்கு அதிகமாகப் பணம் கொடுக்கப்பட்டது என்று நிர்ணயிக்க முடியவில்லை. அந்தப் பணத்தை வாங்கிக் கொண்டு போன நபரும் அதைத் திருப்பிக் கொடுக்கவில்லை. ஆகவே அவனுடைய அஜாக்கிரதையினால் அதிகமாகக் கொடுத்த பணத்தைப் பாங்கிற்குத் தியாகராஜன் ஈடு செய்ய வேண்டியிருந்தது. அவன் பாங்கில் ஏற்கெனவே கட்டி யிருந்த செக்யூரிடித் தொகையிலிருந்து நூறு ரூபாயை அவன் பாங்குக்குச் செலுத்தினான். செக்யூரிடிப் பணத்தில் துண்டு விழுந்த பகுதியை மாதம் பத்து ரூபாய் விகிதம் நிரப்ப மேலதிகாரியிடமிருந்து அனுமதி பெற்றிருந்தான் தியாகராஜன். இதையொட்டி இரண்டு மாதத்திற்குரிய ரூபாய் இருபதை அவன் பாங்கில் கட்டியிருந்தான். பாக்கியுள்ள எண்பது ரூபாய்களை அவன் கைக்கு அப்பொழுது வந்திருந்த போனஸ் பணத்திலிருந்து கொடுத்து விடுவது என்ற தீர்மானத்திற்கு வந்திருந்தான்.

தியாகராஜன் அவ்விதமாக முடிவு செய்த போது அவன் மனம் வேதனையடைந்தது. காரணம் அவன் மனைவி ஜானகி வருகிற பொங்கலுக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கித் தர வேண்டுமென்று அவனிடம் கேட்டிருந்தாள். கலியாணமாகிக் குடித்தனம் வைத்து நாலு வருஷங்களுக்குப் பின் முதன் முதலாக அவள் தியாகராஜனுக்கு விடுத்த வேண்டுகோள் அதுதான். அதை அவனால் நிராகரிக்க முடியவில்லை. ஜானகி கர்ப்பம் தரித்து நாலைந்து மாதங்களாகி யிருந்தன. அந்த நிலையில் அவளுடைய விருப்பத்தைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்ற எண்ணம் தியாகராஜன் மனத்தில் எழுந்தது. ஆகையால் அவனுடைய பொருளாதார நிலைமை இடமளித்தால் அவளுக்கு ஒரு பட்டுப் புடவை வாங்கிக் கொடுத்து விடவேண்டு மென்ற தீர்மானத்திற்கு வந்திருந்தான்.

ஆனால் அவன் சற்றும் எதிர்பாராத விதமாக அவன் பாங்கிற்கு நூறு ரூபாய் வரை திருப்பிக் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படவே ஜானகியின் இஷ்டத்தைப் பூர்த்தி செய்ய முடியாத நிலைமைக்கு வந்து விட்டான். போதாக் குறைக்கு சில மாதங்களாக ஜானகியின் உடல் நிலை வேறு அவ்வளவு திருப்திகரமாக இல்லை. இதற்காக வைத்தியரிடம் கடன் சொல்லி மருந்து வாங்கிக் கொடுத்து வந்தான். அதனால் ஏற்பட்ட கடனைப் போனஸ் பணத்திலிருந்து தீர்க்க வேண்டிய அவசியமாயிற்று. இவையெல்லாவற்றிற்கும் மேலாக இரண்டு மாதங்கள் கழித்து நல்ல காற்றோட்டமும் சுகமான சீதோஷ்ண ஸ்திதியுமுள்ள அவளுடைய பிறந்த ஊருக்கு ஜானகியை அனுப்பி விடுவதென்று தீர்மானித்திருந்தான். அவள் பிறந்தகம் போய்ப் பிரசவத்தை முடித்துக் கொண்டு வரும்வரை செலவுக்காகக் கணிசமாக ஒரு தொகையை அவளிடம் தியாகராஜன் கொடுத்தனுப்ப வேண்டு மென்று முடிவுக்கு வந்திருந்தான். அதற்காக அவனுடைய பிராவிடண்ட் பண்ட் சேமிப்பிலிருந்து அவன் கடன் எழுப்ப வேண்டியிருந்தது. பாங்கிற்குத் திருப்பிக் கொடுத்துக் கடன்

முழுவதையும் அடைத்தான் தியாகராஜன். வீட்டிற்குத் திரும்பியதும் ஜானகியிடம் அவனுக்குள்ள கஷ்டத்தைத் தெரிவித்துப் பொங்கலுக்குச் சாதாரண நூல் புடவை ஒன்றை ஜானகிக்கு வாங்கிக் கொடுத்து விடுவது என்று திட்டம் போட்டிருந்தான்.

பிற்பகல் மணி இரண்டடித்தது. பாங்கில் அன்றையப் பணக் கொடுக்கல் வாங்கல் நடவடிக்கைகள் முடிந்தன. காஷியர் தியாகராஜன் தன் முன்னிருந்த கணக்குப் புத்தகத்தில் குறித்திருந்த பண வரவு, பட்டுவாடா விவரங்களைக் கூட்டிப் போட்டு நிகரத் தொகையைத் நிர்மானித்தான். பிறகு பணம் வைத்திருந்த பெட்டியில் நோட்டு, ரூபாய், சில்லறை இவ்வளவையும் தனித்தனியாக எண்ணி மொத்தத் தொகையைக் கண்டு பிடித்தான். அன்றையக் கணக்குக் காட்டிய தொகையை விட அவனிடம் கையிருப்பாக இருந்த பணத்தில் நூறு ரூபாய்கள் அதிகமாக இருந்தன. மறுபடியும் கணக்குப் புஸ்தகத்திலிருந்த குறிப்புகளைப் பரிசிலனை செய்தான். கையிருப்பை மறுபடியும் எண்ணிச் சரி பார்த்தான். அப்பொழுதும் முதலில் வந்தது போல் அவனிடம் நூறு ரூபாய் உபரியாக இருப்பதை உணர்ந்தான். அந்த நூறு ரூபாயைக் கணக்கில் எடுத்துக் கொண்டு கணக்குப் புஸ்தகத்தில் காட்டி விடுவது என்று நினைத்து எழுதுவதற்காகப் பேனாவைக் கையில் எடுத்தான் தியாகராஜன்.

அதே தருணத்தில் 'சார்' என்று யாரோ அவனை அழைக்கவே குனிந்த தலையை நிமிர்த்தி வெளியே நோக்கினான் தியாகராஜன். பணம் பட்டுவாடா செய்யும் 'கௌண்டரு'க்கு வெளியே பக்கிரிசாமி என்பவன் நின்று கொண்டிருந்தான். நகரத்திலிருந்த கம்பெனியொன்றில் நிலுவை வசூல் செய்வது, பணத்தை பாங்கில் கட்டுவது, கம்பெனி செக்குகளுக்குப் பாங்கிலிருந்து பணம் வாங்கிக் கொண்டு வருவது இவ்வித வேலைகளுக்காக அமர்த்தப் பட்டிருந்தான் பக்கிரிசாமி. தியாகராஜன் வேலையாயிருந்த பாங்கிற்கு அலுவல் நிமித்தமாக அடிக்கடி பக்கிரிசாமி வந்து போய்க் கொண்டிருந்தான். ஆகையால் தியாகராஜனுக்குப் பக்கிரிசாமியை மிக நன்றாகத் தெரியும்.

"என்ன பக்கிரிசாமி, எங்கே வந்தாய்?" என்றான் தியாகராஜன்.

"எங்கள் கம்பெனி 'செக்' ஒன்றை மாற்றி இன்றைக்கு இரண்டாயிரத்து முன்னூறு ரூபாய் இங்கே யிருந்து வாங்கினேன். அதில் இருநூறு ரூபாய்களுக்கு முதலில் உங்களிடமிருந்து சில்லறை வாங்கிக் கொண்டேன். மேலும் நூறு ரூபாய்க்குச் சில்லறை வேண்டியிருந்தது. ஒரு நூறு ரூபாய் நோட்டைக் கௌண்டருக்குள் வைத்து உங்களிடம் சில்லறை கேட்டேன். நீங்கள் 'ரூபாயை எடுத்துக் கொண்டுபோய் விட்டுக் கூட்டம் சற்றுக் குறைந்ததும் வா' என்று கூறினீர்கள். ஆனால் நான் போகும்போது கௌண்டரில் வைத்த நூறு ரூபாய் நோட்டை எடுத்துக் கொண்டுபோக மறந்து விட்டேன். கம்பெனிக்குப் போய்ப் பணத்தை மறுபடியும் எண்ணிப் பார்த்தபோதுதான் ஞாபகம் வந்தது. அந்த நூறு ரூபாயை நீங்கள் எடுத்து வைத்திருந்தால் வாங்கிக் கொண்டு போக வந்தேன்" என்றான் பதட்டத்துடன்.

கணக்குப் புஸ்தகத்தைப் புரட்டிப் பார்த்தான் தியாகராஜன். பக்கிரிசாமி அவன் குறிப்பிட்ட தொகைக்கு 'செக்' ஒன்றை மாற்றிக் கொண்டு போனதை கணக்குப் புஸ்தகத்திலிருந்த குறிப்பு ஊர்ஜிதம் செய்தது. பக்கிரிசாமி நூறு ரூபாய் நோட்டு ஒன்றைக் 'கௌண்ட'ருக்குள் வைத்ததைத் தியாகராஜன் நேரில் பார்க்கா விட்டாலும் பக்கிரிசாமி அதைப்பற்றிக் கூறியபோது அவனுடைய முகபாவத்தைக் கவனித்த தியாகராஜனுக்குப் பக்கிரிசாமியின் வார்த்தைகளில் நம்பிக்கை விழுந்தது. ஏற்கெனவே கையிருப்பில் நூறு ரூபாய் அதிகமாக இருந்த காரணமும் சேர்ந்து கொள்ளவே பக்கிரிசாமியைத் தியாகராஜன் பாங்கு மானேஜரிடம் அழைத்துக் கொண்டு போய் விவரங்களைத் தெரிவித்து அவருடைய அநுமதியின் பேரில் பக்கிரிசாமியிடம் நூறு ரூபாய்ப் பணத்தைக் கொடுத்தனுப்பினான்.

## 3

அன்று மாலை தியாகராஜன் வீட்டிற்குச் சென்றதும் ஜானகி அவனுக்குச் சிற்றுண்டியையும் காப்பியையும் அளித்து விட்டு, "ஆமாம். தீபாவளியின் போது நீங்கள் நூல்



"என்ன மிஸ்டர் சோமு, என்னைப் பார்த்தும் பார்க்காதது போல் போகிறீயே! உனக்குக் கண் தெரியவில்லையா, என்ன?"

"ஸார், மன்னிக்கணும்; எனக்குக் கண் தெரிகிறது! நான் சோமு இல்லை!"

புடவை வாங்கிக் கொடுத்தீர்கள். பொங்கலுக்காவது பட்டுப் புடவை வாங்கிக் கொடுக்க வேண்டுமென்றேன். இதை நீங்கள் மறந்து போயிருக்க மாட்டீர்கள் என்று நினைக்கிறேன். நீங்கள் 'சரி' என்று சொல்லுவீர்கள் என்ற தைரியத்தில் எனக்குப் பிடித்தமான பட்டுப் புடவையைத் தேரடித் தெரு சில்க் ஸ்டோர்ஸில் என் சிநேகிதிகளுடன் போய்ப் பார்த்து விலை பேசி இன்றைக்கு மத்தியானம் எடுத்து வைத்துவிட்டு வந்திருக்கிறேன். அந்த ரகத்தில் கொஞ்சமாகப் புடவைகள் இருப்பதால் அவைகள் விற்றுப் போவதற்குள் வாங்கிக் கொண்டு வந்துவிட வேண்டும். இப்பொழுது புறப்படுவோமா? என்ன சொல்லுகிறீர்கள்?" என்றாள் ஜானகி ஆவல் தோய்ந்த குரலில்.

தியாகராஜன் சற்று நேரம் மௌனத்தில் ஆழ்ந்தான். ஜானகி விரும்பிய பட்டுப் புடவையை அவளுக்கு வாங்கிக் கொடுக்க அப்பொழுது பணவசதியில்லை என்று எவ்விதம் தெரிவிப்பது என்று தயங்கியது அவன் மனம். "என்ன, ஒன்றுமே பதில் சொல்லாமல் இருக்கிறீர்களே?" என்று வினவினாள் ஜானகி.

மூன்று மாதத்திற்கு முன் தனக்குப் பாங்கில் ஏற்பட்ட நூறு ரூபாய் நஷ்டத்தை அப்பொழுதாவது ஜானகியிடம் தெரிவித்துத் தன்னுடைய பொருளாதார நிலைமையை ஜானகிக்குத் தெளிவு படுத்த வேண்டும் என்று முடிவுக்கு வந்த தியாகராஜன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, "ஜானகி உன்னிடம் நான் ஒரு முக்கியமான விஷயத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று இத்தனை நாளாக நினைத்துக் கொண்டிருந்தேன். அதற்கு இப்பொழுது தான் தருணம் வந்தது......" என்று ஆரம்பித்தான்.



தியாகராஜன் கூற வந்ததை வெளியிட்டு முடிப்பதற்குள், "சார்" என்று கூப்பிட்டு யாரோ மூடியிருந்த வாசல் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. தியாகராஜன் பேச்சை முடிக்காமலேயே வாசலுக்கு விரைந்து கதவைத் திறந்தான். வாசலில் பக்கிரிசாமிதான் நின்று கொண்டிருந்தான்.

"உங்களிடம் தனியாகச் சிறிது நேரம் பேச வேண்டும்" என்றான் பக்கிரிசாமி.

தியாகராஜன் பக்கிரிசாமியை மாடியிலிருந்த தன்னுடைய அறைக்கு அழைத்துக் கொண்டு போனான். அங்கு சென்றதும் பக்கிரிசாமி, "நான் இன்று ஆபீஸ் விட்டு வீட்டிற்குப் போனதும் அங்கே ஒரு அதிசயம் நடந்து போச்சு" என்றான்.

"என்ன நடந்தது?" என்று ஆவலுடன் கேட்டான் தியாகராஜன்.

"என்னுடைய இரண்டு வயதான கடைசிக் குழந்தை இன்று காலையில் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தபோது அதன் கையிலிருந்த தங்க வளையல் ஒன்றை யாரோ ஒருவன் கழற்றிக் கொண்டு போய் விட்டானாம். தற்செயலாக அவன் அந்த நகையை எங்களுக்குச் சில நாட்களுக்கு முன் செய்து கொடுத்த தட்டானிடமே விற்பதற்காகச் சென்றிருக்கிறான். தட்டான் அவனை அங்கேயே நிறுத்தி வைத்து எங்கள் வீட்டிற்கு ஆள் அனுப்பி நகையை எங்களுக்குத் திரும்பக் கிடைக்கச் செய்து திருடனைப் போலீஸில் ஒப்படைத்து விட்டானாம். இந்தச் செய்தியை நான் ஆபீஸ் விட்டு வீட்டிற்குப் போனதும் என் மனைவி என்னிடம் தெரிவித்தாள். 'நாம் பிறர் சொத்துக்கு ஆசைப்பட்டது கிடையாது. அப்படி யிருக்கும் போது நம்முடைய பொருள் வெளியே போனாலும் நம்மிடமே திரும்பி வருவது நியாயந்தானே?' என்று கூறினாள். அவள் சொன்ன அந்த வார்த்தைகளைக் கேட்டது முதல் என் மனச்சாட்சி என்னைக் குற்றம் சாட்டியது."

"உன் மனச் சாட்சி உன்னைக் குற்றம் சாட்டுவானேன்?" என்றான் தியாகராஜன் ஒன்றும் புரியாமல்.

"ஆமாம், என் மனைவி கூறியதற்கு மாறாக நான் பிறர் பொருளுக்கு ஆசைப் பட்டது உண்டு. இன்றைக்குப் பாங்கில் வந்து உங்களிடமிருந்து கணக்கில் தவறிவிட்டதாக ஒரு நூறு ரூபாய் வாங்கிக் கொண்டு சென்றேன். பாருங்கள். அது உண்மையாகவே உங்களைச் சேர வேண்டிய பணம்."

"என்னைச் சேர வேண்டிய பணமா?" என்றான் தியாகராஜன் திகைப்படைந்து. "அது உன்னுடைய கம்பெனிப் பணம் இல்லையென்றால் அதைத் திரும்பப் பாங்கில் கொண்டு போய்க் கட்டிவிடு. அது யாருக்குச் சொந்தமோ, அவர்கள் தகுந்த ருசு

வுடன் அதை வாங்கிக் கொண்டு போகட்டும். அப்படி ஒருவரும் வராவிட்டால் அந்தப் பணம் எங்கள் பாங்கைச் சேரும். அது ஒரு போதும் எனக்குச் சொந்தமாகாது" என்றான் தியாகராஜன் தீர்மானமான குரலில்.

"அது உங்களைச் சேர வேண்டியதுதான். ஏனெனில் மூன்று மாதங்களுக்கு முன் தீபாவளி சமயத்தில் ஆயிரம் ரூபாய்க்கு ஒரு 'செக்'கை உங்கள் பாங்கில் மாற்றினேன். அன்றைக்குப் பாங்கில் அதிகக் கூட்டம். நீங்கள்தான் பணத்தை எண்ணிக் கொடுத்தீர்கள். பணத்தை நான் சரி பார்த்தேன். நூறு ரூபாய் அதிகமாக இருந்தது. அதை நான் நியாயமாக உங்களிடம் திருப்பிக் கொடுத்திருக்க வேண்டும். ஆனால் என்னுடைய பேராசை அதற்கு இடம் கொடுக்கவில்லை. உங்களுக்கு அதனால் ஏற்படும் கஷ்டத்தைப் பற்றி நான் நினைக்கவில்லை. ஆனால் இன்றைக்கு எனக்குச் சேரவேண்டிய நூறு ரூபாய் உங்கள் பாங்கில் தங்கி விட்டது. நான் அதைக் கேட்க வந்தபோது நீங்கள் என்னை உங்கள் பாங்க் மானேஜரிடம் அழைத்துக் கொண்டு போய் என் வார்த்தைகளை நம்பலாம் என்று கூறிப் பணத்தை எடுத்து என்னிடம் கொடுத்தீர்கள். இதைப் பார்த்ததும் நான் உங்களுக்கு ஒரு காலத்தில் இழைத்த அநீதியை நினைத்து மனம் வெதும்பினேன். இந்த மாதம் சம்பளம் வாங்கினதும் உங்களுக்கு நான் தரவேண்டிய நூறு ரூபாயில் ஒரு பகுதியையாவது உங்களிடம் திருப்பிச் சேர்த்துவிட்டு, மறுபடியும் மாதா மாதம் கொஞ்சம் கொஞ்சமாக பாக்கிப் பணத்தையும் உமக்குத் திருப்பிக் கொடுத்து விட்டு என் குற்றத்திற்குப் பரிகாரம் தேடலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால் இன்று எதிர்பாராத விதமாக என்னுடைய குழந்தையின் கைவளையல் திருட்டு போய்த் திரும்பக் கிடைத்ததும், அதை யொட்டி என் மனைவி கூறிய வார்த்தைகளும் என் மனச் சஞ்சலத்தை அதிகப்படுத்தி விட்டன. உடனே என் சிநேகிதர்களிடம் சென்று நூறு ரூபாய் கைமாத்தாக வாங்கிக் கொண்டு வந்தேன். இதை நீங்கள் பெற்றுக் கொண்டு என்னை மன்னித்துவிடவேண்டும்" என்று கூறி நூறு ரூபாய் நோட்டை நீட்டினான் பக்கிரி.

பக்கிரிசாமி கூறிய வரலாற்றைக் கேட்டதும் தியாகராஜனுக்குப் பக்கிரிசாமியின் மன மாற்றத்தைக் கண்டு அவனிடம் பரிவு ஏற்பட்டது. பக்கிரிசாமி கொடுத்த ரூபாய் நூறையும் மொத்தமாக வாங்கிக் கொள்ள அவன் மனம் இசையவில்லை. "பக்கிரிசாமி, தவறுதல் யாருக்கும் சகஜம். இதற்காக நீ மனம் ஒடிந்து போக வேண்டாம். கடன் வாங்கி இந்த நூறு ரூபாயை நீ இப்போது எனக்குக் கொடுக்க வேண்டாம். இந்தப் பணத்தைப் பல தவணைகளாக எனக்கு நீ திருப்பிக் கொடுத்தால் போதும்" என்றான்.

பக்கிரிசாமிக்குத் தியாகராஜனின் தயாளம் புது அனுபவமாயிருந்தது. "சார், உங்கள் பெருந்தன்மையை நான் ஒருபோதும் மறக்க மாட்டேன். இது சம்பந்தமாக எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீங்கள் பொங்கலுக்கு ஏதாவது பட்டு ஜவுளி வாங்கிக் கொள்ள வேண்டுமென்றால் தேரடித் தெரு ஸில்க் ஸ்டோர்ஸில் என் கணக்கில் வாங்கிக் கொள்ளுங்கள். நீங்கள் வாங்கும் ஜவுளிக்கு நான் மாதா மாதம் பணம் கட்டிவிடுகிறேன். அந்தக் கடை முதலாளி எனக்கு ஒருவிதத்தில் மாமன் முறை" என்றான்.



"காலையிலிருந்து காத்திருக்கிறேன். இன்னும் குழந்தை பிறந்த சமாசாரமே வரவில்லை!"

"எப்பொழுது இவ்வளவு நேரம் ஆகிறதோ, அது நிச்சயம் பெண் குழந்தையாகத்தான் இருக்கும். அதனால்தான் அது பிறப்பதற்கே நேரம் ஆகிறது!"

பக்கிரிசாமியின் யோசனையை ஆமோதித்து அவனுக்கு விடை கொடுத்தனுப்பினான் தியாகராஜன். தனக்குப் பொங்கல் பரிசு அளித்த பக்கிரிசாமியை மனத்துக்குள் வாழ்த்திக் கொண்டான்.

சற்றுப் பொறுத்து ஜானகியுடன் சென்று நூறு ரூபாய் பெறுமான ஜவுளியுடன் தேரடித் தெரு ஸில்க் ஸ்டோர்ஸிலிருந்து வெளியேறினான் தியாகராஜன்.

கடையை விட்டுத் தெருவுக்கு வந்ததும் "ஆமாம்! வேறு யாருடைய கணக்கிலேயோ அல்லவா இந்த ஜவுளியை வாங்கினீர்கள் போலிருக்கிறது!" என்று கேட்டாள் ஜானகி தியாகராஜனைப் பார்த்து.

"இதற்குரிய பணத்தை அந்தக் கணக்கு வைத்திருப்பவர் என்னிடமிருந்து மூன்று மாதங்களுக்கு முன் வாங்கிக் கொண்டு விட்டார்" என்றான் தியாகராஜன் சாதுர்யமாக.

"இன்று ஆபீஸிலிருந்து வந்ததும் ஏதோ முக்கியமான விஷயம் என்று ஆரம்பித்தீர்களே, இதைப்பற்றித் தானோ?" என்று மறு கேள்வி போட்டாள் ஜானகி.

"ஆமாம்!" என்ற பாவனையுடன் தலையை அசைத்தான் தியாகராஜன்.

# கிழவி பொன்னம்மாள்

தில்லைவாசி

அந்தச் சாலையோரத்தில் கிழவி பொன்னம்மாளின் குடிசையிருந்தது. கிழவிக்கு வயது அறுபது கூட இருக்கும். அவளுக்கு உற்றார் உறவினர் யாரும் கிடையாது. அவள் நன்றாய் வாழ்ந்தவள். மகன், மகள் என்று இருந்தவர்களையெல்லாம் மண்ணுக்கு இரையாக்கி விட்டு அவள் மட்டும் வாழ்ந்து வந்தாள்.

பொன்னம்மாளுக்குக் குடியிருந்த குடிசையும், அதைச் சுற்றியிருந்த தோட்டமும்தான் ஆஸ்தி. எப்படியோ அவளும் வாழ்ந்து வந்தாள். தோட்டம் அவளை வாழ வைத்தது. அதிலிருந்த மரங்கள் அவள் ஜீவனத்துக்கு வழி காட்டின.

அவள் தோட்டத்தில் பலரக மரங்கள் இருந்தன. தென்னை, மா, பலா, எலந்தை, நாவல் போன்ற பலன் தரும் மரங்கள்தாம் அவைகள். இன்னும் மல்லிகை, முல்லை, ரோஜா போன்ற பூச்செடிகள் வேறு அவள் வளர்த்திருந்தாள்.

பொன்னம்மாளுக்குப் பொழுது போனால், தோட்டத்தைச் சுற்றி வருவதுதான் வேலை. பூச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றுவதும், அவ்வப்போது பயிராகும் காய்கறி செடிகளைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொள்வதும்தான் அவளுடைய வேலை. அது மட்டுமல்ல. தென்னை மரங்களிலிருந்து கீழே விழும் மட்டைகளைத் தண்ணீரில் போட்டு வைத்துக் கீற்றுகளாக முடைந்து விற்பதும் அவள் தொழில்.

தேங்காய், மற்றப் பழங்கள் முதலிய அந்தத் தோட்டம் பலன் தரும் பொருள்களை விற்றுக் காசாக்கி வாழ்ந்து வந்தாள். ஆனால் அவள் கருமியில்லை. தன் வருமானத்தில் ஒரு பகுதியைக் கோயிலுக்கும், பிறருக்கும் கொடுத்து வந்தாள். அவள் வீட்டுக்கு அருகேயிருந்த கோயிலுக்குக் கொடுத்தது போக மீதமிருக்கும் பூக்களைத்தான் விற்பாள்.

தாவர இனங்களோடு மட்டும், கிழவி தன் வேலையை நிறுத்திக் கொண்டு விடவில்லை. அவள் பல ஜாதிக் கோழிகள் வேறு வைத்திருந்தாள். வெள்ளை, கறுப்பு, சிவப்பு நிறக் கோழிகள் அவை. அவைகள் நன்றாய் கொழு கொழு வென்று வளர்ந்திருந்தன. அவளிடம் பத்துக் கோழிகளிருந்தன.

அவளுக்குக் கோழிகள் என்றால் உயிர். ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு பெயர் வைத்திருந்தாள். அவைகள் தோட்டம் பூராவும் சுற்றிச் சுற்றி மேய்ந்து வரும். ஒவ்வொரு சாயம் அவைகள் எல்லாம் சேர்ந்து கொக்கரிப்பது, ஊரையே கூட்டிவிடுவது போல் இருக்கும்.

தோட்டத்தின் பசுமையும், அங்குமிங்குமாக மேய்ந்து வரும் கோழிகளும் கிழவியைப் பரவசப் படுத்திவிடும். ஏதோ ஒரு இன்பம் அங்கு கண்டாள் அவள். அவள் இவ்வளவு நாளாக ஒரு நோய் நொடியில்லாமல் வாழ்ந்து வருவதற்கு இதுதான் காரணமாகக் கூட இருக்கும்.

அவள் சாமர்த்தியத்தைக் கண்டு ஊரே மெச்சிற்று. ஆனால் அவளை யாரும் பொல்லாதவள் என்றோ, கெட்டவள் என்றோ, சொல்ல மாட்டார்கள். "பாவம், ஏன் இந்தக் கிழவி தனியாக இன்னும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறாள்?" என்று அவளிடம் இரக்கம் காட்டுவார்கள்.

சாலையின் மறுபக்கத்தில் அவள் குடிசைக்கு எதிரில் ஒரு பள்ளிக்கூட மிருந்தது. அதில் அந்தக் கிராமத்துச் சிறுவர்களும் சிறுமிகளும் படித்து வந்தார்கள். அவளுக்கு அந்தக் குழந்தைகளிடத்தில்தான் வாஞ்சை! அவர்களிடம் அவள் காட்டிய அன்பு கொஞ்ச நஞ்சமல்ல.

பள்ளிக்கூடம் தொடங்குவதற்கு முன்னும், விட்ட பின்பும் அவர்கள் அவளை வந்து சூழ்ந்து கொள்வார்கள். "பாட்டி! பாட்டி!" என்று அருமையாக அவளைக் கூப்பிடுவார்கள்.

பொன்னம்மாள் அவர்களுக்குப் பழங்கள் கொடுப்பாள்; சிறுமிகளுக்குப் பூக்களும் கொடுப்பாள்.

அவர்கள் அவளை வளைய வளையச் சுற்றி வந்ததோடல்லாமல், அந்தத் தோட்டம் பூராவும் ஓடியாடி விளையாடுவார்கள். கோழிகளைத் துரத்தி விளையாடுவார்கள். கிழவி அவர்களைக் கண் குளிரப் பார்த்து மகிழ்வாள்; அவர்களை அணைத்து முத்தமிடுவாள். அவர்கள் எது செய்தாலும் அவளுக்கு வேடிக்கையாக இருக்கும். ஒவ்வொன்றையும் அனுபவித்து மகிழ்வாள்; தன் பொக்கை வாயைத் திறந்து சிரிப்பாள்.

சில விஷமக்காரப் பையன்கள், "பாட்டி, உன் பல் எல்லாம் எங்கே?" என்று கேட்டுச் சிரிப்பார்கள். அவளும் கூடவே சிரிப்பாள் அர்த்தமில்லாமல். ஏதோ ஒரு இன்பலோகம் அங்கே இருந்ததை அவள் கண்டாள். அவள் எவ்விதக் கவலையுமின்றி வாழ்ந்து வந்தாள்.

சிறுவர்கள் கூடமாட இருந்து அவளுக்கு உதவி செய்தார்கள். அவர்களும் சிறு சிறு வேலைகளை மனம் கோணாமல் செய்தார்கள். வீட்டில் எது செய்தாலும், கிழவிக்கும் கொஞ்சம் பங்கு வாங்கிக் கொண்டு வந்து கொடுப்பார்கள். அவளும் பிரியத்துடன் வாங்கிச் சாப்பிட்டு அவர்களை வாழ்த்துவாள்.

அக்கிழவியின் வீட்டிலே நிலவியிருந்த அமைதி ஒரு நாள் குலைந்தது.

பக்கத்தில் ஊரில் 'அரிச்சந்திர நாடகம்' நடத்தப் போகிறார்கள் என்று பொன்னம்மாள் கேள்விப்பட்டாள். அவளுக்கு அரிச்சந்திர நாடகம் பார்ப்பது என்றால் பிரியம். இதுவரை முடிந்த வரையில் தவறாமல் போய்ப் பார்த்து வந்திருக்கிறாள்.

எல்லா வேலைகளையும் பரக்கப் பரக்கச் செய்தாள்; கோழிகளைப் பிடித்துக் கூட்டில் மூடினாள்; குடிசையின் கதவையும் இழுத்துச் சாத்திப் பூட்டினாள்; சாலையில் நாடகம் பார்க்கப் போனவர்கள் கூட அவளும் சேர்ந்து கொண்டாள்.

அன்று ராத்திரி விடிய விடிய நாடகம் நடந்தது. அவள் நன்றாகப் பார்த்து, அனுபவித்து மகிழ்ந்தாள்.

காலையில் வெகு அவசரம் அவசரமாக வீட்டை நோக்கித் திரும்பி வந்தாள். ஆனால் அவள் குடிசைக் கதவின் பூட்டு உடைக்கப்பட்டுக் கிடந்தது. அவள் பானையில் வைத்திருந்த ஐந்து ரூபாய்ப் பணத்தைக் காணோம்; கோழிக் கூடு திறந்து கிடந்தது. கோழிகளையும் காணோம். தோட்டத்தில் தேங்காய்களும், மற்ற காய், பழங்கள் எல்லாம் பறிக்கப்பட்டிருந்தன. மரங்கள் வெறும் இலையும் தழையுமாகத்தான் காட்சியளித்தன.

கிழவி இல்லாத சமயம் பார்த்து யாரோ களவாடிப் போயிருந்தார்கள். எந்தத் திருடனோ, அல்லது இன்னும் எத்தனை பேர்களோ, அவளை இம்மாதிரி கொள்ளையடிக்கத் திட்டமிட்டுக் காத்துக் கிடந்தார்களோ?

பொன்னம்மாளுக்கு ஒவ்வொன்றையும் பார்க்கப் பார்க்க அழுகை அழுகையாக வந்தது. அவள் அசந்து போய் உட்கார்ந்து விட்டாள். "புத்தி கெட்டு ஏன் நாடகம் பார்க்கப் போனேன். இங்கிருந்திருந்தால், இப்படித் திருட்டுக் கொடுத்திருக்க வேண்டியதில்லையே. என்ன கெட்ட காலமோ? இதுவரையில் இப்படி நடந்ததில்லை" என்று சொல்லிச் சொல்லி அவள் அங்கலாய்த்துக் கொண்டாள்.

"எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டானே பாவி, கோழிகளை மட்டுமாவது விட்டுப் போயிருக்கக் கூடாதா?" என்று கோழிகளை நினைத்து அவள் வருந்தினாள். மற்றவைகள் போனாலும், அடுத்த பலனில் கிடைத்துவிடும். அருமை பெருமையாக வளர்த்து வந்த அந்தக் கோழிகள் அவளுக்கு எப்படிக் கிடைக்கும்? கோழிகள் போனதுதான் அவளுக்கு அதிக வருத்தத்தைத் தந்தது.

பள்ளிக்கூடம் திறக்கும் சமயம். சிறுவர்களும், சிறுமிகளும் வழக்கம்போல் அவளிடம் ஓடி வந்தார்கள். அவள் அவர்களை வரவேற்கவுமில்லை; வாய் திறந்து பேசவுமில்லை. அவள் பார்வை எங்கோ சூன்ய வெளியில் பதிந்து போனதுபோல் தோன்றியது. அவள் கண்களில் கண்ணீர் கசிந்து கன்னங்களில் வழிந்து கொண்டிருந்தது.

'என்ன பாட்டி, இப்படி இருக்கிறே? ஏன் அழுகிறாய்?" என்று அவர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் அவளைக் கேட்டு நச்சரித்து விட்டார்கள். அவள் கொஞ்ச நாழிகை பேசவில்லை; பேச முடியவில்லை அவளுக்கு.

அழுது கொண்டே அவள் நடந்ததைச் சொன்னாள். "என் கோழிகளையும் பாவி எடுத்துக் கொண்டு போய் விட்டான்" என்றாள். இதைச் சொன்னதும் அவள் அழுவது அதிகமாகி விட்டது.

"அழாதே. பாட்டி. நாங்கள் அந்தத் திருடனைப் பிடித்து உன் கோழிகளைக் கொண்டு வந்து சேர்க்கிறோம்," என்று ஒரு பையன் சொன்னான்.

"ஆமாம், பாட்டி! நாங்கள் கொண்டு வருகிறோமா, இல்லையா என்பதைத்தான் பாரேன்" என்று மற்றவர்கள் சொன்னார்கள்.

"உங்களால், முடியாதடா, கண்ணு. அந்த யமகாதகனை உங்களால் பிடிக்க முடியாது" என்று சொல்லும்போதே அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அந்தக் குழந்தைகளின் அன்பையும், வாஞ்சையையும் அறிந்தபோது, அவள் அழுவதையும் மறந்து சிறிது சிரித்து விட்டாள்.

பொன்னம்மாள் மறுபடியும் முன்போல் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்கவேண்டுமானால், அவளுக்குக் கோழிகள் அவசியம் திரும்பி வரவேண்டும் என்று அவர்களின் பிஞ்சு உள்ளத்தில் தெரிந்தது. கிழவிக்காகப் பரிதாபப் பட்டுக் கொண்டே அவர்கள் பள்ளிக்கூடம் போனார்கள். உபாத்தியாயர்



சொன்னது, போதித்தது எதுவும் அன்று அவர்கள் காதில் ஏறவில்லை.

மற்ற ஊர் ஜனங்களும் கிழவியின் குடிசையருகே கூடி விட்டார்கள். அவளைக் கேள்வி கேட்டு அவள் வருத்தத்தை இன்னும் அதிகமாக்கி விட்டுப் போனார்கள்.

அன்றைக்கு மறுநாள் ஞாயிற்றுக் கிழமை; பள்ளிக்கூடம் கிடையாது.

காலையிலேயே சிறுவர்கள் எல்லாரும் ஒன்று கூடினார்கள். "எப்படியாவது கோழிகள் வாங்கிவிட வேண்டும். திருடனிடமிருந்து பிடுங்கி வந்தது என்று கிழவிக்குச் சொல்ல வேண்டும்" என்று அவர்கள் தீர்மானித்தார்கள்.

அவர்கள் தங்கள் பெற்றோர்களிடம் கெஞ்சிக் கூத்தாடிக் காசு வாங்கினார்கள். அவர்களுடைய ஆவலைப் பார்த்துப் பெரியவர்களாகப் பத்துப் பேர்கள் சேர்ந்தார்கள். இரண்டு மைல் தூரத்தில் அடுத்த கிராமத்தில் கூடும் சந்தைக்குப் போய்க் கோழிகள் வாங்கி வந்து கிழவியிடம் கொடுத்துவிட வேண்டும் என்று தீர்மானித்தார்கள். சிறுவர்களையும் தங்களுடன் அழைத்துக் கொண்டார்கள்.

சந்தையில் நிறையக் கோழிகள் இருந்தன. கிழவி பொன்னம்மாள் வைத்திருந்த கோழிகளின் நிறத்தைப் போல இருந்த பத்துக் கோழிகளை வியாபாரிகள் கேட்ட பணத்தைக் கொடுத்து வாங்கிச் சிறுவர்களிடம் கொடுத்தார்கள். ஆளுக்கொரு கோழியாகப் பிடித்துக் கொண்டு குதூகலத்துடன் அவர்கள் ஓட்டமும் நடையுமாகக் கிழவியின் குடிசையை நோக்கி வந்து சேர்ந்தனர்.

குடிசை அமைதியாக இருந்தது; கதவு திறந்து கிடந்தது; ஆனால் கிழவி பொன்னம்மாளை மட்டும் வெளியே காணோம்.

"பாட்டி, பாட்டி! இதோ பார், உன் கோழிகளைக் கொண்டு வந்து விட்டோம்; வந்து பாரேன்!" என்று சிறுவர்கள் வெளியிலிருந்தே தொண்டை கிழிய மகிழ்ச்சியினால் கத்தினார்கள். அப்பொழுது கூடக் கிழவி வெளியே வரக் காணோம்.

அவர்கள் ஒவ்வொருவரும், கிழவியிடம் கோழிகளைக் கொடுத்து, அவள் முகம் மலர்ந்து சிரிப்பதை மறுபடியும் காண வேண்டும் என்று குடிசையின் உள்ளே ஆவலோடு நுழைந்தார்கள். அங்கே அவர்கள் கண்ட காட்சி!

கிழவி பொன்னம்மாள் தாறு மாறாக விழுந்து கிடந்தாள்; பேச்சு, மூச்சில்லை. அப்படியே கோழிகளை எறிந்து விட்டு, அவர்கள் வெளியே ஓடி வந்தனர்.

எல்லாவற்றையும் திருட்டுக் கொடுத்ததை, எண்ணி, எண்ணி, மனம் வாடி, இந்த அதிர்ச்சியைத் தாங்க மாட்டாது. அவள் இதயம் நின்று போனதை அந்தச் சிறுவர்கள் அறிந்தார்களோ என்னவோ?

கிழவி பொன்னம்மாளின் அழகிய குடிசை அமைதியில் மூழ்கிக் கிடந்தது!

# மல்கோவா மாம்பழம் !

ராமு பங்களா வாசலில் நின்று ஒரு மல்கோவா மாம்பழத்தைக் கடித்துத் தின்று கொண்டிருந்தான். மாம்பழம் சாப்பிடும் ஜோரில் அவனுக்கு எதிரே அவன் நண்பன் சாம்பன் வந்து நின்றது கூடத் தெரியவில்லை.

சாம்பன் தான் வந்திருப்பதை ராமு தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக ஒரு தரம் கனைத்துக் காண்பித்தான்.

ராமு அவனைக் கவனிப்பதாகவே தெரியவில்லை. அவன் வெகு சுவாரஸ்யமாக மல்கோவா மாம்பழத்தைச் சுவைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான்.

அவன் சாப்பிடுவதைப் பார்க்கும் பொழுதெல்லாம் சாம்பனுக்கு வாயில் ஜலம் ஊறியது. அப்படியே அதைப் பிடுங்கி விடலாமா என்று கூட நினைத்தான். பிறகு 'ச்சீ! அப்படிச் செய்வது நியாயமில்லை' என்று தன் மனத்தை மாற்றிக் கொண்டான்.

இருந்தாலும் அவனுக்குக் கொஞ்சம் கோபம் வந்து விட்டது. சற்று கடுமையான குரலில் ராமுவைப் பார்த்துச் சொன்னான்.

"ஏண்டா! குரங்கு மாதிரி மாம்பழத்தை வாயில் அடைத்துக் கொண்டு தின்கிறாயே? பழம் ரொம்ப தித்திப்பாயிருக்கிறதா?" என்று வாயில் ஜலம் ஊறக் கேட்டான் சாம்பன்.

"இது மல்கோவா மாம்பழமாக்கும்! கல்கண்டு மாதிரி தித்திக்கிறது!"

"என்ன? மல்கோவா மாம்பழமா? பெயரைக் கேட்டதுமே எனக்கும் ஒன்று சாப்பிடலாமா என்று தோன்றுகிறதப்பா!"

"எனக்கும் முதலில் மல்கோவா மாம்பழம் என்று பெயர் கேட்டவுடன் அப்படித்தான் தோன்றியது" என்றான் ராமு.

"என் நாக்கில் ஜலம் ஊறுகிறதப்பா? இனிமேல் என்னால் மல்கோவா மாம்பழம் சாப்பிடாமல் இருக்கவே முடியாது."

"உனக்கு நாக்கில் ஜலம் ஊறுகிறதா? அப்படியானால் கொஞ்சம் இரு இதோ வருகிறேன்" என்று கூறி விட்டு விடுவிடென்று வீட்டினுள் ஓடினான் ராமு.

சாம்பன் மல்கோவா மாம்பழம் தனக்குக் கிடைக்கப் போவதை நினைத்து மகிழ்ந்தான்.

ராமு திரும்பி வந்தான், சற்று நேரத்திற்குப் பிறகு. "இந்தாடா, சாம்பா! மல்கோவா என்றதும் நாக்கில் ஜலம் ஊறுகிறது என்றாயே! இதை வைத்து நாக்கில் ஒத்திக் கொண்டால் சரியாய்ப் போய் விடும்!" என்று கூறி அவன் கையில் ஒரு துண்டு பிளாட்டிங் பேப்பரைக் கொடுத்தான்.

— தூண்டிமணி.

ASPRO

'ஆஸ்ப்ரோ' 'ஸீல்டைட்'
பாக்கிங் செய்யப்பட்டு
இருக்கிறதா என்று
பார்த்து வாங்குங்கள்!




3 வில்லைகள் $1\frac{1}{2}$ அணா
30 வில்லைகள் 15 அணா

---

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டிகளுக்கு

○●○

எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களுக்கு குறிப்பிட்ட தேதிகளில்
விஜயம் செய்கிறார். அவரை நேரில் கலந்து ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: காலை 9 முதல் 11 மணி வரை; மாலை 3 முதல் 5 மணி வரை

| இடம் | தேதி | விலாஸம்: |
|---|---|---|
| புதுக்கோட்டை | 19-1-53 | மெஸர்ஸ். வஸந்தா லாட்ஜ் |
| காரைக்குடி | 20-1-53 | மெஸர்ஸ். ஏ. வி. & சன்ஸ், டிராவலர்ஸ் ஹோம் |
| தேவகோட்டை (காலை 9 முதல் 11 மணி வரை) | 21-1-53 | மெஸர்ஸ். ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ் |
| சிவகங்கை (காலை 9 முதல் 11 மணி வரை) | 22-1-53 | மெஸர்ஸ். செளரி & கம்பெனி, ஜெனரல் மர்ச்சண்ட்ஸ் |
| ராமநாதபுரம் (காலை 9 முதல் 11 மணி வரை) | 23-1-53 | மெஸர்ஸ். ராஜன் மெடிகல் ஹால் கெமிஸ்ட்ஸ் & ஜெனரல் மர்ச்சண்ட்ஸ் |

○●○

## ஜம்மி வெங்கடரமணய்யா & ஸன்ஸ்

சென்னை - திருச்சிராப்பள்ளி

---

## 3 வாசனைக் கலாரத்னங்கள்

**கம் கம் ஜவாஜ்**
அகர்பத்திகளில் அதி உயர்ந்தது

**கம் பால்**
கிருமி நாசினியாக உபயோகிக்கும்
மட்டிப்பால் அகர்பத்திகள்

**கம் அகர்**
பூஜைகளுக்குரிய புனிதமான அகர்பத்தி

டி. எல். சுகந்தாலயா, பரிமளத்திரவிய வியாபாரிகள்;
பெங்களூர்-2

# பண்ணையாரின் மகன்

ஹர்ஷன்

ராமலிங்கத் தேவருக்கு அவரையும் அறியாமல் மகனிடம் அவ்வளவு ஆத்திரம் வந்தது. வயது வந்தவன் என்பதைக் கூட நினைத்துப் பார்க்காமல் இருபத்திமூன்று வயது நிரம்பிய அவனைப் 'பளீர்' 'பளீர்' என்று அறைந்து விட்டார். "நல்ல பணத்தாசை உங்களுக்கு! சின்ன பையன் ஏதோ செய்து விட்டான் என்றால் அவனை இப்படியா அடிக்கிறது! அவன் வேலை செய்து சம்பாதிக்கணும்னு என்ன தலையெழுத்து!" என்று அலறிய மனைவியைக் கூட அவர் சட்டை செய்யவில்லை.

"வேலை செய்ய வேணும்! சும்மா தின்றுவிட்டு வீட்டை வளைய வளைய வரச்சொல்லு. சோத்துக்கும் துணிக்கும் சம்பாதிக்காவிட்டாலும் சொந்த செலவுக்காவது வேலை செய்ய வேணாமா!" என்று சீறினார் தேவர்.

முத்துவுக்கு, அடிபட்டதால் ஏற்பட்ட அவமானத்தைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. இயல்பாகவே தந்தையிடம் இருந்த மரியாதையின் காரணமாக அவனால் அவரை எதிர்க்கவும் முடியவில்லை. குமுறும் இதயத்தோடு சட்டையை எடுத்து மாட்டிக்கொண்டு சாலையில் இறங்கி விடுவிடென்று நடந்தான் அவன்.

* * *

ராமலிங்கத் தேவர் இன்றைக்கு நேற்றைக்குப் பணக்காரரானவர் அல்ல. அவருடைய பாட்டனார் காலம் தொட்டு அவர்கள் பணம் படைத்தவர்களே! கிராமத்தில் இருந்த காரணத்தாலோ அல்லது படிப்பதற்குப் போதிய வசதியில்லாததாலோ அவர்களில் யாரும் நாலெழுத்து கூடப் படிக்கவில்லை.

பத்துப் பன்னிரண்டு வயதுவரை புழுதியிலும் கழனி, வெளாறு, தோப்பு, துரவுகளிலும் விளையாடுவார்கள். பிறகு தந்தையோடு நாற்று நடுதல், நீர் பாய்ச்சல், கதிர் அடித்தல் போன்ற தொழில்களை மேற்பார்வை பார்க்கச் சென்றுவிடுவார்கள். இரண்டொரு வருஷங்களில் கலியாணம், குழந்தை என்று ஏற்பட்டுவிட்டால் படிப்பதற்கு அவகாசமும் அவசியமும் ஏது!

ராமலிங்கத் தேவருக்கு வெளியிலிருந்து கடிதம் வந்தால் கூடப் படிக்கத் தெரியாது. அவருக்கென்று ஒரு குமாஸ்தா இருந்தார். எந்த விஷயத்துக்கும் அவர் இல்லாவிட்டால் நடக்காது. பணம் பட்டுவாடா செய்ய வேண்டுமா! செலவழியும் பணத்துக்குக் கணக்கு வழக்கு வேண்டுமா! எல்லாவற்றிற்கும் அவர்தான் பொறுப்பாளி.

அவருக்கு உள்ளூறத் தாம் படிக்காத குறை இருந்தது. அவர் மனைவி கொஞ்சம் படித்திருந்தாள். தமிழை எழுத்துக் கூட்டிப் படித்துப் புரிந்து கொள்ளும் அளவுக்கு அவளுக்குப் படிப்பிருந்தது. எனவே தாம் படிக்காததற்காக அவர் ரொம்பவும் நொந்து கொண்டார். மகன் முத்துவுக்கு ஊரை விட்டு வெகு தூரம் போகவேண்டி இருந்தாலும் சரி, படிக்க வைத்துவிட வேண்டும் என்று அவர் தீர்மானம் செய்து கொண்டார்.

அவருடைய இந்தத் தீர்மானத்தைப் பலமாக உறுதிப் படுத்தும் அளவுக்கு இரண்டொரு சம்பவங்கள் நடந்தன.

தேவரிடம் வேலை பார்க்கும் குமாஸ்தாவின் மகன் பத்தாவது படித்திருந்தான். ஏழையே ஆனாலும் வயிற்றைக் கட்டி வாயைக் கட்டி வெளியூர்ப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பிப் படிக்க வைத்திருந்தார். அதிர்ஷ்ட வசமாகச் சென்னையில் அவனுக்கு வேலை கிடைத்தது. உத்தியோகத்திலிருந்துகொண்டே அவன் மேலும் பல பரீட்சைக்குப் படித்துத் தேர்ச்சி பெற்றான். இப்பொழுது அவன் உயர்ந்த ஒரு ஆபீஸர் பதவிக்கு வந்துவிட்டிருந்தான்.

புதிய வேலையை ஒப்புக்கொண்ட சூட்டோடு சூடாகத் தந்தையைப் பார்க்க வந்தான் அவன்.

மனிதன் இயல்பே அலாதி! உழுது பயிரிடுபவன் "சீ! நமக்குச் சர்க்கார் உத்தியோகம் ஏதாவது கிடைத்தால் மாதம் பிறந்தால் சம்பளம் எண்ணி வாங்கிக் கொண்டு நிம்மதியாகக் காலம் கழிக்கலாமே!" என்று நினைப்பான். சர்க்கார் உத்தியோகஸ்தனோ "உழவாளியாக இருந்தால் காலையில் எழுந்ததும் கவலையில்லாமல் பழைய அமுதை உருட்டிப் போட்டுக் கொண்டு காலார வயல் வெளியைச் சுற்றிப் பார்த்துக்கொண்டு, பண்ணையாட்களிடம் வேலை வாங்கிக் கொண்டு காலம் கழிக்கலாமே!" என்று நினைப்பான்.

குமாஸ்தாவின் மகனுக்கும் அப்படித்தான் அவன் வாழ்க்கை அலுத்து விட்டிருந்தது. "என்னப்பா! இந்தக் கிராமத்திலேயே நிலம் நீச்சு வாங்கிப் போட்டிருந்தால் எவ்வளவு நன்றாயிருக்கும். வெறும் இயந்திரம் மாதிரி டிராமையும் பஸ்ஸையும் பிடித்துக் காரியாலயம் சென்று கை நோகும்வரை பேனாவால் எழுதி, சம்பாதிக்கும் பணத்தை இருபது தேதிக்குள் செலவழித்துவிட்டு முதல் தேதியை எதிர்பார்த்து, உப்பு சப்பில்லாத வாழ்வு வாழவேண்டி இருக்கிறது" என்று அங்கலாய்த்தான் அவன்.

குமாஸ்தா சிரித்தார்: "அட, அசடே! உனக்குத் தெரிந்தது அவ்வளவுதான். இதோ நீ ஆபீஸராகி விட்டாய். இனி நீ இட்டதுதான் சட்டம். ஒருவனை வேலையில் அமர்த்தவோ வேலையை விட்டு நீக்கவோ உன்னால் முடியும். வெறுமனே ராமலிங்கத் தேவரை நினைத்துக் கொண்டு பொறாமைப் படக்கூடாது. அவருக்கு ஒரு எழுத்துத்தான் தெரியுமா! பெண்டாட்டியின் கடிதத்தைப் படித்துச் சொல்லக்கூட என் உதவி அவருக்கு வேண்டும். அவரைப் பற்றிப் பேசப் போய் விட்டாயே!"

ஏதோ வேலையாக அந்தப் பக்கம் வந்த தேவரின் செவிகளில் குமாஸ்தாவின் வார்த்தைகள் நாராசமாகப் பாய்ந்தது. அடுத்த நிமிஷமே அவர் ஒருவித முடிவுக்கு வந்தார். முத்துவைப் படிக்க வைக்க வேண்டும் அவன் ஒரு ஆபீஸராக வேண்டும். படிப்புக்கும் பணத்துக்கும் வெகு தூரம் என்றால் அவனுடைய படிப்புக்காக, அவனுக்குப் போதிய பணத்தைத் தவிர ஊதாரித்தனமான செலவுகளுக்கு வழி செய்யக்கூடாது என்பதுதான் அது.

ஆறாவது வயதின் துவக்கத்திலேயே மகனைச் சென்னைக்கு அனுப்பி விட்டார் அவர். செட்டாகக் கணக்குப் பார்த்துப் பணம் அனுப்பினார். சினிமா, நாடகம் எதற்கும் காலணா அனுப்புவதில்லை. தாயிடம் எப்போதாவது தந்தைக்குத்



சோப்புக்காரர் :—என்னங்க! இப்போ கடை வியாபார மெல்லாம் எப்படி நடக்குதுங்க!

கடைக்காரர் :—நல்லாத்தான் நடக்குது! நான் நடந்தா அதுவும் நடக்குது; நான் உட்கார்ந்தால் ஒரேயடியா அதுவும் உட்கார்ந்து விடுது! ஓடினாலும் கூடவே ஓடுதுங்க!

தெரியாமல் பெறும் பணம்தான் அவனுக்குச் சினிமா நாடகங்கள் பார்க்க உதவிற்று.

தேவரின் மனைவி கணவனோடு எவ்வளவோ முறை வாதாடினாள். அவர் அதைப் பொருட்படுத்தவே மாட்டார். "எப்படி இருந்தாலும் அவன் பணம்தானே! கஷ்டப்பட்டால்தான் படித்துப் பெரிய உத்தியோகஸ்தனாகலாம்" என்பார் அவர்.

"உத்தியோகம் பார்ப்பது என்றால் அது ஒரு கௌரவமா? அது ஒருவனிடம் கைகட்டிப் பிழைக்கும் பிழைப்புத்தானே! நிலத்தில் உழுது பாடுபட்டு வேலை செய்வதை விட உயர்ந்தது உலகத்திலேயே ஒன்றுமில்லை. அவனுக்கு எழுதப் படிக்கத் தெரிந்திருக்க வேண்டியதுதான். அதற்காகச் சென்னையிலே போய்ப் படிக்க வேண்டுமா? உடம்புதான் கெட்டுப் போகும். பக்கத்திலிருக்கும் பள்ளிக் கூடத்துக்குத் தினம் நம் வண்டியில் போய்ப் படித்து வரலாமே!" என்று அவள் கேட்டால் அதற்குப் பதிலே கிடைக்காது.

முத்து நன்றாகத்தான் படித்தான். பி. ஏ. பரீட்சையில் தேர்ச்சியும் பெற்றான் அவன். இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அவனுக்குச் சென்னையிலிருந்து ஒரு கம்பெனிக்குத் தேவைப்பட்ட காஷியர் பதவி ஒன்றுக்காக நேரில் வந்து காணும்படி ஒரு கார்டு வந்தது. முத்து பெரிய வேலைக்குப் போகப் போகிறான், தம் எண்ணம் ஈடேறி விட்டதாகத் தேவர் மனம் குளிர்ந்தார். அவனை ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

* * *

'இன்டர்வியூ' வேலைக்காகச் சென்னை சென்ற முத்து எழும்பூரிலிருந்து நேரடியாக ஒரு ஓட்டலுக்குச் சென்று சாப்பாட்டை முடித்துக் கொண்டான். உடை உடுத்திக் கொண்டு தனக்குக் கார்டு அனுப்பிய கம்பெனியைத் தேடிப் புறப்பட்டான்.

அவன் குறிப்பிட்ட இடத்தை அடைந்தபோது ஏற்கனவே ஆறு, ஏழு பேர் காத்துக் கொண்டிருந்ததைக் கவனித்தான். சர்டிபிகேட்டும் கையுமாக இருந்த அவர்களைப் பார்த்தவுடன் அவர்களும் வேலைக்காகத்தான் வந்திருக்கிறார்கள் என்பதை அவன் உணர முடிந்தது.

கம்பெனி மானேஜர் ஒவ்வொருவராகக் கூப்பிட்டார். அவருக்கு ஏனோ அவர்கள் எல்லோரிலும் முத்துவைப் பிடித்திருந்தது. மேலும் சொத்துள்ளவன் என்பதும் தெரியவே 'ஆபீஸ் பணத்தைக் கையாட மாட்டான். உண்மையாக வேலை செய்வான்' என்று எண்ணினார் அவர். அதனால் முத்து தேர்ந்தெடுக்கப் பட்டான்.

முத்து வெளியில் வந்தபோது அதுவரை காத்துக்கொண்டிருந்த எல்லோருக்கும் விஷயம் தெரிந்ததும் அவனிடம் பொறாமையாக இருந்தது. ஆனால், முத்து அவர்களிடம் சந்தோஷமாகவே பேசினான். "வாருங்களேன். எல்லாருமாகக் காப்பி சாப்பிடுவோம். எனக்குக் கிடைத்த வேலைக்காகக் கொடுத்த விருந்தாக இருக்கட்டுமே!" என்றான்.

அவனிடம் உள்ளூறப் பொறாமையாக இருந்தாலும் வலிய வரும் சிற்றுண்டியைவிட மனமில்லாத அவர்கள் அவனோடு சென்றனர். முத்துவுக்கு அடுத்தபடியாக இரண்டொரு மாதங்களில் வேறு வேலை தரப் போவதாகச் சொன்ன வேணு மாத்திரம் தயங்கி நின்றான். அவன் கண்களில் நீர் கசிவதை முத்து கவனிக்கத் தவறவில்லை.

வேணுவின் தோளில் வெகு சுதந்திரத்துடன் கை போட்டுக் கொண்டு ஓட்டலுக்கு இழுத்துச் சென்றான். மற்றவர்கள் எல்லோரும் இனிப்பும் காரமுமாக உள்ளே தள்ளிக் கொண்டிருந்தனர். வேணு தனக்கு எதுவும் வேண்டாம் என்று சொல்லி விட்டான். அவனைப் பலவந்தப்படுத்தி உண்மையைத் தெரிந்து கொள்ள முத்துவுக்கு வெகு நேரம் பிடித்தது.

வேணுவுக்கு மூன்று தங்கைகள். வயோதிகத் தாய் வேறு. அவனுடையது என்று சொல்லிக் கொள்ள ஒரு சின்ன வீட்டைத் தவிர எதுவும் இல்லை. எவ்வளவோ சிரமப்பட்டுப் பத்தாவது பாஸ் செய்த அவனுக்குச் சுமார் ஒரு வருஷமாக வேலை எதுவும் கிடைக்கவில்லை. தன்னையும், மற்ற நாலு உயிர்களையும் காப்பாற்றிக் கொள்ள அவனால் முடியவில்லை.

"முத்து! காலையிலிருந்து குடிக்கக் கூடத் தண்ணீர் இல்லாமல் என் பெற்றோர்களும், தங்கைகளும் வீட்டில் அல்லல் படும்போது எனக்குப் பாதம் அல்வாவும் பாதம் கீரும் எப்படி இறங்கும்!" என்றான் அவன்.

முத்துவுக்கு அவன் நிலைமை மிகவும் பரிதாபமாக இருந்தது.

"கொள்ளை லாபம் அடிக்கும் மில் முதலாளிகள், ஏழைக் கைத் தறிக்காரன் செய்யும் வேலைகளையும் மில்லில் செய்யத் துவங்கவே, கைத்தறிக்காரன் சோற்றுக்கு அவதிப்படுகிறான். பெரிய மனிதர்களெல்லாம் லாபத்தைக் கருதி 'சலூன்'களும் 'லாண்டிரி'களும் வைக்கத் துவங்கும்போது க்ஷவரத் தொழிலாளியும் சலவைத் தொழிலாளியும் சங்கடப்படுகிறான். சாப்பாட்டுக்கும், மற்ற செலவுகளுக்கும் கூட வகை படைத்த பணக்காரர்கள் எல்லாம் கௌரவத்துக்காகவும், பேராசையாலும், பதவி வேட்டை ஆடும்போது சோற்றுக்குக் கதி யில்லாதவன் மேலும் அவஸ்தைப்படுகிறான்" என்றான் வேணு ஆத்திரமாக.

முத்துவுக்குத் தன் மண்டையில் யாரோ சம்மட்டி கொண்டு அடிப்பது போல இருந்தது.

கௌரவத்துக்காகவும், பேராசையாலும் தானே அவன் வேலை தேடி வந்தது!

வேணு சொல்லும் ஒவ்வொரு வார்த்தையும் உண்மை என்பதை அவன் உணர்ந்தான். சுதந்திர இந்தியாவின் ஒவ்வொரு தனி மனிதனும் நாட்டின் முன்னேற்றத்துக்காகச் செய்ய வேண்டிய கடமைகளில் 'தனக்கு உணவு கொடுக்கும் புனிதத் தொழில் இருக்கும்போது, அதற்கு வேண்டிய ஏராளமான சொந்த நிலம் இருக்கும்போது, பிறர் வாழ்க்கையில் மண்ணை அள்ளிப் போடும் வழியில் அவன் தொழிலில் தலையிடா திருப்பது அநியாயமியம் என்பதை நினைத்துப் பார்த்துக் கொண்டான். வேணுவுக்குத் தான் செய்ய இருந்த ஈனமான செயலைக் குறித்து முத்துவுக்கு வருத்தமாக இருந்தது.

அவன் வேணுவைத் தட்டிக் கொடுத்தான். "வேணு, அந்த வேலை உனக்குத் தான். தூங்கிக் கொண்டிருந்த என் இதயத்தை எழுப்பி விட்டாய். என்னை மன்னித்துக் கொள்" என்றான்.

பொய் சொல்ல விரும்பாத அவன் தன் தந்தையிடம் நடந்ததைச் சொன்னபோது அவர் துள்ளினார். "இவன் பெரிய தர்மப் பிரபு! பாரத நாட்டின் நாற்பது கோடி மக்களையும் காப்பாற்றி விட்டதாக எண்ணம். பரம முட்டாள்" என்று கத்தினார். அவருடைய ஆத்திரத்தின் முதிர்ச்சியில்தான் அவர் அவனை அடித்து விரட்டியதும்.

*　　　*　　　*

வீட்டை விட்டு வெளியேறிய முத்து சென்னையை அடையும் நோக்கத்தோடு ரயிலடியை நோக்கி நடந்தான். பார்க்கப்போனால் அவன் வரையில் நல்ல காரியத்தைத் தான் செய்தான். இதற்குப் பிரதியாக அவன் தன் தந்தையிடம் எதிர்பார்த்தது வெறும் இட்டும் வசவுமே ஆனால், அவர் தன்னை அடித்து விட்டாரே!

அவன் உள்ளம் பின்னுக்குச் சென்றது. திரும்பத் திரும்ப அவன் மனம் "கை நீட்டி அடிக்கும் படியாக நான் அப்படி என்ன பெரிய தப்பு செய்து விட்டேன்" என்று அலறிற்று.

'ஒரு வேலை நான் செய்தது தப்புத்தானா! சின்ன வயதிலிருந்து என்னை வளர்த்து ஆளாக்கி நான் ஒரு வேலையில் அமர வேண்டும் என்ற ஆசையோடு படிப்பும் சொல்லிக் கொடுத்த தந்தையின் கோட்டையை அரை நொடியில் தகர்த்து விட்ட என் செய்கை சரிதானா?'

*　　　*　　　*

இரவு முழுவதும் தன்னை இதே கேள்வியைக் கேட்டுக் கொண்டான் அவன்.

அவன் மனம் அவனுக்கும் பதில் கொடுத்தது. "மனிதத் தன்மை உள்ளவன் செய்ய வேண்டியதைத் தான் நீ செய்தாய். உனக்கு அவசியம் வேறு வேலை கிடைக்கும். இந்த இடைக் காலத்தில் நீ சாப்பாட்டுக்கு இல்லாமல் தவிக்கப் போவது இல்லை. ஆனால், இந்தக் காலத்தில் வேணுவும் அவனைச் சார்ந்தவர்களும் தவிப்பது உறுதி. எனவே நீ செய்ய வேண்டியதைத்தான் செய்தாய்!" என்றது அது.

வீட்டை விட்டு வெளியே வந்தபோது அவனுக்குத் திரும்பவும் வீட்டுக்குப் போக வேண்டும் என்ற ஆசையே இல்லை. ஆனால் இப்போது அவனுக்குத் திரும்பிப் போக வேண்டும் என்று நினைத்தான். செல்வம் படைத்தவர்கள் செய்ய வேண்டிய காரியங்கள் எவ்வளவோ! அவைகளில் ஏதாவது ஒன்றைச் செய்வதற்காகவாவது நான் வீடு திரும்பத்தான் வேண்டும் என்று எண்ணினான்.

முத்து வீடு திரும்பியபோது அவன் தந்தை கவலையோடு அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தார். அவரையும் மீறிய ஆத்திரத்தில் அவனை அடித்து விட்டாரே தவிர அவருடைய மனிதத் தன்மை விழித்துக்கொண்டபோது அவரால் தம் தவறை நன்றாக உணர முடிந்தது.

சாலையின் ஓரத்தில் முத்துவைக் கண்டதும் அவர் ஓடோடியும் சென்று மகனை வாரித் தழுவிக் கொண்டார். "அப்பா! நீ நமக்கு இருக்கும் நிலங்களைக் கவனித்துக் கொண்டாலே போதும். நாம் எத்தனையோ பேருக்கு வேலை கொடுத்து உதவலாம். ஏதோ அறியாமையில் யாரோ கூறிய அறிவில்லாத வார்த்தையை மனத்துள் எண்ணிக் கொண்டு உன்னைக் கோபித்துக் கொண்டேன். நீ எந்த வேலைக்கும் போக வேண்டாம். ஆனால், உன் தந்தையிடம் கோபித்துக் கொண்டு, கடைசி காலத்தில் அவரைத் தவிக்க விட்டு விடாதே."

அவர் கண்கள் இரு துளி நீரைச் சிந்தின.

தந்தையின் அன்பைக் கண்ட முத்துவுக்குப் பரிதாபமாக இருந்தது. "வெறுமனே மனச் சாந்திக்காக வீட்டை விட்டு வெளியேறினேனே தவிர உங்களை விட்டு ஓட வேண்டும் என்ற ஆசையே எனக்கு இல்லை, அப்பா! வளர்த்தீர்கள், உணவிட்டீர்கள், உங்களுக்கு என்னை அடிப்பதற்குச் சுதந்திரம் கிடையாதா! தந்தை கோபித்துக் கொண்டதற்காக வீட்டை விட்டு ஓடுபவன் மனிதத் தன்மை இல்லாதவன், அப்பா!"

தேவர் மௌனச் சிரித்தார். 'உண்மையிலேயே முத்து மனிதத் தன்மை படைத்தவன் தான். ஒவ்வொரு வழியிலும் அதை அவன் நிரூபித்து விட்டானே!" என்று முணுமுணுத்தார் அவர்.

## நவீனக் கண்ணன்!



"ஓய்! நீர் அசோகா பாக்குத் தான் போட்டுக் கொள்வதைப் பார்த்துப் பாடி பாட்டையே மறந்து மாற்றி அசோகா பாடி விட்டான்!"




# காதற் பரீட்சை

சௌமித்ரி

மாலைக் கதிரவனின் மங்கலான கிரணங்கள் மரங்களடர்ந்த அந்த மாளிகைத் தோட்டத்தினுள் ஊடுருவிச் செல்லச் சக்தியற்று நிலையிழந்தன. 'ஜில்'லென்று அடித்த தென்றல் காற்று அந்தத் தடாகக் கரையிலமர்ந்திருந்த வசுமதியின் அழகான முகத்தை உராய்ந்து கொண்டு சென்றது. மரங்களில் கூடு கட்டியிருந்த பறவையினங்களின் சத்தத்தைத் தவிர அங்கு ஒரே அமைதி நிலவியது. இருள் அந்த இடத்தை ஆட்கொள்வதையும் உணராமல் அவள் எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தாள். அவள் அருமையாக வளர்த்து வந்த பச்சைக் கிளி அவள் தோள் மேல் உட்கார்ந்து "கீச் கீச்" என்று கத்தியதையும் அவள் கவனிக்கவில்லை.

தன் கண்களை யாரோ பொத்துவதை உணர்ந்த வசுமதி சிந்தனையிலிருந்து விடுபட்டு திடுக்கிட்டு எழுந்து நின்றாள். காதல் கனிந்த பார்வையுடன் உதட்டில் புன்னகை மிளிர நின்று கொண்டிருந்தான் உதயசேகரன்.

"வசுமதி! என்ன ஆழ்ந்த சிந்தனை! நான் வந்து உன் அருகில் நின்று எத்தனை நேரமாகிறது தெரியுமா!" என்று கேட்டான் உதயசேகரன்.

"ஒன்றுமில்லை. எதையோ சிந்தித்துக் கொண்டிருந்தேன். அதிருக்கட்டும், போர்க்களத்திலிருந்து எப்பொழுது திரும்பினீர்கள்! நம் அரசர் வெற்றியடைவதற்குக் காரணமாகயிருந்தது உங்களுடைய வாள் திறமைதான் என்று எல்லோரும் பேசிக் கொள்கிறார்கள்!"

"இல்லை வசுமதி, வெற்றிக்குக் காரணம் என் வாள் திறமையல்ல! நீ தான்! போர்க்களத்தில் நான் சோர்வுற்றிருந்தபோது உன் செந்தாமரை முகம் என் முன் தோன்றி என்னை உற்சாகப்படுத்தியது. பகைவர்களுடன் வாள் சண்டை செய்யும்போது பிறக்கும் 'கணீர் கணீர்' என்ற ஒலி உன் வெண்கலச் சிரிப்பை நினைவூட்டி என் வீரத்துக்கு உரமளித்தது. அவர்கள் சிந்திய ரத்தம் உன் சிவந்த அதரங்களை நினைவூட்டி என் உள்ளத்தில் இன்பப் புயலை உண்டாக்கியது. அந்த இன்பப் புயலின் வேகத்தில் என் வீரம் சுடர் விட்டெரிந்து பகைவரைப் பஸ்மீகரம் செய்து விட்டது. உன் நினைவு இல்லை என்றால் நான் போரில் வெற்றி கண்டிருக்கவே முடியாது, வசுமதி!"

"போதும் உங்கள் முகஸ்துதி!"

"இல்லை வசுமதி. முழுவதும் உண்மை. அது போகட்டும். இன்று அரண்மனையில் ஒரு விருந்து நடக்கப் போகிறது. அதற்கு நீ அவசியம் வர வேண்டும். உன் தந்தைதான் அதற்குப் பிரமாதமான ஏற்பாடுகள் செய்திருக்கிறார்" என்று கூறிவிட்டு அவள் அழகிய முகத்தை ஆவலுடன் நோக்கினான் உதயசேகரன்.

வசுமதி உடனே பதிலளிக்கவில்லை. அவள் மனம் உதயசேகரன் தன் அழகையும் தன்னையும் புகழ்ந்து கூறிய வார்த்தைகளிலே சிக்கிச் சுழன்று கொண்டிருந்தது. அவன் புகழ் மொழிகள் யாவும் தன் உடலைப் பற்றியதாகயிருக்கிறதே யல்லாமல் தன் உள்ளத்தைப் பற்றி ஒரு வார்த்தை கூடக் காணுமே. 'என் அழகிய உடலைக் காதலிக்கும் அவர் என் உள்ளத்தைக் காதலிக்கிறாரா! என் அழகு அழிந்த பின்னும் அவர் என்னை மனமார நேசிப்பாரா!' என்று சிந்தித்தது அவள் மனம். இந்தச் சிந்தனையில் மனத்தைக் குழப்பிக் கொண்ட அவளுக்கு அன்று அரண்மனைக்குச் செல்லப் பிடிக்கவில்லை. தலைவலி என்று ஒரு பொய்யைக் கூறி விருந்திற்கு வர மறுத்து விட்டாள்.

* * *

சோமேசுவர வர்மனிடம் பிரதம அமைச்சராக இருந்த ஆதித்தனுடைய ஏக புதல்வி வசுமதி. தன் பதினாறாவது பிராயத்தை எட்டிப் பிடித்துக் கொண்டிருந்த அவள் கலையிலும் கல்வியிலும் தன் வயதிற்கப்பாற்பட்ட ஞானத்தைப் பெற்றிருந்தாள். தன்னை உண்மையாக நேசிக்கும் ஒருவனையே மணக்க வேண்டும் என்பதுதான் அவள் லட்சியம். ஆனால் அவளுக்கிருந்தது ஒரு சந்தேகம். காதல் அழகுள்ளவர்களிடையேதான் தோன்றுமா! காதல் உதயமாக உடல் அழகு அவசியந்தானா! உடலழகைக் காதலிக்கும் ஒருவர் மற்றவரின் உள்ளத்தின் அழகைக் காதலிக்கிறாரா!

இந்தக் கேள்விகள் வசுமதியின் காதல் உள்ளத்தில் ஓயாமல் ஒலித்துக் கொண்டிருந்தன !

இவற்றிற்கு விடை காணத் தன் குருதேவரிடம் ஒரு நாள், "தெய்வீகக் காதல் என்றால் என்ன !" என்று வினவினாள்.

"பரிசுத்தமான இரு இதயங்கள் இரண்டறக் கலந்து இன்பம் துய்ப்பதுதான்" என்று விடையளித்தார் குருதேவர்.

"அப்பொழுது தெய்வீகக் காதலுக்கு உடலழகு அவசியமில்லை யல்லவா !"

"அவசியமில்லைதான் !"

"பின் காவியங்களிலும் கதைகளிலும் தங்கள் கதா பாத்திரங்களை ஆசிரியர்கள் ஏன் பிரமாதமாக வர்ணிக்கிறார்கள்! அவைகளைப் படிக்கும் போது அழகுள்ளவர்களிடையில்தான் காதல் ஏற்படுகிறது என்று நினைக்கத் தோன்றுகிறதல்லவா!"

"வசுமதி! கோயிலில் உள்ள சிற்பங்களை நீ பார்த்திருக்கிறாய். சௌந்தர்யமும் காம்பீர்யமும் பொருந்திய சிற்பங்களைக் கண்டு நம்மையறியாமல் ஏதோ ஒரு சக்தி நம்மை வசீகரிப்பதை நீ உணர்ந்ததில்லையா ! அதைப் போலத்தான் காதலன் தன் காதலியின் எழிலுருவத்தில் மயங்கி உன்மத்தனாகி விடுகிறான். காதலி காதலனின் அழகில் மனத்தைப் பறி கொடுத்து விடுகிறாள்."

"அப்பொழுது காதல் ஏற்படப் புற அழகு அவசியம் என்றல்லவோ ஆகிறது !"

"ஆம், வசுமதி ! புற அழகின் கவர்ச்சியே என்றும் மாறாத, நிலையான காதலின் தன்மை. உடலழகில் திருப்தியடைந்த காதலர்களின் இதயங்கள் தான் காதலென்னும் கொடியினால் இறுகப் பிணைக்கப்படுகின்றன. அந்த இணைந்த இதயங்களில்தான் தெய்வீகக் காதல் என்னும் தளிர்ச்செடி தோன்றி, ஊன்றி வளர்ந்து, தருவாகத் தழைக்கிறது" என்று முடித்தார் குருதேவர்.

அவர் கூறிய வார்த்தைகள் யாவும் அவள் காதுகளில் ஒலித்துக் கொண்டேயிருந்தன. "என்ன ! உடலழகின் கவர்ச்சியிலே காதல் உதயமாகிறதா ! அப்படி என்றால் என் எழிலுருவத்தில் தன் மனத்தைப் பறி கொடுத்திருக்கும் உதயேசுவரன் என் உள்ளத்தைக் காதலிக்கிறாரா ! அதை எவ்வாறு அறிவது !" என்று சிந்தித்து மனத்தைக் குழப்பிக் கொண்டாள் அவள். அதை அறிந்து கொண்ட பிறகுதான் அவனை மணந்து கொள்ள வேண்டும் என்று தீர்மானித்தாள் வசுமதி.

* * *

மறு நாள் காலை.

வசுமதி தன் தந்தையின் அன்பு ததும்பும் குரலைக் கேட்டு விழிப்புற்றாள்.

"வசுமதி ! நீ நேற்று அரண்மனையில் நடந்த விருந்துக்கு ஏன் வராமலிருந்து விட்டாய் ! அரசர் நம் உதயேசுவரனுடைய வீரத்தைப் புகழ்ந்து அவனுக்கு ஒரு வைர வாளைப் பரிசளித்தார். அக் காட்சியைக் காண நீ அங்கில்லையே என்று உதயேசுவரன் வருந்தியதை அவன் முகபாவத்திலிருந்தே அறிந்து கொண்டேன்" என்றார் ஆதித்தன்.

நாணத்தால் சிவந்த கன்னங்களுடன் "நேற்று எனக்குத் தீராத தலைவலி. அதனால்தான் வரவில்லை" என்றாள் வசுமதி.

"வசுமதி ! அரசர் உதயேசுவரனின் வீரத்துக்கு வைர வாளைப் பரிசளித்தாரல்லவா ! பிரதம மந்திரியாகிய நான் என் அருமைக் குமாரியான உன்னைப் பரிசளிக்கப் போகிறேன். அதில் உனக்கு ஆட்சேபணையில்லையே !" என்றார் ஆதித்தன்.

வசுமதி உடனே பதிலளிக்காதது அவருக்குச் சற்று வியப்பையளித்தது. உதயேசுவரனை உயிர் போல நேசிக்கும் அவள் அவனை மணப்பதற்கு ஏன் யோசனை செய்ய வேண்டும் என்று அவருக்குப் புரியவில்லை.

"அப்பா, அவர் என்னை உண்மையாகக் காதலிக்கிறாரா என்பதை அறிந்து கொண்ட பிறகுதான் அவரை நான் மணக்க முடியும்" என்று தன் எண்ணத்தை வெளியிட்டாள் வசுமதி.

"அப்பொழுது நீ, உதயேசுவரன் உன்னைக் காதலிக்கவில்லை என்று நினைக்கிறாயா !"

"அதைத்தான் பரீட்சை செய்து அறிந்து கொள்ள வேண்டும்."

"எப்படி !"

"விரைவில் அதற்குச் சந்தர்ப்பம் கிடைக்கும்."

"சரி, உன் இஷ்டப்படியே செய்வோம்" என்று கூறிவிட்டு ஆதித்தன் வெளியே போய் விட்டார்.

இரண்டு மாதங்கள் உருண்டோடிவிட்டன. அடிக்கடி அந்த மாளிகைக்கு வந்து சென்று கொண்டிருந்த உதயேசுவரன் சில நாட்களாக அந்தப் பக்கமே வருவதில்லை. அதற்குக் காரணம், தோற்று ஓடிய ஹேமவர்மன் தன் பலத்தைப் பெருக்கிக் கொண்டு மீண்டும் சோமேசுவரன் நாட்





ஜிப்பாக்காரர்:—பல் வலி பொறுக்க முடிய வில்லை சார்! ஒரு வாரமாக ரொம்பவும் கஷ்டப்படுகிறேன்.

சூட்காரர்:—நானாக இருந்தால் என்ன செய்திருப்பேன் தெரியுமா? உபத்திரவம் கொடுக்கும் பல்லை உடனே பிடுங்கி யிருப்பேன்.

ஜிப்பாக்காரர்:—உங்கள் பல்லா யிருந்தால் நானுந்தான் அப்பொழுதே பிடுங்கி யிருப்பேன்.

---

டின்மேல் படையெடுத்து வரச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான். ஆகவே போருக்கு வேண்டிய முஸ்தீப்புகள் செய்வதில் முழு நேரமும் செலவிட்டான் சேனாபதி உதயசேகரன். உலைக்களம் சென்று ஆயுதங்களின் உறுதியைப் பரிசீலிப்பதிலும் படை வீரர்களைத் தயார் செய்வதிலும் அவன் நேரம் சரியாக இருந்தது.

சமயத்தை எதிர் நோக்கியிருந்த ஹேமவர்மனை அதிக நாட்கள் காக்க வைக்காமல் சோமசேகரனுடைய படைகள் எதிரியின் தலை நகரை நோக்கிப் புறப்பட்டன. இரு திறத்தாருக்குமிடையே கடுமையான போர் மூன்று மாதங்கள் வரை நடந்தது. ஏராளமான வீரர்கள் மடிந்தனர். உதயசேகரனின் தலைமையில் சென்ற சைனியம் எதிரியின் தலை நகரத்தை அழித்துச் சீர் குலைத்தது. ஹேமவர்மனுடைய நெஞ்சில் உதயசேகரனுடைய வாள் பாய்ந்தது. வெற்றிமுரசு ஒலிக்கத் திரும்பி வந்தான் உதயசேகரன்.

மாலை நேரம். 'டக் டக்' கென்ற சத்தத்துடன் புழுதியைக் கிளப்பிக் கொண்டு வேகமாகப் பாய்ந்தோடிக் கொண்டிருந்த வெண்புரவியின் மீது அமர்ந்திருந்த உதயசேகரனின் மனம் வசுமதியைக் காணத் துடித்துக் கொண்டிருந்தது. அவள் இருப்பிடத்தை அடைந்ததும் குதிரை மேலிருந்து துள்ளிக் குதித்து உள்ளே விரைந்தான்.

"வசுமதி!" என்றழைத்தவாறு அவள் அறைக்குள் பாய்ந்து நுழைந்தான் உதயசேகரன்.

பணிப் பெண் ஒருத்தி விளக்கை ஏற்றிக் கொண்டிருந்தாள். மேல்மாடியில் நின்று வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்த வசுமதியை ஒரு நொடியில் அடைந்த அவன் அவளை அன்புடன் அணைத்துக் கொண்டான். தன் முகத்தை அவனது பரந்த மார்பில் புதைத்துக் கொண்ட வசுமதி ஒன்றுமே பேசவில்லை.

"வசுமதி! என்மேல் கோபமா!" என்று கேட்ட வண்ணம் அவள் கூந்தலை வருடிவிட்டான் சேனாபதி உதயசேகரன்.

தன் பாதத்தில் விழுந்த சூடான கண்ணீர்த் துளிகளைக் கண்டதும் திடுக்கிட்ட அவன் பதட்டத்துடன் அவள் முகத்தை நிமிர்த்தினான். அவ்வளவு தான். மின்சாரத்தால் தாக்குண்டவன் போலத் திகைத்துப் பின் வாங்கிவிட்டான். எந்த அழகிய, இளமை ததும்பும் வதனத்தைக் காணவேண்டும் என்று துடித்து ஓடோடியும் வந்தானோ அந்த முகம் அவலட்சணத்தின் சின்னமாக, விகாரத்தின் சிகரமாக மாறி விட்டிருந்தது! பேயறைந்தவன் போல நின்று கொண்டிருந்தான் அவன்.

"உதயசேகரரே! ஏன் இப்படித் திகைத்து நின்று விட்டீர்கள்! பெரியம்மையின் கொடுமைக் காளான என் முகத்தைக் காண உங்களுக்கு வெறுப்பாக யிருக்கிறதா!" என்று கேட்டுக் கொண்டே அவனை நெருங்கினாள் அவள்.

தன் அருமை வசுமதியின் இனிய குரலும் அந்த பயங்கரமான நோயினால் மாறிவிட்டிருந்ததை உணர்ந்த உதயசேகரனுக்கு உலகமே சுழன்றது. பைத்தியம் பிடித்தவனைப் போல அங்கிருந்து ஒரே ஓட்டமாக ஓடிவிட்டான்.

—அந்த அறையை விட்டு உதயசேகரன் அகன்றதும் ஜன்னல் திரைச் சீலையின் பின் மறைந்திருந்த ஒரு உருவம் வெளிப்பட்டது.

"அம்மா! எப்படி என் நடிப்பு!" என்று கேட்டபடி அவளை நெருங்கினாள் அதுவரைக்கும் வசுமதியைப் போல நடித்த பணிப் பெண்.

ஆம், அந்த உருவம் உண்மையில் வசுமதியே தான். உதயசேகரன் தன்னை, தன் உள்ளத்தைக் காதலிக்கிறானா அல்லது தன் உடலை மட்டுந்தான் காதலிக்கிறானா என்பதை யறிந்து கொள்ள அவள் மற்றொரு பெண்ணைத் தன்னைப் போலவே உடை உடுத்தி அந்தச் சிறு நாடகத்துக்கு ஏற்பாடு செய்திருந்தாள். அதன் முடிவும் இப்பொழுது அவளுக்குத் தெரிந்து விட்டது. உதயசேகரன் தன்னை உண்மையாகக் காதலிக்கவில்லை. தன் உடலழகு சிதைந்து விட்ட தென்றறிந்ததும் நடுங்கி ஓடிவிட்டான் என்பதை உணர்ந்ததும் அவள் மனம் மிகவும் வருத்த மடைந்தது.

* * *

மறுநாள் ஆதித்தனும் வசுமதியும் ஒரு அறையில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர்.

"அப்பா! உதயசேகரன் என்னை உண்மையாகக் காதலிக்கவில்லை என்பதை யறிந்து கொண்டேன். அவரை நான் மணக்க விரும்பவில்லை" என்று தன் முடிவைக் கூறினாள் வசுமதி.

"என்ன! உதயசேகரன் உன்னை உண்மையாகக் காதலிக்க வில்லையா! அவன் உன்மேல் உயிரையே வைத்திருக்கிறானே!" என்று ஆச்சரியத்துடன் கூறினார் ஆதித்தன்.

"ஆம், என் அழகிய உடலின்மீது தான் அவர் உயிரை வைத்திருக்கிறார். என் உள்ளத்தை அவர் காதலிக்கவில்லை" என்றாள் வசுமதி.

இதைக் கேட்டதும் ஆதித்தனுக்கு ஒரு கணம் ஒன்றுமே புரியவில்லை. தன் புதல்வி வசுமதிதான்

இவ்வாறு பேசுகிறளோ, இல்லை கனவுத் தோற்றமோ என்று கூட நினைக்கத் தொடங்கி விட்டார். தன் எதிரிலேயே அமர்ந்து தன் அபிப்பிராயத்தைக் கூறும் வசுமதியை ஒரு தரம் பார்த்தார். அவள் முக பாவங்களைப் பார்த்தார். அவள் சொல்லுவது முடிவானது என்பதைத் தெரிந்து கொண்டார்.

தன் தந்தையின் நிலைமையைப் புரிந்துகொண்ட வசுமதி தான் நடத்திய நாடகத்தை அவருக்கு எடுத்துக் கூறினள். அப்பொழுது உதயசேகரன் இருந்த நிலையை அவள் தீயில் காலை வைத்தவன் போல, பார்க்கக் கூடாததை பார்த்து விட்டவன் போல கண்களை இறுக மூடிக்கொண்டு ஓடியதை எடுத்து விளக்கிக் கூறினள்.

இதை யெல்லாம் கேட்ட பிறகும் மந்திரியின் மனம் அவள் கூறியதை ஒப்புக்கொள்ளமறுத்தது.

"வசுமதி! எனக்கு உதயசேகரனை நன்ருகத் தெரியும். அவன் சுத்த வீரன். கோழையல்ல. வீரர்கள் எப்பொழுதும் இப்படி நடக்கவே மாட்டார்கள்" என்று கூறினர்.

அந்தச் சமயத்தில் வீரனொருவன் அங்கு வந்து வணங்கி நின்றன். வசுமதியிடம் ஒரு ஓலையைக் கொடுத்து விட்டு விரைந்து சென்றன்.

வசுமதி அதைப் படித்துப் பார்த்தாள்:

"என் இதயத்தில் ஒளிவீசும் வசுமதி!

நேற்று உன்னிடம் நான் நடந்து கொண்ட முறை உன்னைப் பெரிதும் புண்படுத்தி யிருக்கும். அதற்கு நான் மிகவும் வருந்துகிறேன். என்னை மன்னித்துவிடு. பயங்கரமான நோயால் பாழ்பட்ட உன்னைக் கண்டதும் என்னுல் என் கண்களையே நம்ப முடியவில்லை. திகைப்புக் கடலில் திணறிக் கொண்டிருந்த நான் உனக்கு ஆறுதல் வார்த்தைகள் கூறுதிருந்தது உண்மையே. வசுமதி! உன்னைத் தவிர என் இதய பீடத்தில் வேறு எவரும் ஆட்சி செலுத்த முடியாது. ஆனல் நான் சொல்வதை நீ நம்பமாட்டாய். "காதலி கட்டழகை இழந்தவுடன் அவளைக் கண்ணெடுத்தும் பாராது ஓடிச்சென்ற கயவன்" என்று என்னை நீ பழிக்கலாம். என் நிலையில் இருந்திருந்தால் நீயும் அவ்வாறுதான் செய்திருப்பாய்!

முத்துச் சிப்பியைத் தொடுவதற்கும் அருவருப்பாக இருக்கிறது. அதனுள்ளிருக்கும் முத்து விலை மதிக்க முடியாதது. வசு! உன் உடல் முத்துச் சிப்பியைப் போலிருந்தாலும் உன் உள்ளம் அதனுள்ளிருக்கும் நன்முத்தைப் போலப் பரிசுத்தமானது. அந்தப் பரிசுத்தமான, அன்பு கனியும், காதல் ஊறும் உன் இதயத்தை நான் காதலிக்கிறேன். என்றும் காதலிப்பேன். உண்மையான காதலுக்கு உடலழகு வேண்டியதில்லை.

நீ இந்தக் கடிதத்தைப் படித்துக் கொண்டிருக்கும்போது என் முன் இரண்டு இரும்புக் கோல்கள் நெருப்பில் காய்ந்து கொண்டிருக்கின்றன. அழகென்றும் அவலட்சண மென்றும் உணர்த்திக் காட்டி உண்மையான காதலுக்கு ஊறு செய்யும் என் கண்கள் இன்னும் சற்று நேரத்தில் எரிந்து சாம்பலாகப் போகின்றன. உன் விகாரமான உருவத்தைக் கண்டு நான் ஓடிவரக் காரணமாயிருந்தது இந்தக் கண்களே யல்லவா? இக் கண்களால் உன்மேல் நான் கொண்டிருக்கும் காதலுக்குத் தீங்கு ஏற்பட்டுவிடும் என்று அஞ்சியே இவற்றை நான் இழக்கத் துணிகிறேன். வசுமதி! வெளித் தோற்றத்துக்கு நீ விகாரத்தின் இருப்பிடம். நான் கண் தெரியாத குருடன். ஆனல் நம்மிருவருடைய உள்ளங்கள் பேரழகு வாய்ந்தவை! இனி நம் காதல் வாழ்வுக்கு யாதொரு தடையுமில்லை யல்லவா? உதயசேகரன்."

இக் கடிதத்தைப் படித்து முடித்த வசுமதிக்கு உலகமே சுழல்வது போலிருந்தது. உதயசேகரனின் உண்மைக் காதலை யறிந்து கொண்டதும் அவள் உள்ளம் பச்சாத்தாபத்தினல் பாகாய் உருகியது. அவன் காதலைச் சந்தேகித்தது எத்தனை பெரிய தவறு என்பதை யறிந்து அவள் மனம் தாங்கொணு வேதனை யடைந்தது. தான் வைத்த காதற் பரீட்சை இப்படி விஷப் பரீட்சையாக முடியும் என்று அவள் கனவிலும் கருதவில்லை.

மறுகணம் தூசியைக் கிளப்பிக் கொண்டு ஒரு குதிரை வாயுவேகத்தில் உதயசேகரனின் மாளிகையை நோக்கிப் பறந்து கொண்டிருந்தது. அதன்மேல் அமர்ந்திருந்த வசுமதியின் இதயம் அதைவிட வேகமாக அடித்துக் கொண்டிருந்தது.

உதயசேகரனின் மாளிகையில் சென்று நின்றது அந்தக் குதிரை. அதன் மேலிருந்து கீழே குதித்த வசுமதி நடுங்கும் நெஞ்சுடன் கன வேகமாக உள்ளே நுழைந்தாள்.

உதயசேகரனிருந்த அறையில் அவனைத் தவிர வேறு எவருமில்லை. அவன்முன் இரண்டு இரும்புக் கோல்கள் நெருப்பில் காய்ந்து கொண்டிருந்தன. அவற்றைத் தன் கைகளில் எடுத்துக் கொண்ட அவன் ரத்தத்தைப் போலச் சிவந்து தணல் விட்டு எரிந்து கொண்டிருந்த அதன் கூரிய நுனிகளைத் தன் கண்களை நோக்கிக் கொண்டு சென்றன். அந்தச் சமயத்தில் "உதயா!" என்று அலறிய வண்ணம் அந்த அறையில் பிரவேசித்த வசுமதி, பாய்ந்து சென்று அவன் கைகளிலிருந்த இரும்புக் கோல்களைப் பிடுங்கித் தூரத்தில் எறிந்தாள். அப்படியே உதயசேகரன் பாதங்களில் விழுந்து கிடந்தாள். அவள் நெஞ்சிலிருந்து வெளியேறிய துக்கம் விம்மலாக அவ்வறையில் எதிரொலித்தது. அவள் கண்களிலிருந்து மல்கிய கண்ணீர் அவன் பாதங்களை நனைத்தது. உதயசேகரனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"உதயா! என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும். தங்கள் உண்மையான காதலை அறிந்து கொள்ளாமல் தங்களைக் கோரமான பரீட்சையில் ஆழ்த்தினேன். இத்தனை காலம் உங்களுடன் பழகியும் உங்கள் உண்மை உள்ளத்தை உணர்ந்து கொள்



மருமகள்:—இன்னொரு தடவை என் சமையலைக் கேளாறு சொன்னீர்களானல் அந்த மாமி விட்டு ஐயம் செய்தமாதிரி விஷத்தைக் குடித்துவிட்டு இறந்து விடுவேன்.

மாமியார்:—போ, போ, அசடே! விஷமென்ன, கிஷமென்ன? உன் சமையலை ஒரு தரம் சாப்பிட்டாலே போதாதா?

லாத என்னை நீங்கள் என்ன செய்தாலும் தகும்'' என்று விம்மலுக் கிடையே மொழிந்தாள் வசுமதி.

உதயேசுவரன் தன் பாதத்தைப் பற்றிக் கண்ணீர் வடித்துக் கொண்டிருந்த வசுமதியை இரு கரங்களாலும் தூக்கி நிறுத்தினான். அவளது முகத்தை நிமிர்த்திய அவன் இன்ப அதிர்ச்சியால் பிரமித்து நின்று விட்டான்.

ஆம், அதே செந்தாமரை முகம்; கயற் கண்கள்; செம்பவழம் போன்ற இதழ்கள்; முத்துக்களைப் பழிக்கும் பற்கள். அவள் அவனுடைய அருமை வசுமதியல்லவா! கோரமான உருவத்தை யடைந்திருந்த அவள் மீண்டும் எப்படித் தன் உண்மை அழகைப் பெற்றாள் என்று அவனுக்குப் புரியவில்லை. வியப்பும் ஆனந்தமும் மேலிட ''வசுமதி!'' என்றழைத்தான்.

மறுகணம் இன்ப அலைகள் கொந்தளித்துக் கொண்டிருந்த இரு பெருங் கடல்கள் ஒன்றுடன் ஒன்று இணைந்து சங்கமமாயின.

# படித்துப் பாருங்கள்!

## மழையும் புயலும்

தமிழ் எழுத்தாளர்களுள் முதல் எழுத்தாளரான வ. ரா. சோம்பிக் கிடக்கும் தமிழனைத் தட்டி எழுப்பும் வகையில் பேசினார், எழுதினார். எதற்கும் 'மசு, மசு' என்று உணர்ச்சியின்றிப் படுத்துக் கிடக்கும் தமிழனை அவருடைய நாவன்மையினாலும் பேனாவன்மையினாலும் வீறுகொண்டு எழச்செய்தார். அவர் நாவன்மையை இனிக் கேட்பதற்கு வழியில்லை. ஆனால் அவருடைய எழுத்து வன்மை இன்னும் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

'மழையும் புயலும்' என்ற இந்தக் கட்டுரைத் தொகுதி அதற்கு அத்தாட்சி. உதாரணத்துக்குக் கீழே ஒரு பகுதி தருகிறோம்.

''' என்ன அவசரம், ஸார்!' என்று யாரேனும் புத்திசாலியைப் போல் பேசினால் எனக்கு அடங்காத கோபம் வருகிறது. அற்ப ஆயுளிலே அவசரத்துக்குத் தேவை இல்லையா! நல்ல சந்தர்ப்பத்தில் செய்ய வேண்டிய காரியத்தைச் செய்யாமல் ஒத்திப் போட்டு விட்டால், அதன் கேடு, பின் சந்ததியார்களுக்குத் தாங்க முடியாத சுமையாகச் சுமந்து போய்விடுமே! பின் சந்ததியார்க்கு மட்டு மல்ல, நமக்கே, அது ஒரு பெரிய சுமையாகச் சுமந்து போகும்.''

இப்படி, 'சத்தியமாய்ச் சொல்லுகிறேன்!' 'காலம் வரனும்!' 'அதிருஷ்டம்!' 'என்ன உடம்புக்கு!' என்று நம் பேச்சில் கிடக்கும் வழக்குகளை வைத்துக் கொண்டே தமிழர்களின் மனச் சோர்வைக் கண்டித்து, புது உணர்ச்சியும் வாழ்க்கையில் நம்பிக்கையும் கொள்ளச் செய்கிறார்.

பிரசுரம்: நவயுகப் பிரசுராலயம், 135, பவளக்காரத் தெரு, சென்னை—1; விலை ரூ. 3

## The Madras Stock Exchange Official Year Book 1952

'தென்னை மரத்தில் தேள் கொட்டினால் புளிய மரத்திலே நெறி கட்டுமா' என்று கேட்பார்கள். இதற்குப் பதில் முன்பெல்லாம் எப்படிச் சொல்லி வந்தார்களோ என்னவோ! 1920க்குப் பின், 'ஓ! பேஷாகப் புளிய மரத்தில் நெறி கட்டும்' என்றே சொல்லி வரத் தொடங்கினார்கள். ஏனெனில் அந்த வருஷம்தான் தமிழ் நாட்டில் பங்கு மார்க்கெட் வியாபாரம் ஏற்பட்டது.

உலகத்தில் எந்தக் கோடியிலோ புயல் அடித்தால் இந்தக் கோடியில் பங்கு மார்க்கெட் உயரும். இங்கிலாந்தில் கன்சர்வடிவ் கட்சி மாறித் தொழிற்கட்சி பதவிக்கு வந்தால், இந்தியாவில் ஷேர் மார்க்கெட் சரியும். இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம் என்று மட்டும் கேட்டு விடாதீர்கள்! ஏனெனில் பங்கு மார்க்கெட்டின் இயல்பே சம்பந்த மில்லாமலிருப்பது தான்!

சென்னை பங்கு வியாபாரத் தரகர்களின் சங்கத்தார் இப்பொழுது ஒரு புஸ்தகம் வெளியிட்டிருக்கிறார்கள். அந்த சங்கத்துடன் இணைந்துள்ள 197 கம்பெனிகளின், பாங்குகள், எஸ்டேட்டுகள் ஆகியவற்றின் பங்குகள் எவ்வளவு, மூலதனம் எவ்வளவு? டைரக்டர்கள் யார்? 1952 வருஷத்திய வரவு செலவு கணக்கு விவரங்கள் யாவும் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். இவை தவிர இந்திய சர்க்கார், சென்னை, மைசூர், திருவாங்கூர், கொச்சி, ஆகிய சர்க்கார்களின் கடன் விவகாரங்கள், வருமான வரி, விவசாய வருமான வரி, ஆகியவற்றைப் பற்றிய விவரங்கள், இன்னும் பங்கு மார்க்கெட்டுக்குத் தேவையான செய்திகள் இந்தப் புஸ்தகத்தில் அடங்கியிருக்கின்றன.

கிடைக்குமிடம்: The Madras Stock Exchange Association Ltd. 322/23 Linghi chetty St. Madras—1. விலை: ரூ. 5.

## சங்கநூற் காட்சிகள்

புறநானூறு, அகநானூறு, ஐங்குறு நூறு, கலித்தொகை முதலிய சங்க நூல்களிலிருந்து ஆராய்ச்சி செய்து வீரம், காதல், இயற்கை வளம், இறை வணக்கம் ஆகியவை யெல்லாம் பழந்தமிழ் நாட்டில் எவ்வாறு இருந்தன என்பதை ஆசிரியர் கி. வா. ஜகந்நாதன் விளக்கமாகக் கூறுகிறார். அகத்துறைப் பொருளை அடிப்படையாகக் கொண்ட பண்டை நூலாகிய ஐங்குறு நூற்றிலிருந்து சில பாடல்களை யெடுத்து, தாமரைப் பொய்கை என்னும் நூல் விளக்குகிறது.

காதல் இல்லையானால் உலகம் இல்லை என்னும் தத்துவத்தை விளக்குகிறது பிடியும் களிறும் என்னும் நூல். கல்லுருகக் காயும் பாலை வனத்து வெய்யிலிலும் களிறு தன் காதல் பெண் யானையை மறந்து விடவில்லை. கிடைத்த தண்ணீரைத் தன் பிடிக்குக் கொடுத்துப் பிறகே தான் உண்டதாம் ஆண் யானை. பாலை வனத்து மானும் புறாவும்கூட இத்தகைய காதல் தியாகத்தைச் செய்கின்றன. இந்நூலுக்குக் கலித்தொகைப் பாடல்கள் கிளைகளாக அமைந்திருக்கின்றன.

பழந்தமிழ் நாட்டில் வீரதீரச் செயல்கள் மிகுந்திருந்தன. அத்துடன் போர்க்களத்தில் வீரத்துக்கு முன்பு அறம் இடம் பெற்றிருந்தது. அறத்தைப் புலவர்கள் அரசர்களுக்கு எடுத்துக் கூறினர்; அவர்கள் வீரச் சிறப்புக்களையும் பற்றிக் கூறினர். அவற்றை அறப்போர் என்னும் நூல் கூறுகிறது.

அறத்தை அறிந்து அதன் வழி நின்ற தமிழர்கள், அறவழியினின்றும் பிறழாத வகையில் பொருள் ஈட்டி இன்பம் துய்த்தார்கள். இயற்கையின் எழில் நலத்தையும், காதலின் உயர்வையும் பற்றிய அகநானூற்றுப் பாடல்கள் சிலவற்றை யெடுத்து இன்பமலை என்னும் நூலில் கூறப்பட்டிருக்கிறது.

பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை-18. விலை: ஒவ்வொன்றும் ரூ. 3.

# ஆரோக்கிய ரகசியம்

**வி. என். குமாரசாமி**

## 49. பேதி மருந்தே அவசியமில்லை!

வீட்டைக் கழுவிச் சுத்தம் செய்வது போல் இவ்வுடலிலுள்ள அழுக்குகள் நீங்கப் பேதி மருந்துகளை அருந்துகின்றனர். சரியாய்ப் பசியெடுக்கவில்லையென்றால், மலம் சரிவரக் கழியவில்லையென்றால் பேதிக்குச் சாப்பிடுகின்றனர். தலைவலித்தால் பேதிக்குச் சாப்பிட்டால் சரியாய்ப் போய் விடும் என்று சொல்லுவார்கள். வயிறு வலித்தால் "ஒரு பேதிக்குச் சாப்பிட வேண்டும். பேதிக்குச் சாப்பிட்டு நீண்ட நாளாய் விட்டது" என்பார்கள். இடுப்பு வலிக்கு, முதுகு வலிக்கு, கை வலித்தால், கால் வலித்தால் பேதிக்கு. இவ்வாறு எடுத்ததற்கெல்லாம் பேதிக்கு மருந்து சாப்பிடும் வழக்கம் நம்மில் அநேகருக்குண்டு.

இம்மட்டாவது எந்த வலி எடுத்தாலும் வயிறு தான் காரணம் என்று அதைச் சுத்தப்படுத்தினால் போதும் என்று உணர்ந்திருக்கிறார்களே என்று திருப்திப்பட வேண்டியதாயிருக்கிறது. ஆனால் இவர்கள் கையாளும் இந்தப் பேதிக்கு மருந்து சாப்பிடும் விதம் சரிதானா என்று பார்ப்போம்.

வீடுகளில் தினசரி குப்பை கூளங்கள் சேரத் தான் செய்யும். அதைச் சீராய்ப் பெருக்கிக் கழுவிச் சுத்தம் செய்ய வேண்டும். அப்படிச் செய்யும்போது மூலை முடுக்குகளில் பெட்டி, பீரோ இடுக்குகளில் குப்பைகள் சேராமல் அன்றாடம் சுத்தம் செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் வீடு சுத்தமாயும் ஆரோக்கியமாயும் இருக்கும். மூலை முடுக்குகளில் குப்பை சேரவிட்டு விட்டு சாதாரணமாய் வெளியில் மட்டும் சுத்தம் செய்தால் சில நாட்களில் மூலைகளில் அதிக குப்பைகள் சேர்ந்து அழுகும். அதில் தேள்கள், எலிகள் வாசம் செய்ய ஆரம்பிக்கும். அதனால் அவ்வீட்டிலுள்ள மனிதர்களுக்குத் தொல்லைகள் உண்டாகும்.

அதைப்போலவே, தினசரி மலங்கள் சேரும். அம்மலங்களை அன்றாடம் வெளியாக்கினால் உடல் சுகமாயிருக்கும். அன்றாட மலங்கள் சரிவர வெளியேறாமல் பாக்கி ஏற்பட்டால் பெருங் குடல்களின் திருப்பங்களிலும், குறுக்குக் குடலிலும் தேங்கி வாசம் செய்யும். நாம் தினசரி வெளிக்குப் போவது சாதாரணமாய் வெளிப் பார்வையில் வீட்டைப் பெருக்குவதைப் போலத்தான். மூலைகளில் எல்லாம் முடிச்சு முடிச்சாய் மலங்கள் தங்கும். அவைகளிலிருந்து கெட்ட ரசங்களைக் குடல் இழுத்து ரத்தத்துடன் கலப்பதனால், தேள் கடிகளைப் போன்ற வலிகளும், எலிகள் பிறாண்டுவதைப் போன்ற நோய்களும் உண்டாகின்றன. அப்பொழுதுதான் பேதிக்குச் சாப்பிட்டுப் பார்ப்போம் என்று தோன்றுகிறது. சிலர்தான் எவ்வளவோ முன் ஜாக்கிரதையாக உடலைக் காப்பாற்றிக் கொள்ளலாம் என்ற பாவனையில், மாதம் ஒரு தடவை என்றும், வாரத்திற்கு ஒரு தடவை என்றும் பேதிக்குச் சாப்பிடுகின்றவர்கள் இருக்கின்றார்கள். சிலர் தினமும் ஏதாவது ஒரு மலமிளக்கி மருந்தை உட்கொள்வார்கள்.

இவ்வாறு சாப்பிடுகின்ற சிலரை அணுகி ஆராய்ந்தால் இவர்களின் வாழ்க்கையின் வரலாறு தெரியவரும். சாப்பிட அரை அல்லது ஒரு மணி நேரத்துக்கு முன் மாத்திரையை விழுங்குவார்கள். "அது என்னத்துக்கு?" என்று கேட்டால் "பசி எடுக்க" என்பார்கள். பின் சாப்பிட உட்காரும் போது ஒரு சிறிய கிளாசில் ஒரு மருந்தை ஊற்றிக் குடிப்பார்கள். "இது எதற்கு?" என்றால் விட்டமின் பி. என்பார்கள். சரி. சாப்பிட்டு முடித்ததும் கை அலம்புவார். உடனே ஒரு மாத்திரையை விழுங்குவார். இது எதற்கோ! காரியாலயம் கிளம்புவார். அப்பொழுது இரண்டு சிறிய புட்டிகள் ஜேபியில் எடுத்துப் போட்டுக் கொள்வார். நாம் கேட்காமலேயே வேலை செய்யும்போது தலை வலிக்கும். அதற்காகக் கைவசம் வைத்திருப்பது வழக்கம். மற்றொன்று இடுப்பு வலி, முதுகு வலி, வயிற்று வலி எடுத்தால் சாப்பிட என்பார். எவ்வளவு முன் ஜாக்கிரதை மருந்துகள்! சரி. மாலை வீடு திரும்புவார். இரவு சாப்பாட்டுக்கும் பின் காலையில் நடந்த மாதிரி மூன்றுவித மருந்துப் பிரயோகம் முன் பின், இடையில் நடக்கும். பிறகு தூங்கப் போகும் போது ஒரு மருந்து, பின் தூங்கி எழுந்தவுடன் வெளிக்குப் போக வழக்கப்படி மருந்தைக் கரைத்துக் குடிப்பார்.

இம்மாதிரி பசியெடுக்க, அப்படி பசித்துச் சாப்பிட்டால் அதில் ஜீவசத்து இல்லையென்று பலவித சத்து மருந்துகள். பின் அதை ஜீரணிக்க மருந்து. ஜீரணித்ததை வெளியில் தள்ள மருந்து. தலை வலிக்கு மருந்து. இடுப்பு வலிக்கு மருந்து. முதுகு வலிக்கு மருந்து. வயிற்று வலிக்கு மருந்து. இத்தனையும் முடித்துக் கடைசியில் தூங்க மருந்து. இப்படியே வாழ்நாளை மருந்துகளிலேயே ஓட்டுபவர் பலர். கடைசியில் மீளாத் தூக்கமும் சீக்கிரமாக இம் மருந்தின் துணை கொண்டே முடிப்பார் என்பதும் நிச்சயம்.

என்னே, மாந்தர் நிலை! கிடைத்தற்கரிய இம் மானிட உடலைப் பெற்று ஒரு சிறு நோய் வராமல் தடுக்கக்கூட தன்னில் ஆற்றல் இல்லையெனில்



*பெஞ்சுமீது உட்கார்ந்திருப்பவர் :— உம்மிடம் ஒரு விஷயம் அவசரமாகச் சொல்லுவதற்கு இன்று காலை உம் ஆபீசுக்கு டெலிபோன் செய்தேன்.*

*நின்று கொண்டிருப்பவர்:—அதனால் என்ன? நாளைக்கு டெலிபோன் செய்யுங்களேன்.*



மனைவி (காப்பி தயாரித்துக் கொண்டே):— நமக்குக் கல்யாணமான புதிதில் நீங்கள் எப்படி எல்லாம் இருந்தீர்கள் என்று நினைத்துப் பாருங்கள்! சாயந்திரம் வந்தவுடன் என்னைக் கூப்பிட்டு உட்கார வைத்துக் கொண்டு விடவே மாட்டீர்கள்.

கணவன் (மிகவும் நிதானமாக):— ஓகோ! அதைச் சொல்லுகிறாயா? நீ ஹார்மோனியத்தை எடுத்து வைத்துக் கொள்வாயோ என்று பயந்து உன் கையைப் பிடித்துக் கொள்வேன். இப்போதுதான் நம் வீட்டில் ஹார்மோனியம் இல்லையே!

---

உலகில் இவர்கள் என்னத்தைத் தான் சாதிக்கப் போகிறார்களோ தெரியவில்லை.

சிலர் மருந்து சாப்பிடுவதில்லை எனச் சொல்லி, தினமும் எனிமா (ஆசன வழியாய் நீர் ஏற்றல்) எடுத்துக் கொள்பவர்களும் உண்டு. அதுவும் பெருங்குடலில் இறங்கும் குடல் வரைக்கும் செல்லும். குறுக்குக் குடலிலும் சிறிது செல்லும். மற்ற இடங்களில் இருப்பது எப்படிக் கழிவது! இப்படி தினசரி எனிமா எடுப்பதால் பலவீனம் தான் உண்டாகும்.

பேதி மருந்துகளின் தன்மை என்ன! அது எவ்வாறு வேலை செய்கிறது! அப்படி அடிக்கடி செய்ய விடுவது சரிதானா!

மெதுவாய் எல்லா பேதி மருந்துகளும் குடல்களைத் தூண்டிவிட்டு, ரசத்தைக் கக்கச் செய்து அயற்சியை உண்டாக்கும் தன்மை உடையது. முன்பெல்லாம் பேதிக்குச் சாப்பிடுவது என்றால் விளக்கெண்ணெய் சாப்பிடுவது என்று தான் அர்த்தம். காட்டு வைத்தியரிடம் சென்றால் சுத்தம் செய்த நேர்வாளத்தைக் கொடுப்பார். அரை குறைப் பண்டிதர்கள் இம்முறை சரியாய் செய்யத் தெரியாமல் எத்தனையோ பேர்களைப் பிரயாணப் படுத்தியுமிருக்கின்றனர். அதனால் அவர்களிடம் போவதற்குப் பயம். விளக்கெண்ணெய் என்றாலே விளக்கெண்ணெய் சாப்பிட்டவர்கள் முகத்தைப் போல வைத்துக் கொண்டு விடுகிறார்கள். அதே விளக்கெண்ணெயும் நேர்வாளமும் உருத் தெரியாமல் பல மிட்டாய்களாகவும் சாக்லெட்டுகளாகவும், மாத்திரைகளாகவும், ஹல்வாக்களாகவும் வர ஆரம்பித்ததும் ஜனங்கள் மிகச் சுலபமாய் இவைகளைச் சாப்பிட்டுக் குடல்களை மேலும் கெடுத்துக் கொள்கின்றனர். இதைத் தவிர உப்பு நீருகள் வேறு உண்டு.

நம்முடைய உஷ்ண தேசத்திற்கு விளக்கெண்ணெய் சாப்பிட்டாலாவது பரவாயில்லை எனலாம். அது குடல்களைத் தூண்டினாலும் பின் அதற்குச் சாந்தி செய்யும் குணமும் உண்டு. மற்ற சகல மருந்துகளும் குடல்களைத் தூண்டிவிட்டு அதன் சுவர்களிலுள்ள மெல்லிய சவ்வுகளைப் பலவீனப் படுத்தி, உறுத்தலை உண்டாக்கும். இவ்வாறு அடிக்கடி செய்தால் குடல்கள் அதன் சக்தி இழந்து இன்னமும் மலச் சிக்கலை அதிகமாய்த் தான் உண்டாக்கும். என்ன தான் பேதி மருந்துகள் சாப்பிட்டாலும் அது மடிப்புகள் மூலைகளிலுள்ள பழைய மலங்களையும் அகற்றாது. சிலருக்குக் குறுக்குக் குடல் தொய்ந்து விட்டிருக்கும். அதிலுள்ள சுமையைக் கரைப்பது கஷ்டம்.

எனவே, குடலைச் சுத்தமாக்கும் சரியான மார்க்கம் இந்த யோக ஆசனங்களில்தான் பூர்ணமாய் அமைந் திருக்கிறது. அதிலும் உட்டியாணா, நௌலியெனும் கிரியைகள் மலபந்தத்திற்குச் சரியான மருந்தாகும். மாற்றாகும். இதைவிட சிரேஷ்டமான - உத்தமமான கிரியைகள் உலகத்திலேயே யாரும் கண்டு பிடித்ததுமில்லை. இனிக் கண்டு பிடிக்கப் போவதுமில்லை.

என்னே அற்புதமான சாதனைகள்! பல்லாயிர ஆண்டுகளுக்கு முன்பே மனிதனின் குடல்கள் அவயவங்கள், அற்புதக் கோணங்கள் இவைகளின் ரகஸ்யத்தை அறிந்து, மாறா இளமையுடன் நோய்களற்று ஆரோக்கியமாய், ஆனந்தமாய் நீண்டநாள் வாழும் வகையை நம் முன்னோர்கள் வரையறுத் திருக்கிறார்கள் என்றால் அவர்களுடைய ஞானம் எத்தகையது! எவ்வளவு மேன்மை யுடையது! நினைக்க நினைக்க, சிந்திக்க சிந்திக்க உடல் சிலிர்க்கின்றது. உள்ளம் பெருமிதம் கொள்ளுகிறது. இவைகளெல்லாம் நமது கலைகள், நமது செல்வங்கள், நமது வற்றாப் பொக்கிஷங்கள். எல்லாம் நமக்குச் சொந்தம் எனக் கொள்ளும்போது கர்வம் உச்சந் தலைக்கு ஏறுகிறது. அற்புதமான சிருஷ்டிகள் இவ்வுட்டியாணாவும் நௌலியும், கைகளைக் கொண்டு வயிற்று உறுப்புக்களைக் கசக்கினாலும் அவ்வளவு சுத்தம் செய்ய முடியாது. கைகளினால் என்ன தான் மாலிஷ் செய்தாலும் மாளாது. ஒருகால் கைகளை உள்ளே விட்டு குடல்களைக் கசக்கிச் சுத்தம் செய்யும்படியான ஒரு சௌகரியம் மனிதனுக்கு இருக்குமானாலும் அதுவும் குறைவுடையதாய்த்தான் இருக்கும். அவ்வளவு தூரம் விஞ்ஞான முறையாக சாஸ்திர ரீதியாக இயற்கையாய்க் குடல்களைச் சுத்தம் செய்யும் முறை இந்த உட்டியாணா நௌலி ஆகிய இரு ஆசனங்களில் தான் அமைந்திருக்கிறது.

நான் சிறுவனாக இருக்கும்போது பாட்டிமார்கள் சொல்லுவார்கள், "ஒரு சாமியார் இருந்தார். தினமும் ஆற்றின் கரைக்குச் சென்று குடலை எடுத்துச் சுத்தம் செய்துவிட்டுப் பிறகு பழையபடி வைத்துக் கொள்வார்" என்பதாக. நான் வெகு ஆச்சரியமாய்க் கேட்பேன். எங்காவது நதிக்கரைகளில் சென்றால் அம்மாதிரி யாராவது சாமியார்கள் செய்கிறார்களா என்று பார்ப்பேன். ஒருத்தரும் தென்படவில்லை. சற்று சிந்தனைச் சக்தி வந்ததும் "இவைகள் எல்லாம் கட்டுக் கதை. எங்காவது குடலை எடுப்பதாவது சுத்தம் செய்வதாவது" என்று தீர்மானித்தேன். பின் நானே இவ்வுட்டியாணா செய்யும்போது தான் எனக்கே அதன் அர்த்தம் புரிந்தது.

உட்டியாணா செய்யும்போது யாராவது பார்த்தால் "வயிற்றில் குடல்கள் இருக்கிறதா! எங்கு போயிற்று! இவர் குடல்களையும் மற்ற சரல்களையும் உறுப்புகளையும் எங்கோ வைத்து விட்டு வந்திருக்கிறாரா" என்று எண்ணத் தோன்றும். அப்படிக் கண்மூடிக் கண் திறப்பதற்குள் வயிற்று உறுப்புகள் மாயமாய் மறையும் மாயை இந்த உட்டியாணாவுக்குத்தான் உண்டு.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

வாசனை இல்லை





கசப்பில்லை







மிகச் சிறந்தது - இது ஒரு ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் தயாரிப்பு

SOM 193

Regd. No. M. 4392
Registered as a newspaper in Ceylon